67 சூலமங்கை என்பது (சூலமங்கலம்)

பசுபதி கோவில் ஸ்டேஷனின் தெற்கு $\frac{1}{4}$-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கிருத்திவாஸேசர், அலங்காரி அம்மை, சூலபாணி பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனார் பாடிய திருப்பதிக வைப்புஸ்தலம்.

68 நந்தி மங்கை என்பது (நல்லுச்சேரி)

பசுபதி கோவில் ஸ்டேஷனுக்கு மேற்கு $\frac{1}{2}$-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஜம்புநாதர், அகிலாண்டவல்லி அம்மை, நந்தி பூஜித்தது.

69 அரையமங்கை என்பது (வையச்சேரி அரிமங்கை.)

பசுபதி கோவில் ஸ்டேஷனுக்கு மேற்கு $\frac{1}{2}$-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை. திருநாவுக்கரசு நாயனார் பாடிய வைப்புஸ்தலம்.

70 பசுமங்கை என்பது (தண்டங்குறை)

பசுபதி கோவில் ஸ்டேஷனின் வடமேற்கு $1\frac{1}{2}$-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அக்கிரகாரக் கோவில், கைலாசபசுபதீசர், லோகநாயகி, சுந்தரமூர்த்தி நாயனார் திருநாட்டுத்தொகையில் பாடிய திருப்பதிக வைப்புஸ்தலம்.

71 தாழமங்கை என்பது (ஐயம்பேட்டை.)

கீழக்கோவில், சிவஸ்தலம், சிவன், உமை, புராணம் உள்ளது. ஐயம்பேட்டை ரெயில் ஸ்டேஷன்.

72 திருச்சக்கராப்பள்ளி என்பது (சக்கரமங்கை.)

பசுபதி கோவிலின் கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சக்கரவாகேசர், அல்லியங்கோதை, காகதீர்த்தம், துருக்கர் பிரபலம்.

சப்த மங்கைகளிலிது கடைசி ஸ்தலம். இராமாயணம் சுந்தர காண்டத்தில் 38-வது சருக்கத்தில் சீதை அனுமாருக் கடையாளஞ் சொன்னபடி, இந்திர குமாரனாகிய ஜயந்தன் காகபக்ஷியாக வனவாசத்தில் சீதை மடியில் ஸ்ரீ ராமர் படுத்திருக்கும் போது கெட்ட எண்ணத்தோடு சீதையின் ஸ்தனத்தில் கொத்தியதால் இரத்தம் பீரிட, ராமர் விழித்துக் கோபங்கொண்டு ஒரு தர்ப்பைப் புல்லை பிரும்மாஸ்திரமாக உச்சரித்துவிட அது துரத்தியதால் பயந்து, ஜயந்தன், தாய், தகப்பன், பிரும்மா, முதலிய எல்லாத் தேவர்களிடமும், முறையிட்டும் விடாமல் கொல்ல எத்தனிக்க ஜயந்தன் ராமரிடம் வந்து அபயம் கேட்டதால் அவர் மிகக் கருணையுடன் அவனொரு கண்ணை மட்டும் அஸ்திரத்துக்குக் கொடுத்து, மன்னித்தும், பொய், களவு, விபசாரம், மூன்றும் மகாபாதகமானதால் அவன் காகாசுரனாகி பக்ஷிபுருவுடன் பாப நிவர்த்திக்கு இதில் பூஜித்ததாக புராணம் உள்ளது. இதில் சப்த ஸ்தான உற்சவம் முக்கியம். ஸ்ரீ ராமர் திருமூர்த்தி யம்சமாக பக்தியையும் ஞானத்தையும் பூவுலகிலுபதேசிக்க அவதரித்ததால் கருணை மூர்த்தி. வால்மீகி இராமாயணம் 24000-கிரந்தமும் காயத்திரிரின் 24-எழுத்துகள் முதலிலுள்ளது. சப்த காண்டமும் சப்த வியாகிருதிகள். வால்மீகி இராமாயணத்தை குசலவர்களுக்கு வேதத்தைப் போல உபதேசித்தாரே தவிர புஸ்தகமாகச் சேர்த்து எழுதவில்லை. ஸ்ரீ ராமர், பார்வதி அம்சமுண்டு. மகாவிஷ்ணுவும் இதில் பூஜித்து சக்கரம் பெற்றதால் சக்கராப்பள்ளி யென்று பெயர். திருஞாந சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1.

73 பண்டார வாடை:—திருச்சக்கராப்பள்ளிக்கு கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மத்ஸ்ய புரீசர், ஜகதாம்பாள். பண்டாரவாடை ரெயில் ஸ்டேஷன்.

74 வீரமாங்குடி:—திருச்சக்கராப்பள்ளியின் தெற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கைலாச நாதர், ஆநந்தவல்லி, வெட்டாறு. மழவனாட்டுப் பிருகச் சரணப் பிராமணர்களால் பிரபலம். புராணமுள்ளது.

75 மெரட்டூர்:—திருச்சக்கராப்பள்ளியின் தெற்கு 5-மைலி லுள்ளது. சிவஸ்தலம், உன்னதபுரீசர், சிவப்பிரியாம்பாள், வெட்டாறு, சோழ ராஜனால் கட்டிய 500-வீடுகளுள்ள அக் கிரகாரமும் புராணமு முள்ளது. சோழ ராஜனால் தானஞ் செய்யப்பட்டது.

76 நூற்றெட்டு சிவாலயம் என்பது (பாபநாசம்.)

பண்டாரவாடையின் கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவ ஸ்தலம், இராமலிங்கேசர், பருவத ராஜ புத்திரி, 108-லிங் கங்களுண்டு, இராம தீர்த்தம். இராமர் பூஜித்ததாக புரா ணம் உள்ளது. திருநாவுக்கரசு நாயனாரின் திருப்பதிக வைப் புத் தாண்டகத்திலுள்ளது.

77 பாபநாசம்:—பண்டாரவாடையின் கிழக்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், பாபநாச மூர்த்தி, பங்கஜவல்லி, புண்டரீக புஷ்கரணி, ஜயங்கொண்ட சோழ ராஜனுக்குப் பிர த்தியக்ஷம். ஸ்ரீராமர் பாபத்தை தீர்த்ததாக புராணம் உள் ளது. இதில் குடமுருட்டி நதி மூன்றாகப் பிரிகிறது. பாப நாசம் ரெயில் ஸ்டேஷன்.

78 திருப்பாலைத்துறை:—பாபநாசத்தின் கிழக்கு 1-மைலி லுள்ளது. சிவஸ்தலம், பாலைவன நாதர், தவளாம்பாள், பிர் ம்ம தீர்த்தம், பாலைமரம், பிர்மா பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ருஷிகளாலனுப்பிய புலியை உரித்த ஸ்தலம்.

79 திருக்கருகாவூர் என்பது (திருக்களாவூர்.)

பாபநாசத்தின் தெற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், முல்லைவனேசர், கரும்பனவல்லி, அற்புத தீர்த்தம், அம்பாளொரு ஆதாரவற்ற பக்தி மாதாகிய கெற்பிணிக்கு மருத்துவஞ் செய்து தாயையும் சிசுவையும் காத்தவள், சந்திரன் பூஜித்தது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆ பதிகம்-2. விஷ்ணு கோவிலு முண்டு.

80 திருநல்லூர்:—பாபநாசத்தின் கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கலியாண சுந்தரேசர், கிரிசுந்தரியம்மை, சப்தசாகரம், சுந்தர தீர்த்தம். பாண்டவர்கள், திருமால், அஷ்ட வசுக்கள் பூஜித்தது. அகஸ்தியருக்குப் பார்வதி கலியாணக் காக்ஷியை காட்டின இடம், பிருங்கிரிஷி வண்டுருபியாய் பரமசிவனை மட்டும் பிரதக்ஷணஞ் செய்ததால் அம்பாள் அவர் தேக சக்தியை ஆகருஷித்த வுடன் சிவனருளால் மூன்றாவது காலுண்டானது. அமர்நீதி நாயனார் முக்தி ஸ்தலம், திருநாவுக்கரசு நாயனார் திருச்சத்தி முத்தத்தில் சிவக்கொழுந்தீசரை தலையில் சூட்டும்படி பாடிவேண்ட, நல்லூரில் சூட்டுகிறேனென்று சொன்னபடி திருவடி சூட்டினவர். திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-3. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. ஆ பதிகம்-5.

81 திருவெண்ணி:—தஞ்சாவூரின் தென் கிழக்கு 10-மைலிலுள்ளது. சிவஸ்தலம், வெண்ணி நாயகேசர், சுந்தராம்பாள், சிவகங்கை, தக்ஷாத்ரேயர் பூஜித்தது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. ஆ பதிகம்-3. திருவெண்ணி ரெயில் ஸ்டேஷன்.

82 விஷ்ணு திருவெண்ணி:—விஷ்ணுஸ்தலம் ஜகந்நாதர், லக்ஷ்மி, புராணஸ்தலம்.

83 வடகூர்:—விஷ்ணுஸ்தலம். தஞ்சாவூரின் கிழக்கு 12-மைலில் வெண்ணிஸ்டேஷன் சமீபம். ஸ்ரீராமர், ஸீதை, லக்ஷ்மணர், புராணஸ்தலம்.

84 கந்தருவக் கோட்டை என்பது (கண்டரகோட்டை.) தஞ்சாவூரின் தென்மேற்கு 18-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஆபத்சகாயர், அமிராவதி, கந்தருவன் பூஜித்தது.

85 பெருங்களூர்:—கண்டரக் கோட்டையின் தென்மேற்கு 10-மயிலிலுள்ளது. சிவஸ்தலம், வம்சோத்தாரகர், மங்களாம்பாள்.

86 ஆரணிபடடி வைத்திகோவில்:—கண்டரக் கோட்டையின் தென்மேற்கு 11-மயிலில் உள்ளது. சிவஸ்தலம், வயித்தீசர், பிருதாகம்பாள், பிரம்மா பூசித்தது.

87 கோளவாய்ப்பட்டி:—கண்டரக் கோட்டையின் தென்மேற்கு 13-மயிலில் உள்ளது. சிவஸ்தலம், அகத்தியேசர், பிருகதப்பாள், அகஸ்தியமகரிஷி பூசித்தது.

88 திருவரங்குளம்:—கண்டரக்கோட்டையின் தென்மேற்கு 14-மயிலில் உள்ளது. சிவஸ்தலம், ஹரதீர்த்தேசர், பிருகந்நாயகி, முனீஸ்வரர் காவலுள்ளது, க்ஷேத்திரபாலகர் முக்கியம் புராணஸ்தலம்.

89 புதுக்கோட்டை:—கண்டரக்கோட்டையின் தென்மேற்கில் 19-மயிலில் உள்ளது. சிவஸ்தலம், சாந்தநாதர், பிருகதம்பாள், சிவகங்கை சுயராஜாங்கமுள்ளது.

90 திருக்கோகர்ணம்:—புதுக்கோட்டையின் தென்மேற்கு 1-மயிலில் உள்ளது. சிவஸ்தலம், கோகர்னேசர், மங்களாம்பாள், பசுமலை, மலைச்சுனை, வில்வமரம், பசு தன்காதால் நீர்த்தமெடுத்து பக்தியுடன் பூசித்ததால் கோகர்ண லிங்க மென்று பெயர்.

91 பேறையூர்:—புதுக்கோட்டையின் தென்மேற்கு 5-மயிலில் உள்ளது. சிவஸ்தலம், தாளவனேசர், பிருகதம்பாள், இந்திரதீர்த்தம், பனைமரம், இந்திரன் பூசித்தது.

92 விராச்சிலை:—புதுக்கோட்டையின் தென்மேற்கு 8-மயிலில் உள்ளது. சிவஸ்தலம் விசுவநாதர், விசாலாக்ஷி, இதின் வடக்கு குமரமலையில் சுப்பிரமணியர் முக்கியம்.

93 திருமெய்யம்:—புதுக்கோட்டையின் தெற்கு 11-மயிலிலுள்ளது. சிவஸ்தலம், சத்தியகிரீசர் ராஜராஜேஸ்வரி, சத்திய தீர்த்தம்.

94 திருமெய்யம்:—விஸ்ணுஸ்தலம், சத்தியமூர்த்தி, உய்யவந்தாள், கதம்ப புஷ்கரணி சத்தியகிரிபடிவாரம், பலாமரம். சத்தியதேவதைகளுக்கும், அர்ச்சுனனுக்கும் பிரத்தியக்ஷயம் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம், பாண்டியநாட்டெல்லையில் உள்ளது.

93 கடியாப்பட்டி,—புதுக்கோட்டையின் தென் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, வைசியர்கள் தருமபாடசாலையும், ஐஸ்கூலும் முக்கியம்.

96 அரிமளம்:—புதுக்கோட்டையின் தென்கிழக்கு 12 மையில் உள்ளது. சிவஸ்தலம், சிவன். உமை. இங்கு விஷ்ணு ஆலயமும், பாடசாலையும் முக்கியம்.

97 குமோமலை:—புதுக்கோட்டையின் மேற்கு 10-மைலில் உள்ளது. சிகாகிரீசர், அகிலாண்டவல்லி, சிகாகிரி, சிவபக்தியுள்ள குருக்கள் இராத்திரி அர்தஜாமத்தின் பிறகு தரிசனத்துக்கு வந்த சோழராஜனுக்கு தாசியின் தலையிலணிந்திருந்த புஷ்பத்தை வாங்கி விபூதிபிரசாதத்துடன் சேர்த்துக்கொடுத்துக் கோவிலைச்சாத்திப்பூட்டினபிறகு ராஜன்கவனித்து பூவில் மயிரிருக்கக் காரண மென்னவென்று கேட்க அவர் சுவாமிக்கு

குடுமியுண்டென்றும், காலையில் தரிசிக்கலாமென்றும் சொல்லி இராத்திரியில் சிவனை பக்தியுடன் பஜித்ததால் சிவபிரான் தமக்கு குடுமியை உண்டாக்கிக் காலையில் சோழராஜனுக்குத் தரிசனங்கொடுத்தவர், விஷ்ணு கோவிலுண்டு.

98 தேனிமலை:—புதுக்கோட்டையின் மேற்கு 16-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, கந்தர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு தினந்தோறும் தேனடையிலிருந்து தேன் வந்து அபிஷேகம் நடப்பது மிகவும் முக்கியம்.

99 விராலிமலை:—திரிசிரபுரத்தின் தெற்கு 18-மைலிலுள்ளது. சிவஸ்தலம், சிவன். உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, கந்ததீர்த்தம், மலைமேல் கோழியைக் கொடியாக அடைந்த கந்தர். நக்கிரதேவர் திருமுருகாற்றுப் படையில் குன்றுதோறாடல் என்று பாடியது.

கோவில்பட்டி.—விராலிமலையின் தெற்கு 10-மைலில் உள்ளது. சிவஸதலம். சோழேசுவரர், குந்தளாம்பாள், சோழராஜன் பூசித்தது.

101 வழநாடு:—விராலிமலையின் தெற்கு 13-மைலிலுள்ளது சிவஸ்தலம். சிவன், உமை, சிவதீர்த்தம.

102 மருங்காபுரம்:—விராலிமலையின் தென்மேற்கு 15-மைலில்உள்ளது. சிவஸ்தலம். சிவன்,'உமை, (ஜமீன்தார்பிரபலம்.)

103 மாத்தூர்:—திருச்சக்கராப்பள்ளியின் மேற்கு 2-மைலிலுள்ளது. திட்டை ஸ்டேஷன் சமீபம். சிவஸ்தலம். சிவன், உமை, திருநாவுக்கரசுநாயனர் பாவநாசத் திருப்பதிகத்தில் உள்ள வைப்புஸ்தலம்,

முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

# இரண்டாம் அத்தியாயம்.

## பாண்டிய நாடு.

### துவாத சாந்த ஸ்தலம். (ஹாலாஸ்யம்)

1 தென் மதுரை:—ஜங்ஷன் ஸ்டேஷன். சிவஸ்தலம், சுந்தரேசர், மீனாக்ஷி அம்மன், பொற்றாமரை, ஸப்த ஸாகரம், கிருதமாலாந் நதி, மீன தீர்த்தம், வைகை நதி, கடம்ப மரம், பட்டமார் 8000 பிராமணர்கள் பூஜிக்கும் ஸ்தலம். புராணத்தில் அடியில் கண்ட 64 லீலைகளுண்டு.

1-வது லீலை இந்திரன் தன் சபைக்கு வந்த குருவை வணங்காததால் அவர் மறைய துவஷ்டாவின் புத்திரனை விசுவரூபனை குருவாக்கி ஒரு யாகஞ் செய்யும்போது, அவர் தன் மாமனாகிய அசுரர்களுக்கும், மறைவாக அவிர்ப்பாக மளித்ததால் இந்திரன் கோபித்து வச்சிராயுதத்தா லடிக்க, விசுவரூபன் அமிருத முண்ட பிரபாவத்தால் பக்ஷி ரூபத்துடன் செல்ல, அதனால் தனக்குண்டான பாபத்தை இந்திரன் நாலாக்கி ஸ்திரீகளிடம் ஒரு பாகம் மாத விடாயாகவும், மரங்களிடம் பிசினாகவும், பூமியினிடம் உவர் மண்ணாகவும், ஜலத்தினிடம் நுரையாகவும் கழித்தார். துவஷ்டா கோப முற்று விருத்திராசுரனை யுண்டாக்கி இந்திரனிடம் சண்டைக் கனுப்ப இந்திரனும் அநேக நாள் சண்டை செய்தும் வெல்ல முடியாமல் திகைக்க விருத்திரன் நிராயுதனாய் தவஞ் செய்யும் சமயத்தில் இந்திரன் ததீசி மகாரிஷியின் எலும்பால் செய்த புது வச்சிராயுதத்தால் விருத்திராசுரனைக் கொன்ற பழியை தீர்த்தது.

2-வது லீலை துர்வாசராலளித்த சிவநிர்மாலிய புஷ்பத்தைக் காலால் தேய்த்ததால், ஐயிராவதத்தைக் காட்டானையாக அவர் சபிக்க, ஐயிராவதம் அநேக ஸ்தலங்களிலும், கடைசியில் இந்த ஸ்தலத்திலும் பூஜித்து சாபம் இங்கு தீர்ந்தது.

3-வது லீலை குலசேகர பாண்டியன் காட்டை வெட்டி மதுரை நகர முண்டாக்கியது.

4-வது லீலை மலையத்துவஜ பாண்டியன் வேள்வியினால் மீனாக்ஷி பிறந்து அரசாண்டு திக்கு விஜயஞ் செய்யும் போது சிவனைக் காணவே, ஒரு ஸ்தனம் மறைந்தது.

5-வது லீலை பரமசிவன் ஸமஸ்த தேவர்களுடன் மதுரை வந்து மீனாக்ஷியைத் திருமணஞ் கொண்டு முடி பூண்டு சுந்தர பாண்டியனாக மதுரையிலரசாண்டது.

6-வது லீலை வியாக்கிரபாத ரிஷியும், ஆதிசேஷனாகிய பதஞ்சலியும் சிதம்பர தரிசனஞ் செய்ய வேண்டுமென்றபடி வெள்ளியம்பலத்தில் நடனஞ் செய்தது.

7-வது லீலை குண்டோதரனுக்கு அடங்காப் பசியை உண்டாக்கிச் சகலமும் உண்ட பின்னும் அன்ன மலையைக் கொடுத்து பசியை தீர்த்தது.

8-வது லீலை குண்டோதர பூத கணத்தின் தாகந் தீர ஆகாச கங்கையை வைகை நதியாக அழைத்தது.

9-வது லீலை மாமியார் காஞ்சன மாலைக்காக எழுகடலழைத்தது.

10-வது லீலை சுவர்க்கத்தி லிந்திரனுடனிருந்த மலயத்துவஜனையு மழைத்து காஞ்சன மாலையுடன் கைலாசத்துக் கனுப்பினது.

11-வது லீலை மீனாக்ஷிக்கு சுப்பிரமணியர் உக்கிர பாண்டியனாக அவதாரஞ் செய்தது.

12-வது லீலை உக்கிரன் தன் பிதாவிடம் வளை, தடி, வேலாயுதம் செண்டுகள் பெற்றது.

13-வது லீலை இந்திர னேவுதலால் மதுரையை அழிக்க வந்த சமுத்திர ராஜன் பேரில் உக்கிரன் வேலாயுதம் விடக் கடல் வற்றியது

14-வது லீலை அகஸ்தியரால் உக்கிரனுக்குச் சொன்ன சோமவார விரத மகத்துவமும், முன் விஷ்ணு, பிர்ம்மா, இந்திரனு மனுஷ்டித்து வரம் பெற்றதும், இந்திர னுக்கிரனுடன் சண்டைக்கு வர மகுட பங்க மடைந்ததும்.

15-வது லீலை மகாமேருவை உக்கிரன் செண்டாலடித்து நிதி யெடுத்து வந்தது.

16-வது லீலை கண்ணுவர் முதலிய ரிஷிகளுக்கு சுந்தரர் வேதப் பொருளை உபதேசித்தது, பிராகாரத்தில் வாயு மூலையில் உள்ள மூர்த்தி.

17-வது லீலை உக்கிரன் மகன் வீர பாண்டியன், அவன் மகன் அபிஷேக பாண்டியன், கிரீடத்துக்கு சுந்தரர் இரத்தினம் விற்றதும், வலாசுர னிந்திரன் யாகத்தில் கட்டுப்பட்டு இரத்தின மானதும் உரைக்கப்பட்டது.

18-வது லீலை வருணன் மதுரையை யழிக்கக் கடலை யேவ சுவாமி சடையிலுள்ள நாலு மேகங்களால் அதை குடிக்கச் செய்தது.

19-வது லீலை வருணன் ஸப்த மேகங்களை அனுப்பிப் பெருமழை பொழிய, நாலு மேகங்களால் மதுரையை நான் மாடக் கூடலாகச் செய்ததும், வருணன் வணங்கியதா லவன் வயிற்று நோயையுந் தீர்த்தது.

20-வது லீலை எல்லாம் வல்ல சித்தராய் சுவாமி வீதியில் விளையாட, பாண்டியனழைத்தும் போகாதது.

21-வது லீலை அபிஷேக பாண்டியன் கையிலிருந்த கரும்பைச் சித்தர் மகரச் சங்க்ராந்தி யன்று கல் யானையைத் தின்னச் சொன்னது.

22-வது லீலை விக்கிரம பாண்டியன் ஆண்ட காலத்தில் சமணர்கள் பெரிய யானையை மதுரையை அழிக்கும்படி விட சுந்தரேசர் நரசிம்மாஸ்திரம்விட்டு அடிக்க, யானை மலையானது.

23-வது லீலை கௌரி என்னும் பெண்ணுக்கு விருத்தரும் பாலரும் குமாருமாகத் தரிசனந் தந்து ரிஷபாரூடராய் முக்தியுஞ் சேர்ப்பித்தது.

24-வது லீலை விக்கிரன் மகன் ராஜ சேகர பாண்டியனுடைய பக்திக்காக கால் மாறி யாடினது.

25-வது லீலை குலோத்துங்கன் தன் 10000 பத்தினிகளிடம் 60000 பிள்ளைகளைப் பெற்று அவர்களில் மூத்தவனை அனந்தகுண பாண்டியனாண்ட நாளில் மரத்திலிருந்து விழுந்த அப்பால் பிராமண ஸ்திரீ உயிர்விட அங்கிருந்த வேடனைப் பழிசொல்ல, சுவாமி யருளால் இராத்திரி கலியாணமானச் செட்டிப் பிள்ளையை பசுப் பாய்ந்து கொன்ற போது யம தூதர்களால் தெரியவந்தது.

26-வது லீலை தாயைப் புணர்ந்து தகப்பனையும் கொன்ற பிராமணனின் மகா பாதகத்தைத் தீர்த்தது.

27-வது லீலை குருவை மதிக்காமலுங் குருபத்தினியையும் விரும்பிய சிஷனை வாள் சண்டையால் சுந்தரர் குரு வேஷத்துடன் கொன்றது.

28-வது லீலை சமணர்கள் விட்ட பெரிய நாகத்தைச் சுந்தர செய்து மலையாக்கினது.

29-வது லீலை சமணர்கள் விட்ட பசுவைத் தன் நந்திகேசரால் கொன்று மலையானதும், ஸ்ரீ ராமர், லக்ஷ்மணர், சுக்கிரீவன் விருஷப மலையில் அகஸ்திய ருபதேசத்தால் மதுரை வந்து ஈசனை வணங்கிப் பாசுபதாஸ்திர மடைந்து இராவணனைக் கொன்றது.

30-வது லீலை தருமவிடையைக் குதிரை யாக்கிப் பூத கணங்களோடு வேட ராஜனுடன் யுத்தத்துக்குப் போன மெய்க் காட்டிட்டது.

31-வது லீலை உலவாக்கிழி பாண்டியனுக் கருளினது.

32-வது லீலை தாருகா வனத்தில் பிக்ஷாடன மூர்த்தியைக் கண்டு மயங்கின ரிஷி பத்னிகளான வணிகப் பெண்களின் மனதைக் கவர்ந்து கையில் வளையளிட்டுச் சாபம் நீக்கியது.

33-வது லீலை குமாரனுக்கு பால் கொடுத்த ஆறு ஸ்திரீகள் கைலாஸத்தில் சிவனுபதேசித்த அஷ்ட சித்தியை மறந்ததால் பட்டமங்கை யென்னு மூரிலே கல்லாயிருந்த அவர்களுக்கு அச்சாபம் நீக்கி மறுபடியும் அஷ்ட சித்தியை உபதேசித்தது.

34-வது லீலை பக்தியுள்ள சோழ ராஜனுக்கு இராத்திரியில் எல்லாக் கதவுகளையுந் திறந்து தரிசனந் தந்து விடையிலச்சினை யிட்டது.

35-வது லீலை ஒரு சோழ ராஜன் மதுரையில் பகை கொண்டு போர் செய்ய, சுந்தரேசுரவனைச் செயித்து, பாண்டியனுக்குத் தண்ணீர் பந்தல் வைத்தது.

36-வது லீலை திருபுவனத்தில் பொன்னனை யாளென்னுந் தாசிக்காக ரசவாதஞ் செய்தது.

37-வது லீலை காவேரி பட்டினத்திலாண்ட சோழ இராஜன் மதுரையி லெதிர்த்ததா லவனைச் சேனைகளுடன் மடுவில் தள்ளி பாண்டியனுக்கு வெற்றி யளித்தது,

38-வது லீலை மனத் துயரங்கெட உலவா அரிசி மூட்டையை அடியவர்கள் பொருட்டு வேளாளனுக் கருளிச் செய்தது.

39-வது லீலை சுந்தரேசரே பக்தனுக்காக மாமனாக வந்து வழக்குரைத்து வணிகனுக்குப் பொருளை வாங்கிக் கொடுத்தது.

40-வது லீலை வரகுண பாண்டியனுக்கு அவனுடைய பக்திக்காக மதுரையில் சிவலோக தரிசனங் காட்டியது.

41-வதுலீலை பாணருக்காக முடிமேல்விறகுசுமந்து வீணையோடிசைபாடிப் புதிதாகவந்த யாழ்வல்ல பனைத்துரத்தியது.

42-வது லீலை பாணனுக்குத் திருமுகங் கொடுத்துத் திருவஞ்சக்களத்துக்கு சேரராஜனிடம் அனுப்பி, அவன் திரவிய மளித்தது.

43-வதுலீலை சுந்தரேசர்சன்னிதியில் பாணர்யாழ்வாசிக்க மழைபெய்தோடியதால் சிவன் பொன்பலகைக் கொடுத்தது.

44-வது லீலை பாணர் மனைவிக்கு வந்த பகையை ராஜசபையில் சுந்தரேசர் வென்றது.

45-வதுலீலை மதுரைக்கு தெற்கில் குருவிருந்த துறையென்னுமூரில் பிருகஸ்பதியின் சாபத்தால் 12-வேளாளப்பிள்ளைகள் பன்றிக்குட்டிகளாகப் பிறந்து தாயிழந்து பரிதவிக்கும்போது சுந்தரேசர்தாய்ப் பன்றிப்போலவந்து பால்கொடுத்து பன்றிக்குட்டிகளை காப்பாற்றியது.

46-வது லீலை மாணிடரூபமுள்ள 12-பன்றிக் குட்டிகளை யும் சுகுண பாண்டியனிடம் சுந்தரேசர் மந்திரிகளாக்கியது.

47-வது லீலை கருங்குருவிக்குப் பயம்நீங்கும்படி ஞானோ பதேசஞ் செய்தது.

48-வது லீலை நாரைக்கு முக்தி தந்தது.

## இனி கலியுகத்தில் நடந்த லீலைகள்.

49-வது லீலை மகாப் பிரளயத்தில் லயமடைந்த மதுரை யைக்கடவுள் கரத்திலணிந்த பாம்பால்வளைத்து திருவாலவாய் நகரமாகச்செய்த, திருவிளையாடல்

50-வது லீலை மதுரை நகரி லெதிர்த்து வந்த சோழரா ஜனை, வேடராஜ வடிவுடன் குதிரையேறிச் சிவகணங்களுடன் சுந்தரரென்று பெயரெழுதிய பாணமெய்து செயித்தது.

51-வது லீலை காசியில்யாகஞ்செய்த பிரும்மாவின் சாபத் தால் சரஸ்வதிதேவி நற்கீரர் முதலிய 48-தமிழ்ச் சங்கத்தா ராக மதுரையில் பிறக்க அவர்களுக்குச் சுந்தரர் பொற்சங்கப் பலகை யளித்தது.

52-வது லீலை தருமியென்னும் பிராமண பிரும்மசாரிக்கு சுந்தரேசர் கவி யெழுதிக் கொடுத்து பொருள் முடிப்பைக் கொடுப்பித்தது.

53-வது லீலை பகை கொண்ட நற்கீரருக்குப் பகையை நீக்கி கரையேற்றஞ் செய்தது.

54-வது லீலை சுந்தரேசர் அகஸ்திய ரிஷியால் நற்கீரர் முதலிய பொய்யடிமையில்லாத புலவர்களாகிய 48-சங்கப் புல வர்களுக்கும் இலக்கண முபதேசித்தது.

55-வது லீலை சங்கத்தாருள் நேர்ந்த கலகத்தை சுந்தரேசருடையசாபத்தா லூமைச்செட்டிப் பிள்ளையாகப் பிறந்திருந்தசுப்பிரமணியக் கடவுளைக் கொண்டு பாடலின் சந்தேகந் தீர்த்துக் கலகமும் சாபமுந் தீர்த்தது.

56-வது லீலை இடைக்காட்டுத்தேவர் கவியைப் பாண்டியன் அவமதித்ததால் சுந்தரேசரவருடன் குபேரன் பூஜித்த லிங்கமாகிய வடவால வாயிலில் பிணங்கியிருந்து பிறகு பாண்டியன் பிரார்த்தனையா லெல்லாரும் மதுரைக் கெழுந்தருளியது.

57-வது லீலை தருப்பசயனத்துக்கு மேற்குள்ள தண்டுறைப்பாக்கமென்னு மூரிலே சுந்தரேச ருபதேசித்த வேதப் பொருளைக் கவனியாத மீனாக்ஷியம்மனை, மீனிடம் பிறந்து வலைப்பெண்ணாகவளரவும், கந்தரையும்கணபதியையு முன்னே விட்ட நந்தியை மீனாகச் சபித்து சுந்தரேசர் வலையனாக, நந்தியான மீனைப்பிடித்தும் வலைபராஜகன்னியான மீனாக்ஷியை அங்குமணந்து, அவர்களுக்கு காக்ஷிதந்து, உத்தரகோசமங்கையில்தங்கி மதுரைக்கு வந்தது.

58-வது லீலை திருவாதவூரில் பிராம்மணராய்ப் பிறந்து பாண்டியனிடம் மந்திரியான மாணிக்க வாசகருக்கு திருப்பெருந்துறையில் சிவபெருமான் குருவாயுபதேசஞ்செய்து பாண்டியனால் குதிரைவாங்கக் கொடுத்த பொருள்களைனத்து மிதில் திருப்பணி செய்வித்தபின் வாதவூரர் பாண்டிப னுத்தரவுப்படி மதுரை வந்தது.

59-வது லீலை சுந்தரேசர் பக்தனுக்காக நரிகளைப் பரிகளாக்கி பாண்டியனிடஞ் செலுத்தியது.

60-வது லீலை பிறகு மறுநாள் பரிகள் நரிகளாக ஓடவே பாண்டியன் மாணிக்கவாசகரைச் சிறையிலிட்டது.

61-வது லீலை சுந்தரேசர் வைகை நதியில் வெள்ளத்தைப் பெருகவிட வீட்டு வீதத்திலடைக்க பக்தியுள்ள பிட்டுக்கிழவி வீதத்துக்குத் தாமே பிட்டுக்காகக் கூலியாளாய் மண் சுமந்து அரிமர்த்தன பாண்டியனால் பிரம்படி பட்டு காக்ஷி தந்தது.

62-வது லீலை கூன்பாண்டியன் சமணமதத்திலிருந்ததால் அவன்மனைவி மங்கையர்க்கரசியார் மந்திரிகுலச் சிறை நாயனுரிருவரும் திருஞான சம்பந்தருக்குப் பிராமண முகமாய் பத்திரிகையெழுத அவரும் 10000-சிஷர்களுடன் மதுரை வந்து சுந்தரேசரைத் தரிசித்து மடத்தில் தங்க, சமணர்கள் அம்மடத்தில் நெருப்பிட, ஞானசம்பந்தர் தீயைச்சுவரமாக்கி யரசனிட மேவ சுவரத்தைச் சமணர்களா லடக்க முடியாமல் திகைக்க மந்திரி ஞானசம்பந்தரை யழைத்து அவரால் விபூதி பூசியபின் சுவரமும் கூனலும் நீங்கிச் சுந்தரபாண்டியனுகி சிவபக்திமிகுந்து நெடுமாற நாயனுரானது.

63-வது லீலை ஞானசம்பந்தர்சமணர்களை வாதில்வென்றும் ஏடுகளை நெருப்பிலிட்டும் வைகை நதியில் விட்டும் சோதித்து ஞானசம்பந்தரின் ஏடு காதவழி மேற்கிலுள்ள திருவேடகஞ் சேர அதிலாலயத் திருப்பணி செய்தும் சமணர்களனைவரையுங்கழுவேற்றியது.

64-வது லீலை திருப்புறம்பியத்தி லிருந்து வணிகப்பெண்ணுக்காக லிங்கம், கிணறு, வன்னிமரம் மூன்றும் மதுரையில் வந்து சாக்ஷி சொன்னது. அகஸ்தியர், வசிஷ்டர், புதனும் பூஜித்தது. 62-வது லீலையில் சொன்ன நெடுமாற நாயனர், குலச்சிறை நாயனர், மங்கையர் கரசியார் இவர்கள் சைவப் பயிரை வளர்த்து முக்தி பெற்ற ஸ்தலம், மாணிக்க வாசகர் பாடியது, வைசிய குலத் துதித்த மூர்த்தி நாயனர் சிவ பக்தியுடனிதில் சந்தன மரைத்துப, திருவருளால்

சமண ராஜனை நீக்கி மதுரையி லரசாண்டுத் திருப்பணியுந் திருத்தொண்டுஞ் செய்து சிவபத மடைந்தார்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-9. திரு நாவுக்கரசு நாயனார் பதிகம்-2. ஆ பதிகம்-11.

2 மதுரை சுந்தரேசர் ஆலயத்தில் நடராஜர், சிவகாமி, வெள்ளியம்பலம், 24-வது லீலைப்படி கால் மாறியாடின மூர்த்தி.

3 வடவாலவாய்:—மதுரை வடக்கு மாசி வீதியில் உள்ளது. சிவஸ்தலம், சுந்தரேசர், மீனாக்ஷி, 56-வது லீலைப்படி இடைக்காட்டுத் தேவரும், குபேரனும் பூஜித்தது.

4 மதுரைத் தென்மேற்கு மூலை மாசி வீதியில் உள்ளது. சிவஸ்தலம், (நன்மை தருவார் கோவில்) நன்மை தருவார், மீனாக்ஷி, பிரமண்டம், சிவகங்கை. சுந்தரேசர் தன்னைத் தானே பூஜித்ததாக புராண முள்ள ஸ்தலம்.

5 மதுரை தெற்கு மாசி வீதியிலுள்ளது. சிவஸ்தலம், (ஏகாம்பரர் கோவில்) ஏகாம்பரேசர், காமாக்ஷி யம்மை.

6 மதுரைத் தென்மேற்கு மூலை மாசி வீதியில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், கூடலழகர், மதுரைவல்லித் தாயார், ஹேம புஷ்கரணி, சக்கர தீர்த்தம், பிருகு ரிஷிக்கும், சௌநகருக்கும், பிரத்தியக்ஷம். ஆண்டாள், திருமங்கை யாழ்வார் மங்களா சாஸநம்.

7 மதுரை மேல மாசி வீதியில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், மதநகோபாலர். உருக்மிணி, சத்தியபாமை.

8 மதுரைத் தெற்கு மாசி வீதியில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஸ்ரீ கிருஷ்ணர், உருக்மிணி சத்தியபாமை.

9 மதுரை வடக்கு மாசி வீதியில் உள்ளது விஷ்ணுஸ்தலம், ஸ்ரீ கிருஷ்ணர், உருக்மிணி, சத்தியபாமை.

10 திருவாப்புடையார் கோவில் மதுரையின் வடக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஆப்பேசர், அம்பிகை, வைகைநதி. அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. சோழாந்தகனென்னும் பாண்டியனுக்கு ஆப்பு லிங்கமானது.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

11 நல்லாகுளம் மதுரையின் வடக்கு 1-மைலில் உள்ளது. விஷ்ணு ஸ்தலம் திருவேங்கட மூர்த்தி, இலக்ஷுமி, ஆண்டாள்.

12 மதுரைப் பெரிய தெப்பக்குளத்தின் பிரகாரத்தில் சிவஸ்தலம். சிவன், உமை, மகாமாரியு முக்கியம்.

13 திருப்பரங்குன்றமலைமேல் மதுரை ஜங்ஷனின் தெற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விசுவநாதர், விசாலாக்ஷி, சரவணப் பொய்கை, காசிச்சுனை.

14 திருப்பரங்குன்றமலை யடிவாரம் ரெயில்வே ஸ்டேஷன். சிவஸ்தலம். பரங்கிரிநாதர், ஆவுடைநாயகி, சுப்பிரமணியர், தெய்வானை, வள்ளி, சரவணப் பொய்கை. சத்தியகூபம். தெய்வானையை கலியாணஞ் செய்தது. அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. பராசர புத்திரர்கள், வியாசருக்கு முந்தின அறுவர்; மீனுடன் விளையாடியதால் பராசரரால் மீனுகச்சாபமடைந்தது. சரவணப் பொய்கையில் கந்தருக்கு, பார்வதியால் பால் கொடுக்கும்போது ஆறுபேர்களும் பால்த் துளிகளைப்புசித்து சாபம் நீங்கிச் சிவனுத்திரவுப்படி, இதில் தபசு செய்தும் பூஜித்தும் ஞானமடைந்தார்கள். நக்கீரதேவர் முருகாற்றுப்படையில் பாடிய ஸ்தலம்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

15 திருவேடகம்:—மதுரை ஜங்ஷனின் வடமேற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஏடகநாதர், ஏலவார்குழலி,

வைகைநதி, வில்வமரம், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் சமணருடன் வாதில் வைகைநதியில் விட்ட, ஏடு மேற்கு முகமாயெதிரேறித் தங்கியது. பார்த்தப்பிரஹார'மென்னும் அடையாள முள்ளலிங்கம். கிருதயுகத்தில் மகாவிஷ்ணுவும், திரேதாயுகத்தில் கருடனும், துவாபரயுகத்தில் நாகரும், பார்த்தனும், இக்கலியுகத்தில் கூன்பாண்டியனென்னும் நெடுமாற நாயனாரும் பூஜித்தது.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

16 திருமோகூர்:—மதுரையின் வடகிழக்கு 6-மைலில் உள்ளது. விஷ்ணு ஸ்தலம். காளமேகர், மேகவல்லி, க்ஷீராப்தி. யானைமலையில் நரசிம்மர், அஜருத்திரேந்திராதிகளுக்கு பிரத்தியக்ஷம். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

17 திருமாலிருஞ்சோலைமலை:— (என்பது அழகர்கோவில்) மதுரையின் வடகிழக்கு 11-மைலில் உள்ளது. கள்ளர், அலங்கார அழகர், சுந்தரவல்லித்தாயார், சிலம்பாறு, நூபுரகங்கை, சந்தனமரம். விருஷபாத்திரி, மலையத்துவஜ பாண்டியன். அருச்சுனன், தருமதேவதைக்கும் பிரத்தியக்ஷம். குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். பெரியாழ்வார், ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூர் இவ்விருவர்களும்ஸ்தலத்தில் அவதரித்தவர்கள் இச்சோலைமலைசுப்பிரமணியர் திருப்புகழிலுமுள்ளது. நக்கீரதேவரும் பழமுதிர்சோலைமலையென்றுபாடியது ஸ்ரீரங்கஸ்தலத்தில் கணபதி க்ஷேத்திரபாலகராய் உட்பிரகாரத்திலிருப்பதுபோல இந்தஸ்தலத்திலும் வடதிருப்பதி ஸ்தலத்திலும் சுப்பிரமணியர் க்ஷேத்திர பாலகரென்று சொல்லுகிறார்கள்.

18 திருவாதவூர்:—மதுரையின் வடகிழக்கு 16-மைலில் உள்ளது. சிவஸ்தலம். திருமறைநாதர், ஆரணவல்லி, சிவ கங்கை. கிருதயுகத்தில் வாயுதேவரும், திரேதாயுகத்தில் அசுவினிதேவர்க ளிருவர்களும், துவாபரயுகத்தில் காத்தி யாயன ரிஷியும், இக்கலியுகத்தில் பிராமண மரபிலுதித்து பாண்டியனிடம் மந்திரியாகி ஞானமடைந்த மாணிக்கவாச கரும் பூஜித்தது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரின் க்ஷேத்திர கோவையிலுள்ளது, வாதராஜன் பூஜித்தது.

19 திருச்சுழியல்:—மதுரையின் தெற்கு 24-மைலில் உள் ளது. அரப்புக்கோட்டையின் சமீபம், சிவஸ்தலம். திரு மேனிநாதர், துணைமாலையம்பிகை, பிரளயதீர்த்தம், சநா நந்தர், சௌநகர் பூஜித்தது. பார்வதி தபசு செய்து கலி யாணஞ்செய்ய வரம் பெற்றது. மதுரைமாதிரி பெரிய கோவில். சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1.

20 மணலூர்பட்டினம்:— (என்பது கீழடி) மதுரையின் கிழக்கு 6-மைலில் உள்ளது சிவஸ்தலம். சிவன், உமை, சிவகுளம், வைகைநதி, பெருமாளுமுக்கியம், மலையத்துவஜ பாண்டியனுண்டது, பாரத மாதிபருவம் (235) அத்தியாயப் படியும், அருச்சுனனிதிலராசாண்ட சித்திரவாகன பாண்டியன் பெண் சித்திராங்கதையை விவாகஞ்செய்து, பப்ருவாகன னென்னும் மகனை அடைந்து, சித்திரவாகனன் பாட்டனை பிரபஞ்சபாண்டியனிதில் தவமியற்றியதால் சிவன் பிரத்தி யக்ஷமாகி உன்குலத்திலொரே சந்ததிதா னுண்டாகுமென்று முன்னநுக்கிரகித் திருப்பதால், பப்ருவாகநனைப் பட்டத்துக் கும் சந்ததிக்குங் கொடுக்கவேணு மென்று அருச்சுனனைக் கேட்டு நிறுத்திக்கொண்டு அவர்கள் பூஜித்தது.

21 திருபுவனம்:—மதுரையின் கிழக்கு 9-மைலில் உள்ளது சிவஸ்தலம். புஷ்பவநேசர், மின்னும்பாள், வைகைநதி,

பலாமரம். பிரமன், பருவதரிஷி, சேரன், சோழன், பாண்டியன் பூஜித்தது. மதுரை ஸ்தலத்தின் 36-வது லீலைப்படி சுந்தரர், பொன்னனையா ளென்னுந் தாசிக்கு ரசவாதஞ்செய்த பொன்னைக் கொண்டு செய்வித்த மூர்த்தியைப் பார்த்த அத்தாசி, அச்சோ அழகென்று சுவாமியின் வலது கபோலத்தை கிள்ளி முத்தமிட்டாள். அக்கிள்ளு மூர்த்தியி லின்னமுமிருப்பதால். அச்சோ அழகரென்றும் சுவாமிக்குப் பெயருண்டு. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-4. சுந்தரமூர்த்தி மற்ற யிருவர்களுக்கும். பிந்தின காலத்துநாயனார். திருபுவனம் ரெயில்வே ஸ்டேஷன்.

22 **திண்டுக்கல்:**—மதுரையின் வடக்கு 24-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கிரீசர், சக்திமலைமேல் கந்தருண்டு. பெருமாளும் முக்கியம். திண்டுக்கல் ரயில்வே ஸ்டேஷன்.

23 பெரியகுளம் மதுரையின் வடமேற்கு 26-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவமரகதேசர், உமை, பெருமாளும் முக்கியம்.

24 திருக்கோடுங்குன்றம்:— (என்பது பிரான்மலை) மதுரையின் வடகிழக்கு 29-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கொடுங் குன்றீசர், அமிருதநாயகி, கந்தர், வள்ளி, தெய்வானை அகஸ்தியருக் குபதேசித்து மணவாளக் கோலமும் காட்டினவர், பைரவரும் முக்கியம், அகஸ்திய தீர்த்தம் மலையினுச்சியில் கார்த்திகைதீபம் பிரபலம். தேவ சபை வசிஷ்டர். மகோதர ரிஷி நாகராஜன் பூஜித்தது. திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. இஸ்தலமுதல் 70- இலக்கம் வரையிலுள்ள எல்லாச் செட்டிநாட்டு ஸ்தலங்களுக்கும்

ரெயில்பாதை யில்லாததால் மதுரை, திருச்சி, தஞ்சாவூர் ஜங்ஷன் ரெயில் ஸ்டேஷன்களி லிருந்து, திருப்புத்தூர், புதுக்கோட்டை வழியாக வாடகை மோடார் வண்டிகள் போகின்றன.

25 திருப்புத்தூர்:—மதுரையின் வடகிழக்கு 39-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஸ்ரீ தனீசர், சிவகாமி, யோகபைரவர் முக்கியம் சிவகங்கை, ஸ்ரீ தனிதீர்த்தம், கொன்றைமரம், இலக்ஷுமியும், வால்மீகரும் பூஜித்தது. இதில் விஷ்ணு வும் இலக்ஷுமியுடன் சிலையிலுண்டு. ஸ்ரீராமர் இலக்ஷுமணர் சீதை விஷ்ணு செப்பு விக்கிரகத்திலுண்டு. பழைய கோட் டையும் அனுமார் கோவிலுமுள்ள டவுன். கடைத்தெருவின் வடமேற்கு மூலையில் பழைய ஸ்ரீதளேசராலயமுண்டு. இது வும் - 24 - 25 - 26 - 27 - 37 இந்த ஐந்து ஸ்தலங்களும் குன்றைக்குடி மடாதீனமுள்ள பஞ்சஸ்தலம். திருஞானசம் பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

26 சதுர்வேத மங்கலம்:—திருப்புத்தூரின் வடமேற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வேதநாதர், உமை வேதங் கள் பூஜித்தது.

27 திருக்களக்குடி:—திருப்புத்தூரின் வடக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். குவளேசர், சண்பகவல்லி, சுனை மலையைக் குடைந்து லிங்கமுள்ளது. திருநாவுக்கரசு நாய னார் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிகவைப்பு ஸ்தலம்.

28 கண்ணைப்பதி:— (என்பது பறியாமருந்துப் பட்டி) திருப்புத்தூரின் வடக்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பறியாமருந்தீசர், பரஞ்சோதி, சர்வாநந்தத்தீர்த்தம், மருத

மாம், பாண்டியன் பிணியை மருந்து பறியாதுட்டியகற்றின வர். திருநாவுக்கரசு நாயனர் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

29 காஞ்சாத்துமலை:—திருப்புத்தூரின் வடமேற்கு 18-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை கந்தாது, முக்கியஸ்தலம்.

30 வலயபட்டி:— (என்பது குமாராண்டிமலை) திருப்புத்தூரின் வடக்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை மலையைக்குடைந்துள்ளது.

31 கோவிலிளையாத்தங்குடி:—திருப்புத்தூரின் வடகிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கைலாசநாதர், நித்திய கலியாணி; வைசியநகரத்தாரின், கோத்திரஸ்தலங்களொன்பதில் இதுவும் - 32 - 33 - 34 - 35 - 45 - 46 - 47 - 48 இலக்கமுள்ள இந்த ஒன்பது ஸ்தலங்களுண்டு.

32 பைரவம்பட்டி:—திருப்புத்தூரின் கிழக்கு 3½-மைலில் உள்ளது, சிவஸ்தலம். வளர்ஒளீசர், சௌந்தர நாயகி பைரவதீர்த்தம், பைரவர்முக்கியம்.

33 பிள்ளையார்பட்டி:—திருப்புத்தூரின் கிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மருதீசர், வாடாமுலையம்மன், இங்கு மலையைக்குடைந்துள்ள பிள்ளையார் முக்கியம். இதில்திருவீசரும், சிவகாமி அம்மனுமுண்டு.

34 நேமம்:—திருப்புத்தூரின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை. இதுவும் வைசிய நகரத்தாரின் கோத்திரஸ்தலம். இதற்கடுத்த ஆற்காட்டில் சிவனும், தேனாறும் முக்கியம்.

35 ஹிரண்யனூர்:—திருப்புத்தூரின் வடக்கு4-மைலிலுள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, இதுவும் கோத்திரஸ்தலம் இதின் மேற்கு 2-மைலில் சோழியப்பிராமணர் குருவாயுள்ள இளாமடமு முண்டு.

36 நயினார்பட்டி:—திருப்புத்தூரின் தெற்கு 4-மைலிலுள்ளது. சிவஸ்தலம். இக்ஷுவநேசர், மங்களாம்பாள் இதற்கு புராணமு முண்டு.

37 குன்றக்குடி:—திருப்புத்தூரின் கிழக்கு 7-மைலிலுள்ளது. சிவஸ்தலம். அகஸ்தியேசுரர், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சரவணதீர்த்தம். இது நக்கீரர் குன்று தோராடலி லொன்றில் சேர்த்துள்ளது. மலைமேல் கந்தர் முக்கியம். சூரன் மயிலானஸ்தலம். இதில் பஞ்சஸ்தல விசாரணை மடமு முண்டு, இதின் தெற்கு ஒருமைலில் தேனாக்ஷியம்மனென்னும் காளி கோவில் முக்கியமானது. இதின் கிழக்கு ஒருமைலில் வீழியப்பிராமணர் குருவாயுள்ள பாதிரிக்குடி மடமுமுண்டு.

38 திருக்கோவிலூர்:—திருப்புத்தூரின் கிழக்கு 10-மைலிலுள்ள சிவஸ்தலம். ராஜகட்கபரமேசர், சாலிவாடீசுவரி, சமீவனம், வன்னிமரம், மதுபுஷ்கரணி, அகஸ்தியர்; ஜைமுனி, மதுப்பிரியரிஷி, கண்ணுவரிஷி பூசித்தது. சுவேதராசன் யாகங்கள்செய்து பிரும்மலோக மடைந்ததும். அன்னதான முன் செய்யாததால் பசியால் வருந்திப் பிணந்தின்று வந்தை அகஸ்தியரிதில் நீக்கினர். வைசிய குலத்துதித்த சிவகுப்தன் பத்தினி சுதர்மையென்னு முத்தமிக்கு அம்பாள் நெல்வயல் காத்து சுதர்மை கையால் கட்டமுது வாங்கி யுண்டதால் நெல்காத்தநாயகி யென்று பெயர். வீரசேகரபாண்டியன் கண்ணுவரிஷி வளர்த்த மானைக்கொன்றதால் அவரால்

வேடனுகச் சாபமேற்பட்டதை இதில் பூசித்து சாபம் நீங்கினது. திருநாவுக்கரசுநாயனர் அடைவுத் தாண்டகத்துள்ள வைப்புஸ்தலம்.

39 காரைக்குடி:—திருப்புத்தூரின் கிழக்கு 11-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சுந்தரேசர், மீனாக்ஷி, பொற்றாமரை வைசியர்கள் பிரபலமுள்ள பெரிய டவுன். குப்புடையம்மன் என்னும் காளிகோவிலும், அதில் சிவனு முமையும்; கிருஷ்ணன் கோவிலும், பாடசாலைகளு முக்கியம்.

40 நாகநாதபுரம்:—காரைக்குடியின் தெற்கு அரைமைலில் உள்ளது. சிவஸ்தலம். நாகநாதர், பிருகதம்பாள். இதில் கிருஷ்ணன் கோவிலும் பிரம்மோற்சவமு முண்டு.

41 அரியக்குடி:—காரைக்குடியின் தெற்கே 1-மைலில் உள்ளது. விஷ்னுஸ்தலம். வெங்கடேசர், அலமேலுமங்கை, பூதேவி. பிரம்மோற்சவம் முக்கியம் வைணவமத வைசியரு மிதிலுண்டு.

42 குராக்குடி:—காரைக்குடியின் வடக்கு 5-மைலில் உள்ளது சிவஸ்தலம். சுந்தரேசர், மீனாக்ஷி, சிவகங்கை, ஜமீன் விசாரணையுள்ளது இதில் நடராஜர்; சிவகாமி முதலிய நாலு மூர்த்தங்களுண்டு.

43 கானடுகோத்தான்:—காரைக்குடியின் வடக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவலோகநாதர், ஒப்பிலாம்பாள். இதில் வைசியர்கள் பிரபலம்.

44 பள்ளத்தூர்:—காரைக்குடியின் வடக்கு 4-மையில் உள்ளது. சிவஸ்தலம். சுந்தரேசர், மீனாக்ஷி, இதில்சத்திரமுண்டு.

45 பூவாண்டிப்பட்டி:—காரைக்குடியின் வடக்கு 6-மைலிலுள்ளது. சிவஸ்தலம். தேசிகர், ஆவுடைநாயகி, இதுவும் வைசியர்களின் கோத்திரஸ்தலம்.

46 வேலங்குடி:—காரைக்குடியின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவ ஸ்தலம். கண்டீசர். காமாக்ஷி இதுவும் கோத்திர ஸ்லம். இதைச்சேர்ந்த கோட்டையூரிலும் சிவன்கோயில் முக்கியம். அதில் வைசியர்களும் பிரபலம.

47 இலுப்பைக்குடி:—காரைக்குடியின் தென்கிழக்கு 4-மைலிலுள்ள சிவஸ்தலம். இங்கு சிவன், உமை, வைரவர் முக்கியம். வைசியர்களின் கோத்திரஸ்தலம்.

48 மாத்தூர்:—காரைக்குடியின் தென்கிழக்கு 5-மைலில் உள்ள சிவஸ்தலம். சிவன், உமை, வைசிய நகரத்தாரின் ஒன்பது கோத்திர ஸ்தலங்களிலொன்று.

49 கண்டனூர்:—காரைக்குடியின் கிழக்கு 4-மைலில் உள்ளது சிவஸ்தலம். சுந்தரேசர், மீனாக்ஷி, இதில் வைசியர்கள் பிரபலம்.

50 சாயக்கோட்டை:—காரைக்குடிக்கு கிழக்கே 5-மைலில் உள்ளது. வீரசேகரர், உமையம்பாள், சூரியதீர்த்தம், வீரசேகரபாண்டியன் பூசித்தது, வைசியர்களின் முக்கியஸ்தலம். இக்கலியிலும் பத்து வருஷத்திற்குமுன் ஒரு கண்ணிழந்த வைசியனுக்குக் கண்ணைக்கொடுத்த அம்மன். இதைச்சேர்ந்த புதுவயலில் பெருமாளும் முக்கியம். இதன் வடக்கே ஒரு மைலில் காட்டில் பூமியிலிருந்து கிடைத்த லிங்கமும் அம்மனும் காட்டுக் கோயிலென்று வழங்குகிறது.

51 பரமாந்தூர்:—அரந்தாங்கி ரயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 5-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். பரமபதநாதர், இலட்சுமி, வெள்ளாறு.

52 திருப்பெருந்துறை (என்பது ஆவிடையார் கோவில்) அரந்தாங்கி ரயில்வே ஸ்டேஷனுக்கு தென்கிழக்கு 8-மைலிலுள்ள சிவஸ்தலம். ஆத்மநாதர், யோகாம்பாள், ஞானதீர்த்

தம், குருந்தைமரம்; பிருகு, பராசரர், அகஸ்தியர், வசிஷ்டர் பூசித்தது. திருவாதவூரில் வேதியர் குலத்திலுதித்து மதுரைப்பாண்டியனிட மந்திரியான மாணிக்கவாசகருக்கும்; ரிஷிகளுக்கும், இக்கலியுகத்தில் இதிலுள்ள குருந்தை மரநிழலில் தக்ஷிணாமூர்த்தியாய் ஞானோபதேசஞ்செய்து அவரால் குதிரைவாங்கக் கொண்டுவந்த அரிமர்த்தன பாண்டியன் தனங்களைத் திருப்பணிக்கும், திருத்தொண்டருக்குஞ் செலவிட்டும் உபதேச மடைந்த யாவரையும் ஞானதீர்த்தத்தில் முழுகிக் கைலாசத்துக் கனுப்பியும், இவரை திருவாசகம், திருத்தாண்டகங்கள் பாடவும், சிதம்பரத்தில் சமண குருவை வாதிட்டு வெல்லவும் நிறுத்தி, இவர் பொருட்டு மதுரையில் நரியைப் பரியாக்கியும், பரியை நரியாக்கியும், பிட்டுக் கிழவிக்கு அனுக்கிரகித்தும், பாண்டியனால் பிரம்படிபட்டும், அவனைப் பக்தனாகவுஞ் செய்த பரமசிவன், மாணிக்கவாசகரை உத்தரகோசமங்கைக் கனுப்பியதிலு மின்ன மனேக ஸ்தலங்களிலும் பாடியபின் மாணிக்கவாசகர் சிதம்பரஞ்சென்று சமண குருவை ஊமைப்பெண்ணால் வாதில் வென்று சிவதீக்ஷை செய்தும், பாடியுஞ் சோதியிலைக்கியமானார். இதில் மாணிக்கவாசகருக்கே பிருமோற்சவமும், உபசாரங்களும் நடக்கின்றது. அப்பராகிய திருநாவுக்கரசு நாயனார், திருஞான சமபந்தமூர்த்தி நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய இவர்கள் மூவர்களும் பதிகங்கள் பாடின காலங்களுக்குப் பின்னிட்டிவர் காலமென்று, சுந்தரர் திருத்தொண்டத்தொகைப் பதிகங்களி லிவரைச் சேர்க்காததா லறியப்படுகிறது. இது திருப்பதிக வைப்புஸ்தலம்.

53 கண்டதேவி:—காரைக்குடியின் தெற்கு 7-மைலிலுள்ள சிவஸ்தலம். கைலாஸநாதர், சுவர்ணாம்பாள், சடாயு, சம்பாதி பூசித்தது.

54 தேவகோட்டை:—காரைக்குடியின் தெற்கு 9-மைலி லுள்ள சிவஸ்தலம். ராமநாதர், பார்வதி, வைசியர்கள் பிர பலமாயுள்ள பெரிய டவுன். பாடசாலைகளும்; சத்திரங்களும் உண்டு.

55 திருப்புனைவாசல்:—காரைக்குடியின் தெற்கு 18-மை லில் உள்ளது. சிவஸ்தலம். பழம்பதிநாதர், கருணாநாயகி, கருணாநதி, பாம்பாறு, சிவகங்கை வேதங்கள் பூஜித்தது. புன்னைமரம், லிங்கமு ஆவிடையாரு மிகப்பெரிது. லிங்கத் துக்கு மூன்றுமுழமும், மாவிடையாருக்கு முப்பது முழமு முள்ளவஸ்திரமுமொரு சுத்தென்று வசனமுள்ள ஸ்தலம். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

56 திருவாடானை:—காரைக்குடியின் தெற்கு 20-மைலில் தாலுக்கா சிவஸ்தலம். ரத்தினநாதர், அம்பாயிரவல்லி, சூரியன், அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. தூர்வாசரால் சாபம் பெற்ற பிருகுமுனியின் ஆட்டுத்தலையும் யானையுடலு மதில் நீங்கினது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

57 வேற்றியூர்:— (என்பது ஐயபுரி) திருவாடானையின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, சிவகங்கை திருநாவுக்கரசு நாயனாரின் க்ஷேத்திரக் கோவையி லுள்ள வைப்புஸ்தலம்.

58 திருஏகம்பத்து:—திருவாடானையின் மேற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஏகாம்பரநாதர், காமாக்ஷி, புராண முண்டு.

59 கல்லல்:—திருப்புத்தூரின் தென்கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சோமசுந்தரேசர், சௌந்தரநாயகி, புராணமுண்டு.

60 திருக்கோஷ்டியூர்:—திருப்புத்தூரின்தெற்கு 5-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். திருகோஷ்டிபுரம், சவும்மிய நாராயணர், மாமகள்நாயகி, தேவபுஷ்கரணி, திருப்மாற்கடல் கதம்பமரம், மலைமேல புஜங்கசயநனம் இரணியாக்ஷனைக் கொன்ற நரஸிம்மர் முக்கியம் நின்றும், இருந்தும், நடந்தும், கூத்தாடியுங் கோலங்காட்டியவர். கதம்பரிஷிக்கும், இந்திரனுக்கும், பிரத்தியக்ஷம் திருக்கோஷ்டியூர் நம்பி அவதாரஸ்தலம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

61 திருகோஷ்டியூர்:—ஷை பெருமாள் கோவிலுக்குள் சிவஸ்தலம். சாபலிங்கம், உமை, நரஸிம்மரை யடக்கினவர்.

62 பைரவனூர்:—திருப்புத்தூரின் தெற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கோஷ்டியூர் தெப்பக்குளத்தின் கீழ்புறம் மெய்ஞாநர், பாகம்பிரியாள், பைரவர்முக்கியம், உள்மதிலில் லிங்கங்களும் புராணமுமுள்ளது.

63 காளையார்கோவில்:—திருப்புத்தூரின் தென்கிழக்கு 19-மைலில் சிவஸ்தலம். காளேசுவரர், சுவர்ணவல்லி, யானைமடு, புஷ்பவந தீர்த்தம், சுந்தரமூர்த்தி நாயனாருக்கும், சேரமான்பெருமாள் நாயனாருக்கும், காளைவடிவாய் தரிசனங் கொடுத்தவர், பெருமாளுமுண்டு.

64 ஷை கோவிலில் சிவஸ்தலம். சுந்தரேசர், மீனாக்ஷியம்மை.

65 ஷை கோவிலில் சிவஸ்தலம். சோமேசர், சௌந்தரநாயகி, உமை காளியாக அவதரித்து பட்டாபிஷேகம் பெற்று லலிதாதேவியாக, பண்டாசுரன், சண்டாசுரன், முதலியவர்களைக்கொன்ற பாபம்தீர இதில் பூஜித்ததால் காளிபுரமென்றும், கானப்பேரென்றும் பெயருள்ளஸ்தலம். இந்திரன்

துர்வாசர்சாபத்தால் காட்டானையான ஐராவதம், அகஸ்தியர், வசிஷ்டர், கண்ணுவர், கௌதமர், கங்காதேவி, இலக்ஷ்மி, பிரும்மா, விஷ்ணு, சுவர்ணவல்லி, தேவதாஸர், ஏகாதசருத்திரர்கள், அஷ்டவசுக்கள், சுகந்தகேசி, பேய்க்கணங்கள், வீரசேநபாண்டியன், வாருணபாண்டியன், விக்கிரமச்சோழன் இன்னமனேகர் பூஜித்தது. இஸ்தலம் மருதுபாண்டியன் கட்டினது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1 சுந்தர மூர்த்தி நாயனார் பதிகம்-1 ஆக பதிகம்-2

66 இளையான்குடி:—காளையார் கோவிலின் தென்கிழக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். இது தாலுக்கா சிவன், உமை, இளையான்குடி மாறநாயனாரது பக்தியைச் சோதிக்கச் சிவனிரவிலதிதியாகப் பசியுடன்வர நாயனார் ராத்திரியிலன்று தெளித்த நாத்தங்கால் நெல்லை அரித்து வறுத்துக் குத்திச் சமைத்து அன்னமிட்டு அவரும் பத்தினியுஞ் சிவபதமடைந்த ஸ்தலம்.

67 நயினார்கோவில்:—காளையார் கோவிலின் தென்கிழக்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம். இதுதாலுக்கா சிவன், உமை, புராணமுள்ளது.

68 ஒக்கூர்:—திருப்புதூரின் தென்மேற்கு 14-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, புராணமுள்ளது.

69 நாட்டரசன் கோட்டை:—திருப்புத்தூரின் தென்மேற்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம். திருநேத்திரர், கண்ணுடைநாயகி, அம்பாள், முக்கியம். பிரும்மோச்சவமுண்டு ஸ்ரீநிவாசப்பெருமாளும் பிரபலம்.

70 சோழபுரம்:—திருப்புத்தூரின் தென்மேற்கு16-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வாகீசர், சுந்தராம்பாள், அர்ச்சுனனும், விக்கிரமச்சோழனும் பூஜித்தது.

71 சிவகங்கை:—திருப்புத்தூரின் தென்மேற்கு 22-மைலிலும் மானாமதுரை ரெயில்ஸ்டேஷனின்வடக்கு 11-மைலிலுமுள்ளது. ராமநாதர், பருவதபுத்திரி, சிவகங்கை, பெரிய ஜமீன், விஷ்ணுக்கோவிலு முக்கியம்.

72 வாநரவீரமதுரை:—என்பது (மானாமதுரை) சிவகங்கையின் தென்மேற்கு 11-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சோமநாதர், உமை, வைகைநதி விஷ்ணுகோவிலு முக்கியம் பிரும்மோச்சவமுண்டு. வாநரவீரமதுரை தாலுகா, ரெயில்ஸ்டேஷன்.

73 இராமநாதபுரம்:—மானாமதுரையின் கிழக்கு 34-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சொக்கநாதர், மீனாக்ஷி, இதிலுள்ள கோதண்டராமசுவாமி கோவிலுமுக்கியம். பெரிய ஜமீனான சேதுபதிராஜா வசிக்கும் டவுன். தமிழில் சிறந்தது இராமநாதபுரம்ஜில்லா, ரெயில்ஸ்டேஷன்.

74 பெருவயல்:—இராமநாதபுரத்தின் வடக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் முக்கியம்.

75 தேவிபட்டினம்:—இராமநாதபுரத்தின் வடக்கு 9-மைலில் உள்ளது சிவஸ்தலம். சிவன், மகிஷாசுரமர்த்தினி, சமுத்திரம், உமையிதில் மகிஷாசுரனை வதைத்தபுராணமுண்டு.

76 நவபாஷாணம்:—இராமநாதபுரத்தின் வடக்கு 10-மைலில் உள்ளது சிவஸ்தலம். திலகேசர், மத்தியபுரீசுவரி, சமுத்திரம், சக்கரதீர்த்தம், இதிலாதி ஜகந்நாதப் பெருமானு முக்கியம், ஸ்ரீராமர் நவக்கிரக பூஜைசெய்தது சீதைவாக்கியப்படி யிப்பொழுதும் நவக்கிரக கட்டத்திலலை களில்லை.

77 உப்பூர்:—இராமனுதபுரத்தின் வடக்கு 16-மைலில் உள்ளது சிவஸ்தலம். கணபதி, சிவன், உமை, ஸ்ரீராமரிதில் கணபதியைப் பூஜைசெய்த, ஸ்தலம் சேதுயாத்திரையின் முதல் ஸ்தலம்.

78 உத்தரகோச மங்கை:—இராமனுத புரத்தின் தெற்கு 6-மைலில் உள்ளது சிவஸ்தலம். மங்களேசர், மங்கைநாயகி, சிவகங்கை, மரகதநடேசர், ஆதிசிதம்பரம், பிருகுரிஷி, சாண்டிலியரிஷி பூஜித்தது, பார்வதி தபசுசெய்து பூஜித்த தாக பவிஷியத் புராணருத்திர பாகத்திலிருக்கிறது மதுரை 57-வது லீலைப்படி சுந்தரேசர் வலைப்பெண்ணுன மீனாக்ஷியை விவாகஞ்செய்து தங்கியஸ்தலம், மாணிக்கவாசகர் பூஜித்துப் பாடியது, தமிழில்பாடலும் புராணமுமுள்ளது.

79 திருப்புல்லாணி:—இராமனுதபுரத்தின் தெற்கு 6-மை லில் உள்ளது விஷ்ணுஸ்தலம். கலிபாணஜகந்நாதர், கலிபாண வல்லி, சமுத்திரம், சக்கர தீர்த்தம், அசுவத்தமரம், ஸ்ரீராம ராக்கினைப்படி சமுத்திரராசன் வராததால் தருப்பசயனம் செய்தார் முத்கலரிஷிக்கு அக்நிஹோத்திரத்துக்கு க்ஷீர குண்டமுண்டானது புல்லாரணிய ரிஷிக்கும் அசுவத்தநாராயணனுக்கும் பிரத்தியக்ஷம், திருமங்கையாழ்வார், மங்களா சாசநம் இதில் சிவனுமுண்டு.

80 இராமேசுவரம்:—இராமனுதபுரத்தின் கிழக்கு 30-மை லில் உள்ளது. சிவஸ்தலம். ராமநாதர், பருவதசம்வர்த்தினி இது சீதையால் மண்ணைவைத்து லிங்கமாக பூஜித்தது. விசுவநாதர், விசாலாக்ஷி இது அனுமானுல் காசியிலிருந்து கொண்டுவந்த லிங்கம், துவாதச ஜோதிர்லிங்க க்ஷேத்திரம் பிருகஸ்பதியும், ஸ்ரீராமரும் பூஜித்தது. அடியில் வருமாறு முக்திகொடுக்கும், 56-தீர்த்தங்களுண்டு. இராமேசுவரம்

ரெயில் ஸ்டேஷன். (1) உப்பூர்விநாயக சமுத்திரம், (2) நவ பாஷாண சமுத்திரம், (3) நவபாஷாண சக்கரதீர்த்தம், (4) தருப்பசயந சக்கரதீர்த்தம், இது தருமதேவதைக்கும், காலவரிஷிக்கும், உத்தமனுக்கும் முக்திகொடுத்தது (5) வேதாளதீர்த்தம், மண்டபம் ரெயில்ஸ்டேஷனுக்கு மேற்கு 6-மைலுக்குள்பட்டதில்லை நாச்சியம்மன்கோவிலுக்கு தெற்கு பாபசுதரிசனனென்றகந்தருவனுக்கு வேதாளவுரு நீங்கியது. (6) பாபநாசதீர்த்தம் மண்டபம் ரெயில்ஸ்டேஷனுக்கு சமீபம், சுமதியென்ற வேதியனுக்கும், திடமதியென்ற சூத்திரனுக்கும்பாபநிவர்த்தி செய்தது. (7) பைரவதீர்த்தம் ரெயில்ஸ்டேஷனை பாம்பனிலுள்ள சமுத்திரம், (8) கபிதீர்த்தம் பாம்பனிலுள்ள தெப்பக்குளம், (9) சீதாகுண்டம் ரெயில்ஸ்டேஷனை தங்கச்சிமடத்துக்கு சமீபம், சீதை அக்கினியில் குளித்ததீர்த்தம், இந்திரனுக்கு ஹத்திநீங்கியது. (10) மங்களதீர்த்தம் தங்கச்சிமடத்து ரஸ்தாவுக்குத் தென்புறம், இதில்மனோஜபபாண்டியனுக்கும், அவர்பாரி சுபத்திரைக்கும் மகன் சந்திரகாந்தனுக்கும் பாபம்நீங்கி முக்திகொடுத்தது, (11) வில்லூன்றிய தீர்த்தம் சீதாகுண்ட சமீபம் ஸ்ரீராமர் சீதைக்குத் தாகநிவருத்திக்கு வில்லூன்றின நல்ல தீர்த்தம், (12) ரணவிமோசன தீர்த்தம். ஏகாந்தராமர் கோவிலின் வடக்கு, (13) அமிருதவாபி, ஏகாந்தராமசுவாமி கோவிலுக்குள்ளுள்ள கிணறு ஸ்ரீராமர், இலக்ஷுமணர் ஏகாந்தமாய் பேசியஸ்தலம் (14) இலக்ஷுமண தீர்த்தம், ராமேசுவர டவுனில் ரஸ்தாவுக்குத் தென்புறம் பலராமருக்கு சூதகனைக்கொன்ற பாபம் நீங்கினது, யாவருமிதில் க்ஷவரந்தர்ப்பணஞ் செய்யவேணும், (15) ஸ்ரீராமதீர்த்தம் ஸ்ரீராமர்கோவிலின் கீழ்புறமுள்ளது, தருமராஜன் குருவாகிய துரோணாசாரியிடம் அசுவத்தாமர் இறந்ததாகப்பொய் சொன்னதோஷம் நீங்கினது (16) தனுஷ்

கோடிதீர்த்தம், ரத்நாகரமும் மகோததியுஞ்சேர்ந்த சமுத்திரம், டவுனுக்குக்கிழக்கு 17-மைலில்ரெயில்ஸ்டேஷனுண்டு, அசுவத்தாமா நித்திரைசெய்த இளம்பஞ்ச பாண்டவர்களையும் ராஜஸ்திரீகளின் கருப்பங்களையுங் கொன்ற பாபநிவருத்தியும், தருமகுப்த பாண்டியனுக்குப் பயித்திய நிவருத்தியுஞ் சாணக் காட்டருக்கும், குபேரன் மந்திரி பத்திரனுக்கும் பாபநிவருத்தியும், பராவசு, அருவாவசு என்ற இரண்டு ரிஷி புத்திரர்களும் புலித்தோலை யிரவிலணிந்திருந்த தன்பிதாவை யறியாமல் புலியென்று கொன்ற பாபநிவருத்தியும் பிதா பிழைத்ததும், வாக்குதத்தஞ் செய்து கொடாத பாபத்தால் நரியாயும், காய்கனிகளைத் திருடியதால் குரங்காயுமிருந்தவர்களின் பாபங்களை நீக்கியும், துச்சரிதனென்னும் பிரும்மசாரி தாயுடன்புணர்ந்த பாபத்தை நீக்கியு மின்னமனேக மகாபாதகங்களை ஸ்நானத்தாலுந் தரிசனத்தாலுந் தீர்த்துப் புத்தி முக்தியைக் கொடுத்தது. (17) சடாமகுடதீர்த்தம் டவுனுக்கு 3-மைலுக்கு கிழக்கிலுள்ள கோதண்ட ராமசுவாமி கோவிலுக்கு சமீபம் மணமேட்டிக்கு தெற்கிலுள்ள குளம், ராமலக்ஷுமணர் சடையைக்கழுவினது, சுகர், பிருகு, தூர்வாசர் தத்தாத்திரேயரிதில் ஞானமடைந்தது. (18) சுக்கிரீவதீர்த்தம், (19) அங்கததீர்த்தம், (20) ஜாம்பவதீர்த்தம், (21) தருமதீர்த்தம், (22) பீமதீர்த்தம், (23) அர்ச்சுனதீர்த்தம், (24) நகுலதீர்த்தம், (25) சகாதேவதீர்த்தம், (26) திரௌபதி தீர்த்தம், மேல்சொன்ன ஒன்பதுங் கந்தமாதநப் பருவதத்தில் ஸ்ரீராமபாததரிசநத்துக்குபோகும் வழியிலுள்ளது (27) பிரும்மதீர்த்தம், பத்திரகாளி கோவிலுக்குக்கீழ்புறமுள்ளது (28) பரசுராமதீர்த்தம், பிரும்மதீர்த்தத்துக்கு மேல்புறம், (29) அக்நிதீர்த்தம் இராமநாதசாமிசந்நிதியில் சமுத்திரம், இதில் பித்ரு தர்ப்பணமுந் தானமுமுக்கியம். (30) அகஸ்த்தியதீர்த்தம் கோவிலுக்கு வெளிவீதி ஈசாநியத்தில் (31) அமுமத்

தீர்த்தம் கோவில் வெளிவீதிக்கு வடக்குள்ளது, (32) நாக தீர்த்தம், தருமகர்த்தாமடத்திலுள்ளது (33) மாதவதீர்த்தம், மேலக்கோபுரவாசலினுட் புறமுள்ளகுளம் (34) நளதீர்த்தம், (35) நீல தீர்த்தம், (36) கவய தீர்த்தம், (37) கவாக்ஷ தீர்த்தம், (38) கந்தமாதந தீர்த்தம், இந்த ஐந்தும் சேதுமாதவர் சந்நிதியிலுள்ளது, பாண்டியன்செய்த யாகத்துக்கு விஷ்ணு சந்தோஷித்து இலக்ஷிமியை பெட்டிவயது கன்னிகையாக அநுப்பராஜன்பிரியத்துடன் பெண்ணாக வளர்த்துவந்தநாளில் பருவகாலம் வந்த இலக்ஷிமியை பைரவப்பிராமண வேஷத்துடன்விஷ்ணுவிடுக்க பாண்டியன் விலங்கிட, மாதவர் சொப்பநத்தில் தெரிவிக்க, ராஜன் நடுங்கி விலங்கைத்தறிக்கையில் சேதுமாதவராகப்பாண்டியனுக்கும் தரிசிக்கும் பக்தர்களுக்கு மிதிலநுக்கிரகிக்கிறார் (39) பிரும்மஹத்தி விமோசந தீர்த்தம், (40) சூரியபுஷ்கரிணி, (41) சந்திரபுஷ்கரிணி, (42) சங்க தீர்த்தம், (43) சக்கிரதீர்த்தம், இந்த ஐந்தும் பெரியகோவிலிளிரண்டாம் பிராகாரத்திலுள்ளது, (44) கயா, (45) கங்கா, (46) யமுனா, இம்மூன்று தீர்த்தங்களும் பெரியகோவிலுக்குள்ளிருக்கின்றது, (47) காயத்திரி, (48) சாவித்திரி, (49) சரஸ்வதி, இம்மூன்று தீர்த்தங்களும் கிழக்கோபுரம் சக்திக்கொல்லையிலிருக்கிறது, (50) மகா இலக்ஷிமி தீர்த்தம், கிழக்கோபுரம் அநுமார்கோவில் சந்நிதிக்குத் தெற்குள்ள குளம், (51) சிவகங்கை, சுவாமி அம்மன் கோவில்களுக்கு மத்தியிலுள்ள புஷ்கரிணி, (52) ஸாத்தியாமிருதம், அம்மன் கோவிலுக்குளுள்ள கிணறு (53) ஸர்வதீர்த்தம், ராமநாதர் சந்நிதியிலுள்ள கிணறு (54) சடாயுதீர்த்தம், டவுனுக்குதெற்கு மூன்றுமைலில் (55) லங்கை மகாகாளிதீர்த்தம், பத்திரகாளி கோவிலில் (56) கோடிதீர்த்தம், விசுவநாதர் கோவிலுக்கு வடபுறம், இந்தகிணற்றில் யாத்திரை முடிந்தபின் கடைசியில்

முழுகித்தீர்த்தமு மெடுக்கவேண்டும், இது இஷ்டசித்தியும் ஞானமுமுக்தியுங் கொடுக்கும், புராதனஸ்தலம், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரின் பதிகங்கள்-2 திருநாவுக்கரசு நாயனாரின் பதிகம்-1 ஆக பதிகங்கள்-3

81 திருக்கோணமாமலை:—ஈழநாட்டில் இலங்கைத்தீவிலுள்ளது, சிவஸ்தலம். கோணேசர், மாதுமைபாள், சுனை, இது கைலாசகிரியின் கொடிமுடி வாயுவால் எடுத்துவந்தமலை, திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1

82 திருக்கேதீசுவரம்'—இதுவும் இலங்கைத் தீவிலுள்ளது, சிவஸ்தலம் கேதீசர், கௌரியம்மன், பாலாவி, கௌரிதீர்த்தம், பார்வதி, பிருகுமுனி, மாலியவான் பூஜித்தது திருஞானசம்பந்த மூர்த்தி நானார் பதிகம்-1 சுந்தர மூர்த்தி நாயனார் பதிக-1 ஆகபதிகம்-2

83 கதிர்காமம்:—இதுவும் இலங்கையிலுள்ளது சிவஸ்தலம். சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர்முக்கியம், ஆறுபடை வீட்டிலொன்று, நக்கீரதேவர் குன்று தோறாடலென்று பாடியது.

84 மாங்தோட்டம்:—இதுவும் ஈழநாட்டிலுள்ளது, சிவஸ்தலம். சிவன், உமை, திருப்பதிக வைப்புஸ்தலம், கடல்தாண்டியுள்ள இஸ்தலங்களை பாண்டிநாட்டிலெழுதப்பட்டது.

85 சாத்தூர்:— மதுரையின் தெற்கு 44-மைலில் ரெயில் ஸ்டேஷன் சிவஸ்தலம் சுந்தரர், மீநாக்ஷி, இக்ஷ்வாகதிபெருமாள் கோவிலுமுக்கியம்.

86 சிவகாசி:—சாத்தூரின் மேற்கு 12-மைலில் உள்ளது சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, விஷ்ணுவுமுண்டு.

87 திருத்தண்கால்:—சாத்தூரின் மேற்கு 13-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம். தண்கால்அப்பர், அன்னநாயகி பாபநாசதீர்த்தம், சல்லியபாண்டியன், வல்லபன், புலிக்கும்பிரத்தியக்ஷம், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார். மங்களாசாஸநம்.

88 ஸ்ரீ வில்லிபுத்தூர்:—சாத்தூரின் வடமேற்கு 25-மைலில் விஷ்ணுஸ்தலம். வடபத்திரசயநர், ஆண்டாள், முக்குளம். பெரியாழ்வார் என்கிற விஷ்ணுசித்தரிடம் ஆண்டாள் வளர்ந்துவர அவளை விஷ்ணு ஸ்ரீரங்கத்தில் வலியக் கலியாணஞ்செய்து கொண்டார். இதின் வடக்கு 11-மைலில் மலைமேல் காட்டழகர் கோவிலும் வடக்கே 3-மைலில் ஸ்ரீநிவாஸர்சந்நிதியும் இருக்கின்றது, ஸ்ரீ வில்லிபுத்தூராராகிய பிராமணர் ஜநித்துபாடியது, மண்டூகரிஷிக்கு பிரத்தியக்ஷம், ஆண்டாள், இதில் அவதரித்த பெரியாழ்வார், இருவருடைய மங்களாசாஸநம் லக்ஷ்மியான ஆண்டாள், பூமியிலிருந்துண்டானவள், இதில் துளசிமுக்கியம்.

89 திருமங்கைபுரம்:—திருமங்கைபுரம் என்பது (கோவில்ப்பட்டி) ரெயில்ஸ்டேஷன் சிவஸ்தலம் சாத்தூரின் தெற்கு 13-மைலில் பூவணலிங்கேசர், ஷண்பகவல்லி, கெண்டிதீர்த்தம், அகஸ்தியர்பூஜித்து தான்வாதாபியை வதைத்த பாபத்தைநீக்கிக்கொண்டதாக புராணமுள்ளது.

90 கழுமலை:—கோவில்பட்டியின் மேற்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை.

91 சிவகிரி:—கோவில்பட்டியின் மேற்கு 14-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை ஷை ஸ்தலங்கள் இரண்டும் நக்கீரர் குன்றுதோருடலில் சேர்த்துள்ளவைகள்.

92 வாசுதேவநல்லூர்:—கோவில்பட்டியின் மேற்கு 17-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, புராணஸ்தலம்.

93 சங்கரநாராயணர்கோவில்:—கோவில்பட்டியின் மேற்கு 24-மைலில்உள்ளது, சிவஸ்தலம், சங்கரநாராயணர், கோமதி அம்பாள் சக்கரக்குளம், நாகச்சுனை, ஒரேரூபத்தில் சிவனும் விஷ்ணுவும் விளங்குகிறார்கள், அம்பாள் வெகு சக்தியுள்ளவள், குங்குமார்ச்சனை நிரம்ப முக்கியம், இதன் சமீபம் திருவண்ணாமலை, திருப்பதி, என்கிற சிவவிஷ்ணு ஸ்தலங்களுமுண்டு, அகஸ்தியர் பூஜித்தது.

94 திருக்கருவைநல்லூர்:—கோவில்ப் பட்டியின் மேற்கு 29-மைலில் உள்ளது. சிவஸ்தலம், 93-ன் மேற்கு 5-மைலில் பால்வண்ண நாதர், ஒப்பிலாம்பாள், சிவகங்கை, களாமரம், திக்பாலகர்களும், குலசேகரபாண்டியனும் பூஜித்தது. இப்பாண்டியன் யானை யிதில் வலம்வந்ததால் கரிவலம் வந்தநல்லூரென்றும்பெயர், மாணிக்கவாசகரும், இன்னஞ் சில பக்தர்களுந் திருக்கருவையந்தாதி பாடியுள்ளது புராணஸ்தலம்.

95 திருக்கங்கைகோண்டான்—கோவில்ப்பட்டியின்தெற்கு 13-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கங்கைகொண்டேசர், உமாமகேசுவரி, சித்திராநதி, தூர்வாசர் பூஜித்ததாக புராணமுள்ளது. திருக்கங்கைகொண்டான் ரெயில்ஸ்டேஷன்.

96 திருநெல்வேலி:—கங்கைகொண்டானின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வேணுவநேசர், சாலிவாடிசுவரி, காந்திமதியம்மை, தாமிரபரணிநதி, பொற்றாமரை, கம்பாநதி, தாமிரசபை, பிரும்மா, சாண்டிலியர் பூஜித்தது. வேதசர்மாவென்னுஞ் சிவபக்தியுள்ள ஏழைப் பிராமணரால் நிவேதனத்துக்கு யாசித்து உலர்த்திய நெல்லை, வெள்ளங்

கொண்டுபோகாமல் வேலிகட்டி சிவன் காத்ததால் நெல்லையப்பரென்றும் பெயர். ஐப்பசிமாச முத்தரத்தில் பார்வதி கலியாணம் வெகுமுக்கியம். ஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநெல்வேலி ஜில்லா, ரெயில்டேஷன்.

97 குருக்குக்கரை:—(பூந்துறை என்பது) திருநெல்வேலியின் கிழக்கு 1-மைலில் உள்ளது. தாமிரபரணிநதி மத்தியில் சிவஸ்தலம். சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, திருநாவுக்கரசுநாயனாரின் திருத்தாண்டகத்து வைப்புஸ்தலம்,

98 கைலாசபுரம்:—(என்பது சிந்துபூந்துறை) திருநெல்வேலியின் கிழக்கு 1½-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கைலாசநாதர், சிவகாமியம்மை தாமிரபரணி, அகஸ்தியருக்குக் கலியாணக்கோலம் காட்டினவர்.

99 இராமேசநல்லூர்:—என்பது (மூர்த்திசுவரம்) திருநெல்வேலியின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ராமநாதர், சர்க்குணம்பாள், தாமிரபரணி, சடாயு பூஜித்தபுராணஸ்தலம்.

100 திருபுராந்தகம்: என்பது (பாளையங்கோட்டை) திருநெல்வேலியின் கிழக்கு 3-மைலில் உள்ளது: சிவஸ்தலம், திருபுராந்தகர், விசாலாக்ஷி, திருநாவுக்கரசுநாயனாரின் திருவதிகைக்காப்புத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம். இதில் இராமசுவாமி கோவிலும் முக்கியம். சடாயுதீர்த்தமுண்டு.

101 திருச்சேப்பறை:—திருநெல்வேலியின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தியாகேசர், சிவகாமி, தாமிரபரணி, முதலைக்குளமென்னும் நாரிதீர்த்தம், பாரதமாதிபருவம் 236, 237 அத்தியாயப்படி, 1-வர்க்கை. 2-சவுரபேயி,

3-ஸமீசி, 4-புத்புதை, 5-லதை என்கிற ஐந்து அப்சரஸ்திரீகள் காமத்தால், தபசிலிருந்த பிராமணனைப் புணர எத்தனித்ததால், அவரால் முதலையாகச் சபிக்கப்பட்டு இதிலருச்சுனனால் சாபம் நீங்கியது.

102 திருமருதூர்:—திருநெல்வேலியின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கூடலழகர், பார்வதி, தாமிரபரணி, உதகநதி, சித்திராநதி, மூன்றுஞ் சேருமிடம்.

103 ஸ்ரீதங்கிநல்லூர்:—திருநெல்வேலியின் கிழக்கு 7-மைலில் உள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, புராணமுள்ளது. தாம்பிரபரணி, ரெயில்ஸ்டேஷன்.

104 திருமணவைமாநகரம்:—என்பது (மணக்கரை) திருநெல்வேலியின் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மங்களேசர், மங்களாம்பாள், பாண்டவர்கள் பூஜித்த புராணஸ்தலம்.

105 திருமந்திரேசுவரம்:—என்பது (ஓமனூர்) திருநெல்வேலியின் தெற்கு 5-மைலில் உள்ளது சிவஸ்தலம், அர்த்தநாரீசுவரர், அர்த்தநாரீசுவரி, சாமாநதி, பச்சைநதி, சிவன் கன்னிகையை விவாகஞ்செய்தது.

106 திருரோமேசுவரம்:—என்பது (கோடவநல்லூர்,) திருநெல்வேலியின் தெற்கு 5-மைலில் உள்ளது சிவஸ்தலம், ரோமேசர், இமயப்பாவை, சாமாநதி, ரோமரிஷி பூஜித்த புராணஸ்தலம்,

107 ஸ்ரீகைலாசபுரமேன்பது:—ஸ்ரீ வைகுண்டம் திருநெல்வேலியின் கிழக்கு 14-மைலில், ரெயில்ஸ்டேஷன், சிவஸ்தலம். கைலாஸநாதர், சிவகாமி, தாம்ரபர்ணி, பிருதுசக்கரவர்த்திக்குக் கைலாஸதரிசநம் காட்டியபுராணஸ்தலம் இதினடுத்த வீரவநல்லூரில் அழகியநரசிங்கர் முக்கியம்.

108 ஸ்ரீ வைகுண்டம்—விஷ்ணுஸ்தலம். கண்ணபிரான், வைகுண்டநாதர், வைகுண்டவல்லி, பிருகுதீர்த்தம், பிருது சக்கரவர்த்திக்கு மிந்திரனுக்கும் பிரத்தியக்ஷம் நம்மாழ்வார் மங்களாசாஸநம் இதுமுதல் ஒன்பது ஸ்தலங்களில் நவதிருப்பதியாத்திரையும் ஒரேநாளில் எல்லாஞ்சேர்ந்த கருடசேர்வையு முக்கியம்.

109 வரகுணமங்கை:—திருநெல்வேலின் கிழக்கு 16மைலில் உள்ளது. ஸ்ரீவைகுண்டத்தின் கிழக்கு ஒருமைலில் விஷ்ணுஸ்தலம். விஜயாஸநமூர்த்தி, வரகுணவல்லி, அக்நிதீர்த்தம், அக்நிதேவருக்குப் பிரத்தியக்ஷம், நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

110 திருக்குளந்தை:—யென்பது (பெருங்குளம்) திருநெல்வேலியின் கிழக்கு 22-மைலில் உள்ளது, விஷ்ணுஸ்தலம் மாயக்கூத்தர், குழந்தைவல்லி, பெருங்குளம், பிருகஸ்பதிக்கு பிரத்தியக்ஷம், நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

111 நத்தம்:—திருநெல்வேலியின் கிழக்கு 21-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம். ஆதிமூலப்பெருமாள், இலக்ஷுமி, இதின் சமீபம் தென்திருப்பதியும் இரட்டைத்திருப்பதியுமுண்டு. நவதிருப்பதிகளும் தாம்ரபர்ணிநதி தீரத்திலிமுள்ளது, ஒரேநாளில் தரிசிப்பதுமுக்கியம்.

112 திருப்புளிங்குடி;—திருநெல்வேலியின் கிழக்கு 17-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம். காய்சினவேந்தர், புளிங்குடிவல்லி, வருணதீர்த்தம், நிருதிதீர்த்தம், புஜங்கசயநம், நிருதிக்கும் வருணனுக்கும் யமனுக்கும் பிரத்தியக்ஷம், நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

113 தொலைவில்லிமங்கலம்:—திருநெல்லிவேலியின் கிழக்கு 20-மைலில் உள்ளது. விஸ்ணுஸ்தலம், இது இரட்டைத்

திருப்பதி, சந்நிதி இரண்டு, அரவிந்தலோசநர், கருந்தடங் கண்ணி. தேவபிரான், நாச்சியார், வருணதீர்த்தம், தாம்ர பர்ணிநதி, இந்திரன், வாயு, வருணனுக்கும் பிரத்தியக்ஷம், நம்மாழ்வார், மங்களாசாஸநம், வைகாசிபூர்ணமியில் அவ தரித்த நம்மாழ்வார், சாமவேதத்தைத் திருவாய்மொழியா யும் மற்றவேதங்களை விருத்தம் அந்தாதியாயுஞ் செய்தவர்.

114 திருப்பேரை:—திருநெல்வேலியின் கிழக்கு 22-மை லில் உள்ளது, விஷ்ணுஸ்தலம், ஆழ்வார்திருநகரியின் தென் கிழக்கு 4-மைலில் நிகரில்லா முகில்வண்ணர், குழைக்காத வல்லி, சுக்கிரபுஷ்கரிணி, சுக்கிரன், பிரும்மா, ஈசானருத்திர ருக்கும் பிரத்தியக்ஷம், நம்மாழ்வார் மங்காளாசாஸனம்.

115 திருக்கோளூர்:—என்பது (திருக்களூர்) திருநெல் வேலியின் கிழக்கு 19-மைலில் நிக்ஷேபவித்த மூர்த்தி, கோளூர்வல்லி நாச்சியார், தாம்பிரபாரணி, குபேரதீர்த்தம், புஜங்கசயநம் குபேரனுக்கும் மதுரகவியாழ்வாருக்கும் பிரத் தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸனம், சித்திரைமாசம் சித்திரையில் மதுரகவியாழ்வார் ஜநநஸ்தலம்.

116 ஆழ்வார்திருநகரி:—என்பது (திருக்குருகூர்) திருநெல் வேலியின் கிழக்கு 18-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஆதிநாதர், ஆதிநாதவல்லி, பிரும்மதீர்த்தம், பிரும்மாவுக் கும், மதுரகவியாழ்வாருக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸனம் இது கடைசீ நவதிருப்பதி. நம்மாழ்வாரும் மணவாளமாமுனியும் அவதரித்த ஸ்தலம்,

117 திருக்காந்தீசுவரம்:—என்பதும் (ஆழ்வார்திருநகரி) சிவஸ்தலம், காந்தீசுவரர், தருமசம்வர்த்தினி, தாமிரபரணி, அகஸ்தியரும், கரூர்தேவரும் பூஜித்த புராணஸ்தலம்.

118 திருமுறப்பநாடு:—ஆழ்வார்திருநகரியின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கைலாசநாதர். சிவகாமி, தாம்ரபரணி ஆங்கிரச ரிஷி பூஜித்தது.

119 திருச்சோமேசுவரம்:—ஆழ்வார்திருநகரின் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். இது ஆத்தூர், சோமநாதர், சோமசுந்தரி, சோமதீர்த்தம், தாம்பிரபரணி, சமுத்திரத்தில் சங்கமமாகிற தீர்த்தம், பிருகஸ்பதி தன் தமயன் பாரியாளான கருப்பமாயிருந்தமமதாதேவியுடன்துராகிருதமாய்ப் புணர்ந்ததோஷத்தால் குருவின் பாரியாள் தாரையுந்தானே வலுவில் சிஷனுன சந்திரனைச்சேர்ந்து புதனைப்பெற்றாள். குருபத்தினியுடன்சேர்ந்த சந்திரனும், தாரையும், குருவும் ஸ்தலத்தில் ஸ்நானஞ்செய்து பூஜித்துப் பாபநிவர்த்தியானது.

120 திருப்பிரமேசுவரம்:—என்பது (ஆனையப்பபிள்ளை சத்திரம்) ஆழ்வார்திருநகரியின் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிரும்மேசர், பிரும்மவித்யை, பிரும்மதீர்த்தம், சமுத்திரம் பிரும்மா பூஜித்த புராணஸ்தலம்.

121 திருச்சேர்ந்தமங்கலம்:—ஆழ்வார்திருநகரியின் தென் கிழக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கைலாஸநாதர், சிவகாமி, சமுத்திரம், வருணன் பூஜித்தபுராணஸ்தலம்.

122 திருச்செந்தூர்:—ஆழ்வார் திருநகரியின் தென்கிழக்கு 18-மைலில் உள்ளது சிவஸ்தலம். ரெயில்ஸ்டேஷன் சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, கந்தமாதன பருவதம், வேலாயுதகூபம், வதனாரம்பமாகிய சமுத்திரம், திருநாவுக்கரசு நாயனாரின் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்தில் கந்தமாதனத்துளார் என்று பாடியவைப்புஸ்தலம், சிவனைந்து முகத்துடன் அதோமுகமுங் கூட்டி ஆறுமுகமானார். ஸோமாஸ்கந்த முகூர்த்தம், ஸத்தாகிய சிவனும், சித்தாகிய

உமையும், ஆநந்தமாகிய குமாரனுங் கூடியதாதலால் சிவனும் ஸ்கந்தரும்வேறில்லை, தேவர்கள் வேண்டுதலின்படி அசுரர்களைக்கொல்ல அவதரித்த பாலசுப்பிரமணியக் கடவுள். நவவீரர்கள், பூதசேனைகள், தேவசேனைகளுடன் யுத்தத்தில் தாரகனையும் கிரௌஞ்சனையுங்கொன்று, தேவகிரிமுதலிய க்ஷேத்திரங்களில் தங்கிகடைசியா யிதிலமர்ந்து பிருகஸ்பதியால் சூரபத்மன் விருத்தாந்தங்களைக் கேட்டு வீரபாகுவை வீரமகேந்திரபுரத்துக்குத் தூதனுப்ப அவர் இலங்கையை அழித்து சூரபத்மனால் சிறையிலிருந்த ஜயந்தனைத்தேற்றி சூரபத்மனுடன் பேசித்திரும்பி வந்தபின் யாவருடனும் சுப்பிரமணியர் வீரமகேந்திரம்போய், சூரபத்மனையும் சிம்மமுகனையும் புத்திரமித்திர சேனைகளுடன்கொன்று, அவன் பட்டிணத்தைக்கடலில் முழுகடித்துச் சூரனைமயில் வாகனமாக்கிக்கொண்டு இதில்தங்கி, அகஸ்தியர், சுகர், நாரதர்முதலிய ரிஷிகளுக்கும் இந்திராதிதேவர் களுக்கும், விசுவரூபதரிசனங் காட்டித்தானுஞ் சிவனைபூஜித்த ஸ்தலம், இக்கலியுகத்திலும், சந்தஞ்சலமாகிய இதில் 2000-திருஸ்வதந்திரப் பிராமணர்கள் பூஜித்து வசிக்கிறார்கள். இதுமுக்திஸ்தலம், நக்கீரதேவர் இவரைவேண்டி தன்குறைநீங்கும்படி முருகாற்றுப்படையில் பாடிய ஸ்தலம்.

123 குலசேகரன் பட்டினம்:—திருச்செந்தூரின் தெற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், விஜயகாக்ஷி கொண்டேசர், அறம்வளர்த்தநாயகி; சமுத்திரம் மார்க்கண்டேயர்பூஜித்தது.

124 திருவிஜயமாநகரம்:—திருச்செந்தூரின் தெற்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மனோன்மணீசர், சிவகாமி, சமுத்திரம். விஜயதீர்த்தம். பிரும்மபுரி, நாராயணபுரி யென்றும் பெயருள்ள ஸ்தலம். விஷ்ணு, பிரும்மா, விஜயன், ஜயனென்னும் பாரிஷதர்களும் பூஜித்தது.

125 நவலிங்கபுரம்:—திருநெல்வேலியின் சமீபம் சிவஸ்தலம், நவலிங்கேசர், சிவகாமி, தாம்பிரபரணிநதி, தநுர் மாசம் முக்கியம். மூன்றரைக் கோடி தீர்த்தங்கள் வரும் ஸ்தலம்

126 சித்தமல்லி:—திருநெல்வேலியின் தென்மேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கந்தருவேசர், லோகநாயகி, தாம்பிரபரணிநதி, தெரியாமல் மாதுருஹத்திசெய்த கந்தருவன் பூஜித்து பாபம்நீங்கியது. இதன்சமீபம் பாணதீர்த்தமும் வெங்கடாசலபதியும் முக்கியம். திருநாவுக்கரசு நாயனாரின் அடைவுத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

127 தூர்வாசநல்லூர்:—என்பது (காளத்திநகரம்) திருநெல்வேலியின் தென்மேற்கு 15-மைலில் உள்ளது சிவஸ்தலம், காளத்திசர், பூங்கோதை, காளதீர்த்தம், தூர்வாஸ ரிஷி பூஜித்தது.

128 ஸ்ரீவரமங்கை.—என்பது (வானமாமலை, நாங்கிநேரி) திருநெல்வேலியின் தெற்கு 19-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், தெய்வநாயகமூர்த்தி, வாநமாமலைப்பெருமாள் ஸ்ரீவரமங்கைஇந்திரபுஷ்கரணி, சேற்றுதாமரை, ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி,சேனைமுதலி,பெரியதிருவடி, சாமரக்கன்னிகைகள் சூரியன், சந்திரன், இந்திரன், பிரும்மா, ரோமசர்மரிஷி, பிருகு, மார்க்கண்டேயருக்கும் பிரத்தியக்ஷம் நம்மாழ்வார் மங்களாசாஸனம்.

129 நாங்குநேரி:—விஷ்ணுஸ்தலம், தத்தாத்திரேயப்பெருமாள், இலக்ஷுமி, பச்சைநதி, புராணஸ்தலம். சிவன் கோவிலும் முக்கியம்.

130 திருக்குறுங்குடி:—சிவஸ்தலத்தில் சட்டைநாதர்பாகம் பிரியாநாயகி, நம்பிநதி, இது பாகவதப்புராணம் தசமஸ்கந்

தம் (88) அத்தியாயப்படி பஸ்மாசுரன் சிவனை நோக்கி, அருந்தவஞ் செய்ததால் சிவன் பிரசந்நராய் என்ன வரம் தேவையெனலும், பஸ்மாசுரன் என் கையை யார்தலையில் வைத்தாலும் பஸ்மமாகும்படி வரங்கேட்கச் சிவன் கொடுத்தவுடன் உன் தலையில் கைவைத்துச் சோதிக்கிறேனென்று பஸ்மாசுரன் சிவனைதுரத்துவதை விஷ்ணு அறிந்து மோகினியுருவுடன் வந்து பஸ்மாசுரனைமயக்கி யென்னுடன் சேர நீ சுத்தாசமநம் செய்யென்று சொல்லி அவன்கையை அவன் தலையில் வைத்தவுடன் பஸ்மமானதால், விஷ்ணு அவனை ஏமாற்றிய பாபநிவருத்தி செய்தஸ்தலம். இது குறுந்தங்குடி என்னும் வைப்புஸ்தலம்,

131 திருக்குறுங்குடி:—திருநெல்வேலியின் தென்மேற்கு 26-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், திருப்பாற்கடல்நம்பி குறுங்குடிவல்லி, நம்பிநதி, திருப்பாற்கடல் வைஷ்ணநம்பி, மலைமேல்நம்பி, நின்றநம்பி, இருந்தநம்பி, கிடந்தநம்பி, யென்ற பஞ்சதுரை யென்று பெருமாள்பெயர்கள். பஸ்மாசுரனால் துரத்தப்பட்ட சிவனுக்கு பிரத்தியக்ஷம். நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் வேதங்களைத் திருவாய்மொழியாகச் செய்த நம்மாழ்வார், பூஜித்து அவதரித்தஸ்தலம்.

132 திருக்களக்காடு:—திருநெல்வேலியின் தென்மேற்கு 22-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சகலபுவநேசர், உமாதேவி சாமாநதி, பச்சைநதி, பாரதமாதிபருவம் (212) அத்தியாயம் தமயந்தியின் பெண்ணான நாளாயினிபின்கணவன் மௌத்கலியரிஷி கிழவராய் தன்னைக்கூடையில் தூக்கிக்கொண்டு தாசிவீட்டில் விடச்சொல்லப் பதிவிருதையான நாளாயநியும் புருஷனைத் தாசிவீட்டில் விட்டுத் திரும்பித் தலையில் கூடையுடன்வரும்வழியில் திருடிஞ்றொன்று அபவாதம்சாட்டிமாண்ட

வியரிஷியை ராஜன் கழுவிலேற்றித் தொங்குகிறவர் மீதில் கூடை யிடித்ததால் மாண்டவிபரிஷி சூரியோதயத்துக்குள் விதவையாகுகவென்று நாளாயநியைச்சபிக்க, நாளாயநியும் சூரியோதயமாகாமலே யிருக்கட்டுமென்று சபிக்கச் சிலநாள் இருட்டாகவே யிருந்ததால் உலகம் தத்தளிக்கப் பின்தேவர்களின் வேண்டுகோளின்படி சிவன் சாபங்களைத்தீர்த்து சூரியோதயமானபின், நாளாயநியும், ஆணிமாண்டவிபரிஷியும் பூஜித்தஸ்தலம் பதிந்தேதகிபென்றைந்து தாங்கேட்ட நாளாயநிதிரௌபதியானாள்.

133 வள்ளியூர்:—திருநெல் வேலியின் தெற்கு 25-மைலில் உள்ளது. சிவஸ்தலம். முருகேசர், உமை, முருகர், வள்ளி, தெய்வானை, சரவணப்பொய்கை, சுப்பிரமணியர் முக்கியஸ்தலம். நக்கீரர்குன்று தோருடலில் முருகாற்றுப் படையிலுள்ளது.

134 திருவேண்குடி திருநெல்வேலியின் தென்மேற்கு 25-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சொக்கேசர், சிவகாமி, சிவகங்கை, அநுமாரும், புறுவுக்காகத்தன் சதைபெல்லாமறுத்து திராசிலிட்டும் புறுவுபாரததால் தானேதிராசி லுட்கார்ந்து தன்னைப்பக்ஷிக்கும்படி புறுவைத்துரத்திவந்த கழுகாகிய தேவேந்திரனுக்குச் சொன்ன தயாசீலரான சிபிசக்கரவர்த்தியும் பூஜித்தஸ்தலம். திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனர் க்ஷேத்திரக்கோவையிலுள்ள திருப்பதிகவைப்பு ஸ்தலம்.

135 திருராதாபுரம்:—திருநெல்வேலியின் தெற்கு 40-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வாருணபாண்டியேசர், நித்யகலியாணி, சிவகங்கை, வருணபாண்டியன் பூஜித்தது.

136 சோமாதேவி:—திருநெல்வேலியின் மேற்கு 12-மைலில் உள்ளது. ரெயில்ஸ்டேஷன், சிவஸ்தலம். வைத்தியநாதர்

அம்மைநாயகி, ஒப்பிலாம்பாள், சிவகாமி, தாம்ரபர்ணிநதி, புராணமுள்ளது

137 திருப்புடார்ச்சுனபுரம்:—என்பது திருப்புடைமருதூர், சேரமாதேவியின் மேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், புடார்ச்சுனபுரேசர், மங்கைநாயகி, தாம்ரபரணிநதி, கடனாநதிசங்கமம், இந்திரன் பூஜித்தது, ஒரு ரிஷிக்காக சாய்ந்த லிங்கம், அடுத்த அத்தாழை நல்லூரில் கஜேந்திரனுக்கனுக் கிரகித்த ஆதிமூலப்பெருமாள், முக்கியம்.

138 திருக்கோஷ்டீசுவரம்:—என்பது (ஊர்க்காடு) சேரமாதேவியின் மேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோஷ்டீசுவரர், கொடியிடைநாயகி, தாம்பிரபரணி, அகஸ்தியர் பூஜித்தது வைப்புஸ்தலம்.

139 திருக்காசியபேசுவரம்:—என்பது (அம்பாசமுத்திரம்) சேரமாதேவியின் மேற்கு 10-மைலில் உள்ளது, சிவஸ்தலம் காசியபேசர், மதுராம்பாள், தாம்பிரபரணி. காசியபரும், அகஸ்தியரும் பூஜித்தது. அம்பாசமுத்திரம்ரெயில்ஸ்டேஷன்

140 திருமூலநகரம்:—என்பது (அம்பாசமுத்திரம்) திருக்காசியபேசுரத்திற்கு சமீபம் சிவஸ்தலம், திருமூலநாதர், லோகாம்பாள். தாம்பிரபரணி, அகஸ்தியர் பூஜித்தது. (மேலப்பாளயம் ரெயில்ஸ்டேஷன்.)

141 கல்லிடைக்குரிச்சி:—அம்பாசமுத்திரத்தின் கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன். உமை, லக்ஷ்மீபதிநாதர் கோவிலும் முக்கியம். இரண்டாயிரம் வீடுகளுக்கு மேற்பட்ட பதினெட்டு அக்கிராரங்களுள்ள பெரிய டவுன். தீக்ஷிதாளதிகம். கல்லிடைக்குரிச்சு ரெயில்ஸ்டேஷன்.

142 அயனீசுவரம்:—என்பது (பிரும்மதேசம்) அம்பாசமுத்திரத்தின் வடக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம்.

கைலாஸநாதர், பெரியநாயகி, பிரும்மதீர்த்தம் இதில், ராஜ மன்னார்பெருமாள் வெகுபிரபலம். சிவனை பிரும்மா பூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

143 பாபநாசம்:—என்பது (பொதியமலை) அம்பாசமுத்திரத்தின் தென்மேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பாபநாசசுவாமி. லோகாம்பாள், பொதியமாமலை, தாம்பிரபரணிநதிக்கும், அறியாமல் தங்கையைப்புணர்ந்த வணிகனுக்கும் பாவம் தீர்த்தஸ்தலம். பார்வதி ஸ்நானஞ்செய்து குங்குமங் கலந்ததால் தாம்பிரபரணி இதில் தாமிரவர்ணத்துட னுற்பத்தியானது. சித்திரைமாதம் திருமணக்காக்ஷி முக்கியம் இதில் பாணதீர்த்தம் விழுமிடத்தில், ஆடி அமாவாசை, தை அமாவாசை முக்கியம். திருநாவுக்காசரின் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

144 அக்கீசுவரம்:—என்பது (வன்னிக்காந்தை) அம்பாசமுத்திரத்தின் மேற்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வன்னிலிங்கேசர், சிவகாமசுந்தரி, வன்னிதீர்த்தம் அக்கி தேவர் பூஜித்தது. திருநாவுக்காசு நாயனாரின் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம். (ஆழ்வார்குரிச்சி ரெயில்ஸ்டேஷனுக்கு சமீபம்.)

145 அத்திரீசுவரம்:—என்பது (சிவசைலம்) ஆழ்வார் குரிச்சியின் மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அத்திரீசுவரர், சைலநாதர், பரமகல்யாணி, கிருபாநதி அத்திரிமுனி பூஜித்தது. திருநாவுக்காசநாயனார் திருத்தாண்டகத்தி லுள்ளவைப்புஸ்தலம்.

146 தேன்காசி:—அம்பாசமுத்திரத்தின் தென்மேற்கு 29-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சுந்தரேசர், லோகநாயகி

சித்திராநதி. அகஸ்தியர் பூஜித்தது. காசிக்கு நிகரென்று புராணமுள்ள ஸ்தலம். தென்காசி ரெயில்ஸ்டேஷன்.

147 திருக்குத்தாலம்:—தென்காசிக்கு மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், குறும்பலாவீசர், குழல்வாய்மொழியாள், சித்திரசபை, அகஸ்தியமலையில் நீர்வீழ்ச்சியில் ஆடி, தை, மாசி அமாவாஸை முக்கியம். அகஸ்தியர் விஷ்ணுவை சிவலிங்கமாக்கியது. விஷ்ணுவும் முக்கியம். மாணிக்கவாசகர் பாடியது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரின் பதிகம்-2.

148 திருமலை:—தென்காசியின் மேற்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன் உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சரவணப்பொய்கை, சுந்தரமூர்த்தி நாயனாரின் திருநாட்டுத் தொகையி லுள்ள வைப்புஸ்தலம். குன்றுதோறாடலென்னும் படை வீட்டினுளொன்று. நக்கீரரின் முறுகாற்றுப்படையிலுள்ளது.

149 தேவீசுவரம் என்பது (வடிவீசுவரம்) கந்நியாகுமாரியின் வடக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தேவீசுவரர், அழகியநாயகி, சமுத்திரம், தேவி பூஜித்ததாக புராணமுள்ளது. திருநாவுக்கரசு நாயனார் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

150 அகஸ்தீசுவரம்:—கந்நியாகுமாரியின் வடக்கு 3-மைலிலுள்ளது. சிவஸ்தலம், அகஸ்தீசுவரர், அமிருதவல்லி, சமுத்திரம், அகஸ்தியரும், அவர்பத்னி லோபாமுத்திரையுமிதில் பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனாரின் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

151 கந்நியாகுமாரி:—திருநெல்வேலியின் தெற்கு 63-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், கந்நியாபரமேசுவரி, பகவதி, இரண்டுசமுத்திரம் சேருமிடம் பரசுராமரிதில், தவ

மியற்றிப் பூஜித்து தன் தகப்பன் ஜமதக்நிரிஷி உத்தரவுப் படித் தாயைக் கொன்ற பாவத்தையும் கார்த்தவீரியார்ச்சுனனைப் பரசுராமர் கொன்றபழிக்கு அவன் புத்திரர்கள் ஜமதக்நி ரிஷியைப் பரசுராமரில்லாத சமயத்தில் கொன்றுவிட்டதால் க்ஷத்திரியர்களை உலகத்தி லில்லாமல் கொன்று வேரறுத்த பாவத்தையும் தீர்த்துக்கொண்டு, பரசாயுதமும் பெற்ற ஸ்தலம். திருநாவுக்கரசு நாயனாரின் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

152 சுசீந்திரம்:—கந்நியாகுமாரியின் வடமேற்கு 15-மையில் உள்ளது. சிவஸ்தலம், தாணுமாலியர், உமாதேவி, செய்யாறு, திருக்குளம், சமுத்திரம், பிரும்மாவும், இந்திராதி தேவர்களும் பூஜித்தது. சந்நிதியில் ஒற்றைக்கல் மண்டபமுக்கியம்.

153 நாகா கோவில்:—கந்நியா குமாரியின் வடமேற்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம், நாகநாதர், நாகாம்பாள், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, நாகர்கள் பூஜித்தது. சுப்பிரமணியர் முக்கியஸ்தலம். திருநாவுக்கரசு அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம். நாகர் கோவிலுக்கு வடக்கு ஒரு மைலில் திருவண் பரிசார மென்னும் விஷ்ணுஸ்தலமும், நாகர் கோவிலுக்கு வடமேற்கு 13-மைலில் திருவாட்டாறு யென்னும் விஷ்ணுஸ்தலமும் 8-வது அத்தியாயத்திலுள்ள பாடல் பெற்ற ஸ்தலங்கள்.

154 சேற்றூர்:—காளையார் கோவிலின்தெற்கு 9-மைலில் உள்ளது. சிவன், உமை திருநாவுக்கரசு நாயனாரின், திருவாரூர்த் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# மூன்றும் அத்தியாயம்.



## சோழநாடு கீழ்பாகம் காவேரியின் தென்கரை.

### (பிருதிவிலிங்க ஸ்தலம்)



1 திருவாரூர்:—தஞ்சாவூரின் கிழக்கு 40-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தியாகராஜர், கமலாம்பாள், வல்மீகநாதர், நீலோத்பலாம்பாள், ஆடகேசர், சித்தேசர், ஆநந்தேசர், அசலேசர் முதலிய முன்னூறு லிங்கங்களுண்டு. கமலாலயம், சங்கதீர்த்தம், அற்புதகூபம், பாதிரிமரம், மாணிக்கவாசகர் பாடியது ஈசானர், அகஸ்தியர், வசிஷ்டர், மார்க்கண்டேயர் அசிதர், மனுச்சோழராஜன், இந்திரன் பூஜித்தது. முசுகுந்தசக்கரவர்த்தி இந்திரனின் சத்துருவைக் கொன்றுதவி செய்ததால், தான் பூஜித்துவந்த தியாகராஜரைக் கேட்டவருக்கதைக்கொடுக்க மனமில்லாமல் வேறு தியாகராஜர் செய்து ஆறுதரங்கொடுத்து மவைகளை முசுகுந்தர் 122, 128, 142, 146, 149, 157 இலக்கங்கள் குறித்த ஆறு ஸ்தலங்களிலமைத்துப் பூஜித்துங் கடைசியாய் சிவனும் இந்திரனுக்களித்திருந்த வீதிவிடங்கத் தியாகராஜரை முசுகுந்தர் பெற்று இதிலமைத்து பூசித்தஸ்லம். இதில் ஜனித்தவர்களுக்குமுக்தி. சுந்தரமூர்த்திநாயனருக்கு திருத்தொண்டர் தொகைபாடும்படி, தில்லைவாழ்ந்தணரென்றடி யெடுத்துக் கொடுத்தும், பரவைநாச்சியாரைச் சமாதானஞ்செய்ய இரவில் சிவன்தூதுசென்றும், இன்னுமனேகம் லீலைகளுஞ் செய்தஸ்தலம். விறல்மிண்டநாயனார், கழற்சிங்கநாயனார் செருத்துணைநாயனார் முக்திஸ்தலம். தியாகேசருளால் ஜலத்தைவிட்டு தீபங்களேற்றிய நமிநந்தியடிகள்நாயனாராகிய பிரா

மனுக்குத் திருவாரூர் தேர்திருநாளில் யாரைத்தொட்டா லும் ஸ்நானஞ் செய்யாமல் சிவபூஜைசெய்யலாமென்று சிவன் சொன்னார். கண்தெரியாமல் குளம்வெட்டிய தண்டியடிகள் நாயனாருக்குக் கண்கொடுத்தும் அவருக்கிடையூறு செய்த சமணர்களுக்குக் கண்ணைக்கொடுத்தும் ஆரத்தியஸ்தலம். சமஸ்த தேவர்களுந்தினம் பூசிக்கும் ஸ்தலம். திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-5. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-21. சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-8. ஆ பதிகம்-34.

2 திருவாரூர் இரண்டாம் பிராகாரத்திலுள்ள அறநெறிக் கோவிலில் சிவதஸ்லம், அகிலேசர்; அறநெறியப்பர், புவ னேசுவயு, வண்டார்குழலி, தேவாசிரியனென்று மாயிரக்கால் மண்டபம். மனுநீதிச்சோழன்மகன் வீதிவிடங்கன் வீதியில் தேர்விடும்போது ஒரு சிறுபசுவின்கன்று துள்ளிவந்து தேர்க் காலிலிறக்க மநுச்சோழன் பழிக்குப்பழி தன்னொருபுதல் வனை வீதியில் படுக்கவைத்து, அவன் பேரில் தானே தேரை நடத்த, தியாகேசர், ரிஷபாரூடராய் காக்ஷிதந்து கன்றை யும், வீதிவிடங்கனையும் இறந்த மந்திரியையும் பிழைப்பித்த ஸ்தலம். சிதம்பரத்திலிருந்த தேவாரப்பதிகங்களைக் கண் டெடுத்து அவைகளை ஏழுதிருமுறைகளாக்கி, அவற்றையும் எட்டாந் திருமுறையாகிய, திருவாசகம், திருக்கோவையை யும், ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பா, திருப்பல் லாண்டையும் பத்தாந்திருமுறையாகிய திருமந்திரத்தையும், திருஆலவாயுடையார், நக்கீரர் காரைக்காலம்மை, சேரமான் பெருமான்நாயனார், பட்டினத்துப்பிள்ளை, நம்பியாண்டார் நம்பி, சேந்தனார், புருஷோத்தமநம்பி, கருர்த்தேவர், மாளி கைத்தேவர், அமுதனார், சேதிராயர்முதலிய பன்னிருவர் செய்த பிரபந்தங்களாகிய பதினோராந் திருமுறையையும் செப்பேடுசெய்து தியாகேசர் சந்நிதியில் ஏற்றுவித்த அபய

குலசேகரச் சோழனும், சேக்கிழார் சுவாமிசெய்த பெரிய புராணத்தை பனிரண்டாந் திருமுறையாக வற்றுவித்த அனபாயச் சோழனுமிதில் அரசாண்டு பூசித்த ஸ்தலம். கோவில் 5 வேலிநிலம், குளம் 5 வேலி, ஊர் 5 வேலி, ஓடை 5 வேலி சுவாமிக்குத்தினம் நிவேதனமாகும் பாகல் போடும் புஞ்சைநிலம். (5-வேலி) திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-2.

3 திருவாரூர் துலாநயினார்கோவில், கீழவீதிமகாரத சமீபம். சிவஸ்தலம், பரவையுண்மண்டலேசர், பஞ்சின் மெல்லடியம்பாள், சுந்தரமூர்த்திநாயனார் திருவொற்றியூரில் பூக்கட்டுந்திருத்தொண்டு செய்திருந்த சங்கிலிநாச்சியாரை இனிப்பிரியேனென்று சத்தியஞ்செய்து, கலியாணமான பின் பிரிந்தமையால் இரண்டுகண்களு மிழந்தார். பதிகம்பாடிக் காஞ்சீபுரத்திலொரு கண்ணையும், இதிலொரு கண்ணுமடைந்தார். (வருணனேவிய கடலை உண்டமைபற்றி இஸ்தலத்துக்கு பரவையுண்மண்டலி யென்றும் பெயர்.) சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1.

4 தப்பளாம்புலியூா:—திருவாரூரின் தெற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஏகாம்பரநாதர், பார்வதி புராணமுண்டு.

5 புலிவலம்:—திருவாரூரின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தக்ஷிணகோகர்ணேசர், அநந்தவல்லி, பாலாமிருதம், திருநாவுக்கரசுநாயனாரின் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்துள்ளது.

6 மணற்கால்:—திருவாரூரின் தென்மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, திருநாவுக்கரசுநாயனாரின் திருவாரூர் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

7 இராப்பட்டீசுவரம்:—திருவாரூரின் மேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, திருநாவுக்கரசுநாயனரின் திருவாரூர் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

8 திருவிளமர்:—திருவாரூரின் தென்மேற்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பதஞ்சலிமனோஹரர், யாழின்மொழியாள், அக்கினிதீர்த்தம், முக்கிதீர்த்தம் இதிலுள்ள அக்கினிஸ்டங்களை அக்கினியும் பதஞ்சலிவியாக்கிரபாதரும் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. மற்றிருவர்கள் வைப்புஸ்தலம்.

9 திருக்கரையபுரம்:—என்பது (காவிரப்) திருவாரூரின் வடமேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், காவிரேசர், பிரத்தியக்ஷமின்னும்பாள், பிரும்மதீர்த்தம், வாததீர்த்தம், கௌதமர் பூஜித்தது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனாரின் வைப்புஸ்தலம்.

10 திருவண்டாம்பாலை:—திருவாரூரின் மேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோகர்ணேசர், உமை, காமதேனு பூஜித்தது.

11 திருக்கண்ணங்குடி:—கீழ்வேளூரின் கிழக்கு 2-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், சியாமளமேனிமூர்த்தி, அரவிந்தவல்லி, ராவணபுஷ்கரணி, பிருகு, சைத்தியர், கௌதமருக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். திருக்குரையலூரில், கார்த்திகைமாசம், கிருத்திகையில் திருமங்கையாழ்வார் ஜனித்து அரசாண்டார்.

12 திருக்கண்ணமங்கை:—திருவாரூரின் மேற்கு 5-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், பக்தவத்ஸலர், அபிஷேகவல்லி, தரிசநபுஷ்கரணி, வருணனுக்கும், ரோமசர்ம ரிஷிக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

13 திருப்பெருவேளூர்:—என்பது (காட்டூர் அய்யம்பேட்டை) திருவாரூரின் வடமேற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிரியாஈசுவரர், மின்னனையாள், மூஷிகதீர்த்தம் சக்தி தீர்த்தம், கௌதமரும் சக்தியாகிய பார்வதியும் சுப்பிரமணியரும் பூஜித்தது. திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2. சுந்தரமூர்த்திநாயனார் வைப்புஸ்தலம்.

14 திருத்தலையாலங்காடு:—திருவாரூரின் வடமேற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஆடவல்லேசர், திருமடந்தையம்பாள் சங்கரதீர்த்தம், சொர்ணதீர்த்தம், தாருகாவனத்துரிஷிகளேவிய முயலகன் முதுகின்மீது நடனஞ்செய்தவர், கபிலரிஷிபூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் வைப்புஸ்தலம்.

15 திருப்பள்ளியின் முக்கூடல்:—என்பது (அரியான் பள்ளி) திருவாரூரின் வடகிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், முக்கோணேசர், மைமேவுகண்ணி, முக்கூடல்தீர்த்தம், கற்கரிஷிபூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1.

16 கேக்கரை:—என்பது (கயாக்கரை) திருவாரூரின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ராமலிங்கம், உமை, ராமர்பூஜித்தது. மேல்புறம் ராமசாமிகோவிலுமுண்டு (இதற்கு குருவிராமேசுவரமென்றும் பெயர்.)

17 திருராமநதீசுவரம்:—என்பது (திருக்கண்ணபுரம்) திருவாரூரின் வடகிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ராமலிங்கேசர், கருவார்குழலியம்பாள், ராமதீர்த்தம், கணிகங்கை, ராமரும், மார்க்கண்டேயரும் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

18 ஷை திருக்கண்ணபுரம் விஷ்ணுஸ்தலம், சௌரிராஜ சுவாமி, கண்ணபுரிநாயகி, நித்யபுஷ்கரணி, கண்ணுவரிஷிக்கு

பிரத்தியக்ஷம், நெய்ப்பொங்கலம்சை முக்கியம் நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

19 திருப்பனையூர்:—திருவாரூரின் வடக்கு, 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சௌந்தரியநாதர், பிருகந்நாயகி, அமிருததீர்த்தம், இலக்ஷுமிதீர்த்தம், இதிலுள்ள பெரிய விடங்கத்தியாகரை இலக்ஷுமி, பராசரர், கரிக்காலச் சோழர் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

20 திருவிற்குடி:—திருவாரூரின் வடகிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வீரட்டானேசர், மைவார்குழலியம்மை, சக்கரதீர்த்தம், சிவன் பிராமணவுருவுடன் காலால் நிலத்தில் சக்கரங்கீறி ஜலந்தராசுரனையெடுக்கச் சொல்லி, அவன் கழுத்தையறுத்த அஷ்டவீரத்திலொன்று ஸ்காந்தம் தக்ஷகாண்டத்தில் சொல்வது. விஷ்ணு ஜலந்தராசுரனை அவன்பத்தினி பதிவிரதாமகத்துவத்தால் கொல்லமுடியாமல் அவனுருவெடுத்து அவளுடன் சேர்ந்ததால் நீரும் பாரியையிழந்து தவிப்பீரென்று சாபமடைந்தார். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

21 விடைவாய்க்குடி:—என்பது (வாக்குடி) திருவாரூரின் வடகிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கைலாஸநாதர், உமாமகேசுவரி, சிவகங்கை, சிவன் ஜலந்தரனொடு வாது புரிந்த ஸ்தலம். திருநாவுக்கரசு நாயனார் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்பு ஸ்தலம்.

22 திருப்பயத்தூரேன்பது:—(பயத்தங்குடி) திருவாரூரின் வடகிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், திருப்பயற்

றீசர், சாவியங்கண்ணியம்மை, சகோளதீர்த்தம், பைரவர் பூஜித்தது, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1,

23 திருப்புகலூர்:—திருவாரூரின் வடகிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அக்கினீசர், கருந்தார் குழலியம்மை, அக்நிதீர்த்தம், புன்னைமரம், சந்திரசேகரர் முக்கியம். ராமர், மார்க்கண்டேயர், அக்நிபூஜித்தது. சுந்தரமூர்த்தி நாயனார், பரவையாருக்குப் பொன்கொடுக்க வேணுமென்று அவர்மன தில் எண்ணி இதில் தரிசித்துப் புதுச்செங்கல்களைத் தலையணையாகவைத்துத் தூங்கியெழுந்தவுடன் எல்லாச்செங்கலையும் மாற்றுயர்ந்த பொன்னாக்கியஸ்தலம். திருநாவுக்கரசு நாயனார். சித்திரைச்சதயநாளில், இதில் பாடிக்கொண்டே லிங்கத்திலைக்கியமானஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-5 சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1 ஆக-8.

24 திருப்புகலூர்:—ஆலயவடபுறம் (வர்த்தமானீசுரம்) வர்த்தமானேசர், வர்த்தமானேசுவரி, ராமதீர்த்தம், ராமர், மார்க்கண்டேயர் பூஜித்தது, முருகனுபநாராகிய பிராமணரிதில் திநம் பூவெடுத்துப் பூசித்தது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் சிநேகராகித்திரு நல்லூர்ப்பெருமணத்தில் திருஞானசம்பந்தருடன் அவர்பெருமணத் திலைக்கியமானார், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

25 நன்னிலம்:—பெருங்கோவில் தாலூகா ரெயில்ஸ்டேஷன் திருவாரூரின் வடக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மதுவனநாதர், பிரகாசநாயகி, பிரும்மதீர்த்தம், சிவகங்கை, சூரியதீர்த்தம், மதுவனம், கட்டுமலை, சூரியன் பூஜித்தது, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசரும் வைப்புஸ்தலம்.

26 தூத்துக்குடி: நன்னிலத்தின் வடகிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஸ்ரீகண்டேசர், உமை, ப்ராணமுண்டு.

27 கந்தன்குடி:—நன்னிலத்தின் வடகிழக்கு 3-மைலில் உள்ளது சிஸ்வதலம், சிவன், உமை, கந்தர், வள்ளி, தெய்வானை, கந்தர் முக்கியம்.

28 திருக்கொண்டீசுவரம்: நன்னிலத்தின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பசுபதீசர், சாந்தநாயகி, க்ஷீரதீர்த்தம், வில்வவனம், அம்மன் பசுரூபத்துடன் பூஜித்தது, காமதேநு பூஜித்தது, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2

29 முடிகொண்டான்:—நன்னிலத்தின் வடக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, பெரியவாத்தியமாள், அக்கிரகாரம், பெருமாளும் முக்கியம். முடிகொண்டான் நதி.

30 திருச்செங்காட்டங்குடி:—நன்னிலத்தின் தென்கிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கணபதீசர், திருக்குழன்மாது, கணபதிதீர்த்தம், சக்திதீர்த்தம், ஆத்திமரம், கணபதி கஜமுகாசுரனைக்கொன்ற பாவம்நீங்க பூஜித்தது, சிவன், பைரவவேடங்கொண்டு சிறுத்தொண்ட நாயனாரின், பிள்ளையை அறுத்துக்கறியமுது படைக்கச்செய்து, மறுபடி பிள்ளை சீராளனை யெழுப்பி ரிஷபாரூடராய் காக்ஷிகொடுத்து, சிறுத்தொண்டர், கறிசமைத்த அவர்மனைவி, தலைக்கறிசமைத்த தாதிசந்தணமங்கை பிள்ளை சீராளதேவர் நால்வரையும், கைலாசத்துக் கழைத்துக் கொண்டார், சிவனுக்குருத்திராபதியென்றும் பெயர். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2 திருநாவுக்கரசு நாயனாரின் பதிகம்-1 ஆக-3.

31 திருமருகல்:—நன்னிலத்தின் கிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மாணிக்க வண்ணேசர், வண்டுவார்குழலி, சிவகங்கை, மாணிக்கதீர்த்தம், வன்னிமரம், மார்க்கண்டேயர்

பூஜித்தது, திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் விஷந்தீண்டி யிறந்த பக்தியுள்ளவணிகப் பெண்ணின் புருஷனைப்பதிகம் பாடிப்பிழைப்பித்த ஸ்தலம். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1 ஆக-3. சுந்தரமூர்த்தி நாயனாரும் வைப்பாகப் பாடியுள்ளது.

32 திருச்சாத்தமங்கை:—என்பது (செய்யாத்தமங்கை) நன்னிலத்தின் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மாந்தீசர், அயவந்தீசர், தையலம்பாள், மலர்க்கண்ணி, பிரும்ம தீர்த்தம். அயவந்திதீர்த்தம், அஷ்டவக்கிரர் பூஜித்தது, திருநீலநக்கநாயனார் இதில்பூஜிக்கும்போது, அவர்மனைவி லிங்கத்தின்மீது பூச்சியைக்கண்டு வாயாலூதியதால் நாயனார் அவளை நீக்க, சிவன், அவளூதியது நலமென்று, சேர்த்துவைத்தும், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருடன் சிநேகித்தது தாவிருவருமவர் பெருமணத்திலேக்கிய மானார்கள். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசு நாயனார், வைப்பு.

33 திருவாஞ்சியம்:—நன்னிலத்தின் மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வாஞ்சியலிங்கம், மங்களாம்பாள், வாஞ்சியதீர்த்தம், கார்த்திகை ஞாயிற்றுக்கிழமை முக்கியமான குப்தகங்கை, மதாவிஷ்ணு, இந்திராணி, நாககன்னிகைகளும் பூஜித்தது, சந்தனமரம், காசிக்ஷேத்திரத்தைப்போல இதிலிறந்து தகனமடைகிறவர்களுக்கு முக்தி, திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1 சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1 ஆக-3.

34 திருவீழிமிழலை:—நன்னிலத்தின் வடமேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வீழி அழகீசர், சுந்தரகுசாம்பாள், காத்தியாயநி, விஷ்ணுதீர்த்தம், வீழிமரம், அகஸ்தியர், வசிஷ்

டர்பூஜித்தது. மகாவிஷ்ணு-1008 தாமரை மலரால் லிங்கத்தை அர்ச்சிக்கும்போது, கணபதி, ஒருமலரை யொளித்ததால் நேத்திரார்ப் பணஞ்செய்து பூஜித்து சக்கரம் பெற்றது காத்தியாயனரிஷியின் ,யாகத்திலுதித்த காத்தியாயநியைச் சிவன் மணந்து மணவாளக் கோலத்துட னிருக்கிறார். திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசராகிய அப்பர் (2) ஆலயங்களும் தனியேயுண்டு, அவர்களுக்கு துற்பிக்ஷம் நீங்கும் வரையில் தினம் பொற்காசளித்தஸ்தலம், தேவாரத்திலுமுள்ள-7000 வீழியப்பிராமணர்கள் பூஜிக்கும் ஸ்தலம். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-15 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-8 சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1 ஆக-24 இதின் மேற்கு ஒருமைலிலுள்ள தேஜியூரில் வேதாந்தபாரங்கதரான சுப்பிரமணிய சாஸ்திரிகளின் பாடசாலை முக்கியம்.

35 திருவன்னியூர்:—என்பது (அன்னூர்) நன்னிலம் ரெயில் ஸ்டேஷனின் வடமேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அக்நீசர், பார்வதி, அக்நிதீர்த்தம், அக்நிபூஜித்தது திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1.

36 திருக்கருவிலி:—நன்னிலத்தின் வடமேற்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சர்க்குணேசர், ஸர்வாங்கநாயகி, சர்க்குணதீர்த்தம், கொட்டிடை, சர்க்குணனென்னுஞ் சோழராஜனுக்கு நற்கதியளித்தவர் ருத்திரகணங்கள், இந்திரன், தேவர்கள், பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1 தமிழ்பாடலு முண்டு.

37 திருவிடைமருதூர்:—கும்பகோணத்தின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மத்தியார்ச்சுனேசர், மகாலிங்கர், பிருஹத்குசாம்பாள், காவேரி, கருணாநதி, சிம்மக் கிணறு, மருதமரம், கணபதி, இந்திராதிதேவர்கள், அங்கார

கன், ரிஷிகள் பூஜித்தது, வரகுண பாண்டியனுக்கு, மதுரையில் குதிரைக்காலிலகப்பட்டு, அறியாமல் பிராமணப்பிள்ளை யிறந்ததனாலுண்டாகிய பிரும்மஹத்தி எந்தஸ்தலத்திலும் நீங்காமல் இதில் நீங்கியது. திருவாரூரில் தேர்க்காலிலகப்பட்டசிசு இறந்ததால் அதிலாண்டசோழராஜன் 107-சிவஸ்தலங்கள் கட்டிப்பூஜித்தும் நீங்காமல், கடைசி-108 ஆகிய இதில் சோழன் பிரும்மஹத்தி கீழவாசலில் தங்கி, நீங்கிய ஸ்தலம். முக்திகொடுக்கும் ஸ்தலம், திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-6 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-5 சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1 ஆக-12. திருவிடைமருதூர் ரெயில் ஸ்டேஷன்.

38 கோவிந்தபுரம்:—திருவிடைமருதூரின் கிழக்கு 1-மையில் உள்ளது. சிவஸ்தலம், பாணபுரீசர், அபிராமியம்மை, போதேந்திரா, சித்தி அடைந்த ஸ்தலம். அவர்நாமசித்தாந்தம், செய்தார்.

39 திபுருவனம்:—திருவிடைமருதூரின் மேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம் கம்பஹரேசர், புவனேசுவரி, காவேரி, வரகுணபாண்டியன் திரும்பிப்பார்த்து, பிரும்மஹத்தி இல்லாததாலிதில் பூஜித்தது, விஷ்ணுவின் நரசிம்மாவதாரத்தில் அவர்மதத்தை யடக்கினவரும், மேருவைக்காலி லடக்கி பறக்கும்போது, சகலமலை களையுமாடவைத்த வருமான சரபேசுவரருமிதிலுண்டு. திருநாவுக்கரசு நாயனாரின் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

40 திருநாகேசுவரம்:—திருவிடைமருத்தூரின் மேற்கு 3-மைலில் உள்ளது சிவஸ்தலம், சண்பகாரணியேசர், குன்றுமுலைநாயகி, நாகதீர்த்தம், சூரியபுஷ்கரிணி, சூரியன், நாகங்கள் பூஜித்தஸ்தலம், பெரிய புராணஞ்செய்த சேக்கிழார் சுவாமி

யும் பூஜித்தது, திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-3 சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1 ஆக-6.

41 திருவிண்ணகர்:—என்பது (ஒப்பிலியப்பர்கோவில்) திருவிடைமருதூரின், தென்மேற்கு 3-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஒப்பிலியப்பர், பூமிதேவி, ஸ்ரீராமர், மார்க்கண்டேயர், தருமதேவதை, காவேரிக்கும் பிரத்தியக்ஷம், அநேகரிதில், உபநயநம், விவாகஞ்செய்வதுண்டு, நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

42 திருக்குடமூக்கு:—என்பது (கும்பகோணம்) பெரிய கோவில் தாலூகா ரெயில்டேஷன். திருவிடைமருதூரின் மேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கும்பேசர், மங்களநாயகி, காவேரி, மாமகதீர்த்தம், சிவபுஷ்கரிணி, பிரும்மா, விஷ்ணு, இந்திராதிதேவர்கள், சந்திரன், ஹேமரிஷி பூஜித்தது. பிரும்மாண்ட சராசரகும்ப மொதுங்கியது, மாசிமகம் பிரபலம், சப்தஸ்தான உச்சவமுமுண்டு. திருஞாந சமந்தமூர்த்திநாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1 ஆக பதிகம்-2

43 திருக்குடந்தைக்காரோணம். மாமகக்குள வடகரையில் சிவஸ்தலம், காசிவிசுவேசர், தேனார்மொழியம்மை, நவநதிகளாகிய நவகன்னிகைகள், பரமசிவன் போட்டபாணத்தால் குடமுடைந்தபோது அமிருதந்தங்கிய மாமகக்குளத்தில் 12 வருஷத்துக்கொருமுறை சிம்மத்தில் குருவரும்போது, மாசிமகத்தில் காசிகங்கையும் வருகிறாள். உமை, கங்கை, மாந்தாதாபூஜித்தது. திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1

44 திருக்குடந்தை கீழக்கோட்டம் சிவஸ்தலம், நாகேசர். பிருகந்நாயகி, சூரியன் பூஜித்தது, ஆடவல்லவரென்று பெயருள்ள சபாபதிமுக்கியம், திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1

45 கும்பகோணம் சோமேசர் கோவில், சாரங்கபாணி கோவிலுக்குத் தென்புறம் சிவஸ்தலம், சோமேசர், சோமநாயகி, ஹேமபுஷ்கரிணி யென்றும் பொற்றாமரை பிரகஸ்பதிக்கு அபசாரம்செய்த சந்திரன் க்ஷமைகேட்டுக் கொண்டபடி ,குருவும் மனமிரங்கி, சந்திரனும், தாரையுடன் தானும், கங்கை முதலிய புண்ணிதீர்த்தங்க ளொன்றுகூடினமாமகக் குளத்தில்ஸ்நானஞ்செய்து இதில் பூஜித்து பாவங்களைவிலக்கி கொண்டார்கள். திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக்கோவை லுயிள்ள திருப்பதிகவைப்புஸ் தலம்.

46 மாமகக்குளக்கீழக் கரையிலுள்ளது, சிவஸ்தலம், அபிமுக்தேசர், ஞாநாம்பாள், புராணமுள்ளது.

47 மாமகக்குள மேல்புறம் சிவஸ்தலம், கௌதமேசர், கௌரி, கௌதமரிஷி பூஜித்தது.

48 ஷை டவுன் பாணபுரி அக்கிரகாரத்தில் சிவஸ்தலம், பாணபுரீசர், உமை, சிவன்வேடுவராய் பாணமெய்தது.

49 ஷை டவுன் சங்கராசாரியார் மடத்தெருவு சிவஸ்தலம் காளஹத்தீசர், உமை இதில் ஜகத்குருவான சங்கராசாரியாரும் காமகோடி சாரதாபீடமும் முக்கியம்.

50 திருக்குடந்தை விஷ்ணுஸ்தலம், சாரங்கபாணிகோவில் சாரங்கபாணி, கோமளவல்லி, பொற்றாமரை ஹேமரிஷிக்கு பிரத்தியக்ஷம், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமிழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

51 கும்பகோணம் விஷ்ணுஸ்தலம், சக்கரபாணிகோவில், சக்கரபாணி, ஸ்ரீதேவி, காவேரி மயானமுள்ளது.

52 விஷ்ணுஸ்தலம், ராமசாமிகோவில், ஸ்ரீராமர், சீதை, லக்ஷ்மணர், பரதர், சத்துருக்னர், அநுமார், பிரகாரத்தில் கதாசித்திரங்களெழுதியுள்ளது.

53 கும்பகோணம் விஷ்ணுஸ்தலம், கிருஷ்ணன்கோவில், கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை இந்த டவுனில் வரதராஜர், நாராயணர் முதலிய கோவில்களுமுண்டு. காலேஜுமுண்டு.

54 திருப்பட்டீசுவரம்:—கும்பகோணத்தின் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பட்டீசர், பால்வளைநாயகி, வன்னிமரம். சிவகங்கை, ஞானதீர்த்தம், காமதேனுவின் புத்திரி பட்டிபூஜித்தது. பைரவர்முக்கியம் திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு சிஷர்களுடன் தங்க, முத்துப்பந்தல்கொடுத்தவர் ராமர் பூஜித்து ஹத்திதோஷத்தைதீர்த்தவர் மார்கழி அமாவாசை முக்கியம். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. கோவிந்த தீக்ஷதரிதைப் புதுப்பித்தது.

55 திருஆரைமேற்றளி:—கும்பகோணத்தின்தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கைலாசநாதர், சபளநாயகி காமதேனுவின் புத்திரி சபளைபூஜித்தது. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

56 முழையூர்:—கும்பகோணத்தின் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பரசுநாதேசுவரர், ஞானாம்பிகை, காமதேனுவின் புத்திரிநந்தினி பூஜித்தது திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

57 வடதளி:—கும்பகோணத்தின் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம் தருமபுரீசர், விமலாம்பாள், காமதேனுவின் புத்திரிவிமலைபூஜித்தது. சமணரால்மூடியிருந்தலிங்கம் திருநாவுக்கரசுநாயனார் பாட வெளிவந்து தரிசனமானார்.

58 திருப்பழையாறை:—கும்பகோணத்தின் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சோமேசர், சோமகலா நாயகி, சிவகங்கை, சந்திரபுஷ்கரணி, சந்திரன் பூஜித்தது தக்ஷசாபத்தால் நீங்கியகலைகளைப் பெற்றது, வைசியராகிய அமர்நீதி நாயனாரிடம் பிராமணராய் வந்த சிவன் கொடுத்த கௌபீநம்மறைந்ததால் தராசிலதின் நிறைக்கு தனங்களும் பாரிபுத்திரனுடன் தானுமேறி சிவனருளால் மூவரும் சிவ லோகமடைந்தது. சுந்தரரும் வைப்பாகப்பாடியுள்ளது. இதற்கும் (57) வடதளிக்கும் திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1

59 திருச்சத்திமுத்தம்:—கும்பகோணத்தின் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவக்கொழுந்தீசர், பிருகந் நாயகி, சக்திதீர்த்தம், சூலதீர்த்தம், பராசக்தி பூஜித்து சிவனை முத்தங்கொடுத்தது. திருநாவுக்கரசுநாயனார்பதிகம்-1

60 திருஆவூர்:—கும்பகோணத்தின் தென்மேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பசுபதீசர், மங்களநாயகி, பசு தீர்த்தம், பிரும்மதீர்த்தம், பசுபூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

61 தாரேசுவரம்:—கும்பகோணத்தின் மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, பெருமாள் கோவிலும் முக்கியம். தாரேஸ்வரம் ரெயில்ஸ்டேஷன்.

62 திருவலஞ்சுழி:—கும்பகோணத்தின் மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கற்பகேசர், நித்தியானந்தநாயகி, காவேரி சுழியாகத்தங்கிப் பூஜித்தது. 66-கோடி தீர்த்தம். கணபதிமுக்கியம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-3. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-2. ஆக பதிகம்-5. சுந்தரமூர்த்திநாயனார் வைப்புஸ்தலம்.

63 சுந்தரப்பெருமாள்கோவில்:—கும்பகோணத்தின் மேற்கு 6-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், சுந்தரர், இலக்ஷ்மிசு, சுந்தரப்பெருமாள்கோவில் ரெயில்ஸ்டேஷன்.

64 வலங்கிமான்:—கும்பகோணத்தின் தெற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, பெருமாள்கோவிலும் முக்கியம்.

65 திருக்கருக்குடி:—என்பது (மருதாந்தநல்லூர்) கும்பகோணத்தின் தென்கிழக்கு 3-மைலில் உள்ளது, சிவஸ்தலம், சற்குணலிங்கம், சர்வாலங்காரி, ராமர், பிரமன், கௌசிகர், சற்குணராஜர் பூஜித்தது. வைசியனறியாது தாயுடன்புணர்ந்ததோஷம் நீங்கினது. ஏமதீர்த்தம் திருஞானசம்பந்தமூர்த்தி பதிகம்-1.

66 திருச்சிவபுரம்:—கும்பகோணத்தின் தென்கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிரும்மபுரீசர், பிருகந்நாயகி, பிரும்மதீர்த்தம், அரசில்நதி, சண்பகமரம், பிரும்மாவும், வராகாவதாரத்தில் விஷ்ணுவும் பூசித்தஸ்தலம் ஹரிசொல்லி வந்தநதியானதால், அரிசொல்லென்பது அரிசில் எனவழங்குகிறது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-3. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-4.

67 திருக்கலயநல்லூர்:—என்பது (சாக்கோட்டை) கும்பகோணத்தின் தென்கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அமிருதகலேசர், அமிருதவல்லி, பிரும்மதீர்த்தம், அரிசில்நதி, பிரும்மா பூஜித்தது. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம் 1.

68 அரிசிற்கரைப்புத்தூர்:—என்பது (அழகார்புத்தூர், சிருவிலிப்புத்தூர்) கும்பகோணத்தின் தென்கிழக்கு 4-மைலிலுள்ளது. சிவஸ்தலம், படிக்காசளித்த ஈசர், சுந்தராம்பாள்,

பாணதீர்த்தம், அரிசில்நதி, பாணாசுரன், உண்மையானந்த முனி பூஜித்தது. ஆதி சைவராகிய புகழ்த்துணை நாயனுருக்கு அதிதி பூஜைக்காக தினமொரு பொற்காசு கொடுத்து முத்தியுங் கொடுத்தவர். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனுர் பதிகம்-1, சுந்தரமூர்த்தி நாயனுர் பதிகம்-1, ஆக பதிகம்-3.

69 சித்தீசுவரம்:—என்பது (திருநறையூர், நாச்சியார் கோவில்) கும்பகோணத்தின் தென்கிழக்கு 6-மைலில் உள்ளதுசிவஸ்தலம், சித்தநாதர், திரிபுரசுந்தரி, பிரும்மதீர்த்தம், பிரும்மா பூஜித்தது. திருநாவுக்கரசுவைப்பு, திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் பதிகம்-3, சுந்தரமூர்த்தி நாயனுர் பதிகம்-1, ஆகபதிகம்-4,

70 ஷை திருநரையூர் (நாச்சியார் கோவில்) விஷ்ணுஸ்தலம், நம்பிமூர்த்தி, நம்பிக்கை நாச்சியார், மணிமுக்தாநதி, மேதவமுனியின்கன்னிகையை பக்ஷிபிடித்துக்கொண்டு போக அவனைச் சபித்து, விடுவித்து கன்னிகைக்கும், மேதவமுனிக்கும் அருள்செய்தவர் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

71 ஷை நாச்சியார் கோவில் விஷ்ணுஸ்தலம், சவுந்தரராஜர், லக்ஷுமி, ஆதியிலிது சிவஸ்தலம்.

72 கூந்தலூர்:—கும்பகோணத்தின் கிழக்கு 6-மைலிலுள்ளது. சிவஸ்தலம், சண்பகாரண்யேசர், ஆனந்தவல்லி, குமாரதீர்த்தம், சீதாதீர்த்தம், கந்தர், ரோமசரிஷி, சீதை பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனுர் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

73 தண்டந்தோட்டம்:—கும்பகோணத்தின் தென்கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பரமேசுவரர், பார்வதி, சிவகங்கை, சுந்தரமூர்த்திநாயனுர்திருநாட்டுத் தொகையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

74 திருப்பேனுப்பேறுந்துறை:—என்பது (திருப்பர்துறை) கும்பகோணத்தின் தென்கிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவாநந்தர், மலைபாசியம்மன், வன்னிமரம், சக்திதீர்த்தம், பார்வதி, பிரும்மா, நவகிரகங்கள் கந்தர் பூசித்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் பதிகம்-1.

75 சூரியனுர்கோவில்:— திருவிடைமருதூரின் தென்கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சூரியநாதர், உமை, சூரியநாராயணர், சாயாதேவி, நவக்கிரகங்களும்முக்கியம்.

76 திருநேல்லம்:—என்பது (கோனேரிராஜபுரம்) திருவிடைமருதூரின் தென்கிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், உமாமகேசர், மங்களாம்பாள், சிவகங்கை, சக்திதீர்த்தம், உமையும் தேவர்களும் பூசித்தது. நடராஜர் பெரியமூர்த்தி பெரிய வாத்தியம்மாள், அக்கிரகாரமுண்டு. திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனுர் பதிகம்-1. ஆக பதிகம்-2.

77 திருத்தேன்குரங்காடுதுறை:—திருவிடைமருதூரின் தென்கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஆபத்சகாயர், பவளக்கொடியம்பாள், காவேரி, சகாயதீர்த்தம் சுக்ரீவன் பூஜித்து ராமநட்பும், ராச்சியமும் பாரியையுமடைந்தான். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனுர் பதிகம்-1, ஆக பதிகம்-2. திருத்தென்குரங்காடுதுறை ரெயில்ஸ்டேஷன்.

78 திருவாவடுதுறை:—ஆடுதுறையின் வடகிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோமுக்தீசர், மாசிலாமணிதியாகேசர், ஒப்பிலாமுலையம்மன், கோமுக்திதீர்த்தம், காவேரி, படாரசமரம், இதில்திருமூலநாயனுர் பத்தாந்திருமுறையாகிய திருமந்திரமென்னும், வேதாந்தசாரத்தை மூவாயிரம்

பாவாக பாடிமுடித்து மூலனென்னுமிடையனுடலில் நுழைந்து பசுக்கூட்டங்களுக்கு மகிழ்ச்சியுண்டாக்கி, பொதியமலையில் அகஸ்தியரையும், அநேகஸ்தலங்களையுந் தரிசித்துக் கைலாச மடைந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனருக்கு, தம்முடையபிதா யாகஞ்செய்ய வேணுமென்றுப் பதிகம்பாடியதால் சிவன் பொருட்கிழி யுதவிசெய்தார். இதிலாதீனமடமும், முக்கியம். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-5. சுந்தரமூர்த்தி நாயனர் பதிகம்-2. ஆக பதிகம்-8.

79 திருநீலக்குடி:—யென்பது (தென்னல்குடி) ஆடுதுறையின்தெற்கு 2-மைலில் உள்ளது, சிவதஸ்லம், நீலகண்டர், சுந்தராம்பாள், காவேரி, வருணன் பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனர் பதிகம்-1.

80 திருவைகல்:—ஆடுதுறையின் தென்கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வைகநாதர், வைகலம்பாள், காவேரி, சூரியன் பூஜித்தது. இதற்கும் 81-மாடக்கோவிலுக்கும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1. 80, 81 ஸ்தலங்களும் திருநாவுக்கரசுநாயனர் வைப்புஸ்தலம்.

81 திருமாடக்கோவில்:—ஆடுதுறையின் தென் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோமளேசர், இளங்கோதை தேவர்கள் பூசித்தது. கோச்செங்கட்சோழரால் கட்டிய 64 மாடக்கோவில்களிலிது வொன்று, இதற்கும் சேர்த்து 80-ல் பதிகமுண்டு.

82 திருக்கோழம்பம்:—ஆடுதுறையின் தென்கிழக்கு 6-மைலில் உள்ளது, சிவஸ்தலம், கோகிலேசர், சவுந்திரநாயகி, மதுதீர்த்தம், இந்திரனல் குயிலாகும்படி சாபம் பெற்ற வித்தியாதரனகிய சந்தன் பூசித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி

நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-1. ஆக பதிகம்-2.

83 திருத்துருத்தி:—என்பது (குற்றாலம்) ஆடுதுறையின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், உத்தரவேதீசர், முகிழம்பாள், காவேரி, சுந்தரதீர்த்தம், குற்றாலமரம், கார்த்திகை ஞாயிற்றுகிழமை ஸ்நானம் முக்கியம் சுந்தரேசமூர்த்தி நாயனருக்கு நேர்ந்த பிணியைத்தீர்த்த ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனர் பதிகம்-1. ஆக பதிகம்-3.

84 குத்தங்குடி:—குற்றாலத்தின் கிழக்கு 4-மைலில் உள்ளது, சிவஸ்தலம், கோடீசுவரர், பெரியநாயகி, காவேரி, திருஞானசம்மந்தமூர்த்தி நாயனர் க்ஷேத்திரக் கோவையி லுள்ளது

85 திருவழுந்தூர்:—என்பது (தேரழுந்தூர்) குற்றாலத்தின் தென்கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வேதபுரீசர், சௌந்தராம்பாள், காவேரி, சித்தாமிருதம், வேததீர்த்தம், வேதங்களும் அஷ்டதிக்கு பாலகர்களும் பூஜித்தது. இதில் வேதியர்களை தேவாரப்பதிகத்தில் சிலாகித்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசரும், சுந்தரரும் வைப்புஸ்தலம்.

86 ஷை தேரழுந்தூர் விஷ்ணுஸ்தலம், ஆமருவியப்பர், செங்கமலவல்லி, தரிசனபுஷ்கரிணி, உபரிரவஸ்ராஜனுக்கும், காவேரிக்கும், தருமதேவதைகளுக்கும், பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். இதில் இரங்கராஜர் கோவிந்தராஜராலயங்களும் உண்டு.

87 சிறுபுலியூர்:—பேரளத்தின் வடகிழக்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், அருமாகடல்மூர்த்தி, திருமாமகள்

நாச்சியார், அநந்தசரசு, மாநஸபுஷ்கரிணி, புஜங்கசயநம், வியாசருக்கும், வியாக்கிரமருக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

88 திருமீயச்சூர்:—என்பது (பேரளம்) மாயவரத்துக்கு தெற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், முயற்சிநாதர், சவுந்தரநாயகி, சங்காகூபம், சூரியபுஷ்கரணி, வில்வமரம், சூரியன், வருணன் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம். பேரளம் ரெயில்ஸ்டேஷன்.

89 இளங்கோவில்:—என்பது டை பேரளம்கோவிலில் சிவஸ்தலம், சகலபுவநேசர், மேகலாம்பாள், சரஸ்வதி தீர்த்தம், அமிருததீர்த்தம், காளியும் சரஸ்வதியும் பூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1.

90 திருப்பாம்புரம்:—பேரளத்தின் மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பாம்பீசர், வண்டார்பூங்குழலி, சேஷதீர்த்தம், வன்னிமரம், ஸ்காந்தம் சங்கரஸம்ஹிதை உபதேசகாண்டம் 86-வது அத்தியாயத்தில் சொல்லுகிறபடி, குருவில்லாமல் ஆதிசேஷன் சமஸ்தகலைகளையு மப்பியசித்ததால் குருவில்லாவித்தை பாழென்று அகஸ்தியர் சொன்னபடியால், இதில்பூஜித்து விஷ்ணுவைக்குருவாக அடைந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனாரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் வைப்புஸ்தலம்.

91 திருசிறுக்குடி:—பேரளத்தின் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மங்களேசர், மங்களாம்பாள், சூரியதீர்த்தம், மங்களதீர்த்தம், அங்காரகனும், கருடனும், கந்தருவனும் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

92 பூந்தோட்டம்:—பேரளத்தின் தெற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், புவனேசர், பூங்கோதை, அரிசில்நதி, இதின் ½-மைலுக்கு தென்புறம் கூத்தனூர் அக்கிரகாரத்தில் சரஸ்வதி முக்கியம்.

93 திருத்திலதைப்பதி:—என்பது (மதிமுத்தம்) (கோவில் பத்து) பூந்தோட்டத்தின் மேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், முக்தீசர், பொற்கொடிநாயகி, மந்தாரை, சந்திர புஷ்கரிணி, சந்திரன் பூஜித்தது. காசி சித்தோஜிராஜாவும், ஸ்ரீராமர் ஜடாயுவுக்கும் தற்பணம் செய்தது. திருஞான சம்மந்தமூர்த்திநாயனார் பதிகம்-1.

94 திருவம்பர் பெருந்திருக்கோவில்:— பூந்தோட்டத்தின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிரும்மபுரீசர், பூங்குழல்நாயகி, புன்னைமரம், பிரும்மதீர்த்தம், அன்னப் பொய்கை, பிரும்மாபூஜித்தது. கோச்செங்கட்சோழனுக்கு மணக்கோலங்காட்டியவர் அவர்திருவானைக்கா முதலித்தல மீறாக 64-மாடக்கோவில் திருப்பணிசெய்தார். மாடக்கோவிலென்பது கட்டுமலையும், யானைகள் நுழையாத சந்நிதியுடனும் கட்டுவது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசுநாயனார் வைப்பு ஸ்தலம்.

95. திருவம்பர்மாகாளம்:—என்பது (கோவில் திருமாளம்) பூந்தோட்டத்தின் கிழக்கு 1-மைலிலுள்ள சிவஸ்தலம், காளகண்டேசர், பக்ஷநாயகி, மகாகாள தீர்த்தம், அரிசில் நதி. இங்கு தேவி அசுரர்களைக்கொன்ற பாவந்தீரப் பூஜித்தது. சிவனுக்கும், விஷ்ணுவாகிய மோகினிக்கும் பிறந்த சாஸ்தாவும், மகா காளரும் ஷெ மோகினிக்குப் பிறந்த கண்டகி நதியும் பூஜித்தது. இதில் பிறந்த சோமயாஜிமாற நாயனாரென்னும் பிராமணர் இதில் யாகஞ்செய்தும், அவர் கேட்டுக்கொண்டபடித் திருவாரூர்த் தியாகராஜரும் அம்மனும் நீச

ரூபத்துடன் மதுக்குடங் கொண்டுவந்து காக்ஷிதந்து முத்தி கொடுத்தது, இங்கு வைகாசிமாதம் யாகத்திருநாள் இப்பவும் நடக்கிறது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-3, சுந்தரமூர்த்தி நாயனார்பதிக வைப்புஸ்தலம்

96 பிறம்பில்:—என்பது (பிரம்பூர்) மாயூரத்தின் தென்கிழக்கு5-மைலிலுள்ள சிவஸ்தலம். சிவன், உமை, கந்தர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் முக்கியம். திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக் கோவையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

97. திருவழுர்:—மாயூரத்தின் தெற்கு 1-மைலிலுள்ள சிவஸ்தலம். கிருத்திவாஸர், பாலாங்குராம்பிகை, பஞ்சப்பிரும்ம தீர்த்தம், தாருகாவனம், சமீவனம், பிக்ஷாடனரை ரிஷிபத்னிகள் கண்டு மயங்கி அரையிலணிந்துள்ள ஆடை வழுவினமையா லிதற்கு வழுரென்று பெயர். பிக்ஷாடநராய் ரிஷிகளா லேவிய யானையை யுரித்துப் போர்த்திரவர். அஷ்டவீரஸ்தலம். யானை வரும்போது அச்சமுற்றதால் உன்னுகிராம விழுமிடங்களில் அனேக யானைகளுண்டாகட்டுமென்று ரிஷிகள் சொன்னபடி உண்டான யானைகளை அரிஹரபுத்திராகிய ஐயனாருக்கு வாகனமாகச் சிவன் கொடுத்ததால் இதில் வீதிக்குள்பட்டு யானைகளுடன் ஐயனார் கோவிலுமுண்டு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் க்ஷேத்திரக்கோவையிலும், திருநாவுக்கரசு நாயனார் அடைவுத் திருத்தாண்டகத்திலுமுள்ள வைப்புஸ்தலம்.

98 மூவலூர். மாயூரத்தின் மேற்கு 4-மைலிலுள்ள சிவஸ்தலம். புன்னைகவனேசர், மங்களாம்பிகை, சௌந்தராம்பாள், மங்களதீர்த்தம், காவேரி, திருநாவுக்கரசு நாயனாரின் குறுந்தொகையிலுள்ள வைப்புஸ்தலம்.

99 நல்லக்குடி:— (நல்லத்துக்குடி, குயிலாலந்துறை) மாயூரத்தின் தென்கிழக்கு 1-மைலில் உள்ளது ஆலந்துறையப்பர்,

குயிலாண்ட நாயகி, சூரியதீர்த்தம், சூரியன் பூசித்தது. திருநாவுக்கரசு நாயனாரின் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

100 மாயூரம்:—(திருமயிலாடுதுறை) என வழங்கும் ஜங்ஷன்ரெயில்ஸ்டேஷன், குற்றாலத்தின்கிழக்கு 6-மைலிலுள்ள சிவஸ்தலம். மாயூரநாதர், அபயப்பிரதாம்பாள், காவேரி, சூரியதீர்த்தம், மாமரம், தக்ஷயாகத்தில் தீயில்குதித்ததேவி மயிலாய் பூஜித்து மணந்தது. கௌண்டிந்யர், பிரும்மா, சுசர்மா, ஞானமடைந்த அனேக ராமாவதாரங்களைக்கண்ட வயதுசென்ற வாயஸம், மகாவிஷ்ணு, இயமன், காமன், ரதி, அகஸ்தியர், வசிஷ்டர், கண்ணுவர், அருச்சுனன், கௌசிகர் பூஜித்தது. பிரம்மசாபத்தால் மனோக்கினி யென்னும் கந்தருவஸ்திரீ க்ருவஷ்ஜ பேயுருவும், வைணவ விருப்பமும், சிவத்துவேஷமுமுள்ள அங்கதேசத்தரசனை விசாலனடைந்த பேயுருவும், துலாமாச காவேரிஸ்நாநத்தாலும், தரிசனத்தாலும் நீங்கியது. நரி, குரங்கு, பூனை, கழுதை, கழுகு, கிளி, பாம்பு, முதலியதுகளும் ரிஷப தீர்த்தத்தில் ஐப்பசிமாதம் முழுகிச் சிவதரிசனத்தால் முக்தி யடைந்தது. நாதசர்மா, அவர் பாரி அனவித்யையும் முக்தி பெற்றார்கள், திக்குப்பாலகர், காசியப ரிஷி அவர்பாரியைகள் அதிதி, திதியும், ஆதிசேஷன், வாசுகி முதலிய பாம்புகளைப்பெற்ற கத்ரு, அருணனையும் கருடனையும் பெற்ற விநதை, சூரியன், சந்திரன், நவக்கிரகங்கள், புலஸ்தியர், வியாசர், சூதர், சௌநகர் முதலிய சமஸ்தரும் ஸ்நாநஞ்செய்துந் தரிசித்து மிஷ்டபலனை யடைந்தார்கள். விசுவாமித்திரரிஷிக்கு இதில் கடைசியில் தபசு செய்து பிராமணியம் உண்டானது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், பதிகம்-2 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1 பெற்றது.

101 மாயூரம் மேலவீதிக்கு மேற்கு கொரநாட்டுக்கு சமீபம் சிவஸ்தலம் பஞ்சநதீசர், தருமாம்பாள், விருஷபதீர்த்தம், நாதசர்மாகேட்டுக்கொண்டபடி திருவையாற்றிலிருந்து பக்தனுக்காகவந்தார்.

102 மாயூரம் ரிஷபதீர்த்தத் தென்கரையில் சிவஸ்தலம். காசிவிசுவநாதர், விசாலாக்ஷி, அன்னபூரணி, கங்கையுடன் துலாமாசம் வந்தவர்.

103 மாயூரம் ஷை வடகரை வள்ளலார்கோவில் சிவஸ்தலம், வதாந்யேசர், ஞானாம்பிகை, தக்ஷிணாமூர்த்தி முக்கியமானது புராணமுண்டு.

104 கழுக்காணிமுட்டம்:—மாயூரத்தின் வடகரை ½-மையில் உள்ளது. சிவஸ்தலம், கைலாசநாதர், உமை, சுவாமிக்கு வைத்திருந்த அன்னத்தைத்தின்ற தன்பிள்ளையை உலக்கையால்கொன்ற ஒரு பக்திமாது, தவசியாகவந்த சிவனுக்கு அன்னமிட்டதால் தன்பிள்ளையும் பிழைத்து நற்கதியடைந்தது.

105 இந்தளூர்:—என்பது (திருவழுந்தூர்) விஷ்ணுஸ்தலம். ஷை வடகரையில் மருவியமைந்தவர், சுகந்தவனநாதர், அரங்கநாதர், சந்திரசாப விமோசனநாச்சியார், புண்டரீகவல்லி, காவேரி, இந்துபுஷ்கரிணி, வீரசயனம், காவேரிக்கும் சந்திரனுக்கும் பிரத்தியக்ஷம். குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸனம்.

106 திருவிளநகர்:—மாயூரத்தின் வடகிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், துறைக்காட்டீசர், தோழியம்பாள், உசிரவனம், ஞானதீர்த்தம், காவேரி, பூக்கூடை கொண்டுவந்த அருள்வித்தனென்னும் வேதியனுக்குப் பிரவாகத்தில் வழிகாட்டிக் காக்ஷியளித்தவர். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம் இதின் சமீபம் தருமபுரமடாதீனம் பிரபலம்.

107 திருப்பறியலூர்:—என்பது (பரசலூர், பாசலூர்) மாயூரத்தின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வீரட்டானேசர், இளங்கொடியாள், காவேரி, சிவகங்கை, சந்திரபுஷ்கரணி, அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. ததீசிரிஷியால் சிவன் பெருமைகளுரைத்தும் தக்ஷன் சிவனை நீக்கி யாகம் செய்ப வலுவில் வந்த உமையையு மவமதித்ததா லவள் அனலில்பாய சிவன் வீரபத்திரனை யனுப்பி யாகத்தையுமழித்தும் அவனைக்கொன்றதான அஷ்டவீரத்திலொன்று சிவனருளால் தக்ஷன் ஆட்டுத்தலையைப்பெற்று ருத்திரச மகத்தாலிதில் பூஜித்தார். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனர் வைப்புஸ்தலம்.

108 செம்பொன்பள்ளி:—என்பது (செம்பனர்கோவில்) மாயூரத்தின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சொர்ணபுரீசர், சுகந்தவனநாயகி, குளம், காவேரி, இந்திரன் குபேரன் பூஜித்தது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனர் பதிகம்-2, ஆக-3.

109 திருநனிப்பள்ளி:—என்பது (புஞ்சை) மாயூரத்தின் வடகிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், நற்றுணையப்பர், பருவதராஜபுத்திரி, காவேரி, சொர்ணதீர்த்தம், அஷ்டவசுக்கள் பூஜித்தது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனருக்குத் தாய் மாமன் வீடு. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனர் பதிகம்-1, சுந்தரமூர்த்தி நாயனரின் பதிகம்-1, ஆக-3.

110 திருவலம்புரம்:—என்பது (மேலப் பெரும்பள்ளம்) மாயூரத்தின் கிழக்கு, 11-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வலம்புரிநாதர், வடுவகிர்விழியாள், பிரும்மதீர்த்தம், பிரும்மா, மகாவிஷ்ணு, காவேரி, வருணன் பூஜித்தது. ஏரண்டரிஷி பூஜித்துச் சிவனருளால் காவேரியில் குதித்துக் கைலாஸ

மடைந்த முக்கியஸ்தலம் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1, ஆக-4.

111 திருத்தலைச்சங்காடு:—மாயபுரத்தின் கிழக்கு 11-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சங்காரண்யேசர், சவுந்தரநாயகி, காவேரி, வில்வமரம், திக்குப்பாலர்கள், ஐராவதம் பூஜித்தது. விஷ்ணு பூஜித்து பாஞ்சசந்யம் பெற்றது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனாரும் வைப்புஸ்தலம்.

112 தலைச்சங்கநாண்மதியம்:—(ஷையூர்) விஷ்ணுஸ்தலம், நாண்மதியப்பெருமாள், வெண்சுடர்ப்பெருமாள், செங்கமலவல்லி, தலைச்சங்கநாச்சியார், சந்திரபுஷ்கரணி, சந்திரனுக்கும் தேவபிருந்தங்களுக்கும் பிரத்தியக்ஷம், பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

113 திருவாங்கூர்:—என்பது (தான்றோன்றி மாடம்) மாயூரத்தின் கிழக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சுயம்புநாதர், வாணெடுங்கண்ணி, குமுததீர்த்தம், ஆனந்த புஷ்கரிணி, சிறுப்புலிநாயனா ரென்னுமந்தணர் சிவபூஜை, பஞ்சாக்ஷரம், அடியார்களுக் கமுதுசெய்தல், கொடுத்தல், யாகஞ்செய்தல், முதலியன இதில்செய்து சிவபதமடைந்தார். இஸ்தலத்து வேளாளரின் தருமங்களைப் பதிகத்தில் சிறப்பித்துள்ளது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1, ஆக-2. சுந்தரமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்

114 திருக்கடவூர்:—மாயூரத்தின் தென்கிழக்கு 12-மைலிலுள்ளது, சிவஸ்தலம், அமிருதகடேசர், அபிராமி அம்பாள், காலசம்ஹாரர், அமிருததீர்த்தம், சிவகங்கை, வில்வமரம், அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. அஷ்டவீரத்தி லொன்று

மார்க்கண்டேயர் கடைசியாய் இதில் பூஜித்துச் சிவனுலெலை றுதைக்கப்பட்டு உயிரிழந்தும், மார்க்கண்டேயர் என்றும் பதினாறுவயசாகப் பெற்றும், இயமனுக்கு அனுக்கிரகித்த ஸ்தலம். காரியநாயனார் இதில் தமிழ்ப் பிரபந்தம் பாடிக் கோவில் திருப்பணிகள் செய்து சிவகணமானார். குங்கிலி யக்கலயநாயனார் தினமும் குங்கிலியத்தூபமிட்டு வறுமை மிக வடைந்து பாரியால் நெல்வாங்கும்படி கொடுத்த தாலிக்குக் குங்கிலியச்சுமை வாங்கிக் கோவிலிலிருக்கும்போது சிவனரு ளால் வீடு நிரம்ப நிதிக்குவியலுண்டாகி வறுமை நீங்கிப் பின்னும்பல திருப்பணிகள் செய்து சிவபதமடைந்தார். சம் பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-3. சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. ஆகபதிகம்-5.

115 திருக்கடவூர் மயானம்:—என்பது (திருமெய்ஞ்ஞானம்) திருக்கடவூரின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிரும்மபுரீசர், மலர்க்குழல்மின்னம்மை, பிரும்மதீர்த்தம், காசிதீர்த்தம், பங்குனி அசுவதியில் காசிக்கங்கை கூபத்தில் வருவதால் ஸ்நானம் முக்கியம். சிவன் பிரும்மனை நீறாக்கி மறுபடி உயிர்ப்பித்து சிருஷ்டித்தொழிலளித்தபோது பிரும் மதேவர் பூஜித்தது. திருஞானசம்மந்தமூர்த்தி நாயனார் பதி கம்-1. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-3.

116 பஞ்சாக்கை:—திருக்கடவூரின் சமீபம். சிவஸ்தலம், பஞ்சவர்ணேசர், உமை, புராணமுண்டு. திருநாவுக்கரசு நாய னாரின் க்ஷேத்திரக்கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

117 அளப்பூர்:—என்பது (தரங்கம்பாடி) சுந்தரர் ஊர்த் தொகையிலுள்ள வைப்புஸ்தலம். திருக்கடவூரின் தெற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஸ்ரீமணிவண்ணேசர், இரத் தினம்பிகை, மாதுர்யதீர்த்தம், திருநாவுக்கரசுநாயனார் திரு வீழிமிழலைத் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

118 திருத்தெளிசேரி:—யென்பது (பொரையாறு கோவில் பத்து) காரைக்கால் ரெயில்ஸ்டேஷனின் வடமேற்கு 1-மைலில் உள்ளது. பார்வதீசர், சக்தியம்பாள், சக்திதீர்த்தம், அருச்சுனன் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் இதில் வாதுசெய்த பௌத்தர்களை வென்று சைவசமயத்தி லவர்களையுஞ் சேர்த்துக்கொண்டார்.

119 காரைக்கால்:—திருக்கடவூரின் தெற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சோமநாதர், சோமநாயகி, சந்திரபுஷ்கரிணி, பிருகு, சௌமியர், சௌநகர் பூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம். காரைக்கால் ரெயில்ஸ்டேஷன்.

120 காரைக்கால் சிவஸ்தலம். கைலாசநாதர், சுந்தராம்பாள், சிவகங்கை, காரைக்காலம்மை இதில் ஜனித்துச் சிவனைத் தினம் பூஜித்து புருஷன் கோறுதல்ப்படி சிவனருளால் மாம்பழமுண்டாக, புருஷன்பயந்து வேறுகலியாணஞ் செய்தபின் சிவனருள்பெற்று தினம் மாம்பழம் நிவேதித்துச் சிவஸ்தலங்களெல்லாம் தரிசித்துப்பாடி தலையால் நடந்து திருவாலங்காட்டில் சிவலிங்கத் திலைக்கியமானாள். மாம்பழத் திருநாளிப்பவும் நடக்கிறது. இது பிரஞ்சு இலாகா.

121 திருவேட்டக்குடி:—காரைக்காலின் வடக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், திருமேனியழகர், சாந்தநாயகி, சந்திரபுஷ்கரிணி, வனவாசத்தில் அருச்சுனன் தபசு செய்யும் போது அவனைக் கொல்லத் துரியோதனனால் ஏவப்பட்ட மூகாசுரன் பன்றியாய்வர சிவனும் வேடுவனாகித் தாரத்த, இருவர் பாணத்தாலும் பன்றி யிறக்க அதனால் சிவனும், நரனும் விற்போரும், மற்போருமிட்டு அருச்சுனன் காண்டீபத்தால் சிவன் தலையிலடிக்கப் பாணலிங்கமுமாகிச் சிவனம்மையுடன் நரனுக்குக் காக்ஷியும் பாசுபதாஸ்திரமும் கொடுத்தன்

தலம். திருஞானசம்மந்தமூர்த்தி நாயனுர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனுர் வைப்புஸ்தலம்.

122 திருநள்ளாறு:—காரைக்காலின் மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தர்ப்பாரணியேசர், போகமார்த்தபூண்முலைநாயகி, நளதீர்த்தம், சப்தவிடங்கத்திலொன்று, நகவிடங்கர், உன்மத்தநடனம், முசுகுந்தர், நளசக்கிரவர்த்தி, சனீசுவரர், ரதிதேவி பூஜித்தது. ரதி காமனையடைந்தஸ்தலம். திருஞானசம்மந்தமூர்த்தி நாயனுர் பதிகம்-4. திருநாவுக்கரசு நாயனுர் பதிகம்-2 சுந்தரமூர்த்தி நாயனுர் பதிகம்-1. ஆக பதிகம்-7. திருநள்ளாறு ரெயில்ஸ்டேஷன்.

123 திருத்தக்களூர்:—காரைக்காலின் மேற்கு 2 - மைலில் உள்ளது. சிவஸ்தலம், திருலோகநாதர், தருமசம்வர்த்தினி, சிவகங்கை, திருநாவுக்கரசுநாயனுரின் க்ஷேத்திரக் கோவையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

124 திருத்தருமபுரம்:—காரைக்காலின் மேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், யாழ்மூரிநாதர், மதுரைமின்னம்பாள், விஷ்ணுதீர்த்தம், பிரும்மதீர்த்தம், கதலிதீர்த்தம், பிரும்மா, விஷ்ணு, தருமராஜர் அகஸ்தியர் வசிஷ்டர் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனுர், சுந்தரமூர்த்திநாயனுர் வைப்புஸ்தலம்.

125 திருக்கோட்டாறு:—காரைக்காலின் வடமேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஐராவதேசர், வண்டமர் பூங்குழலி, சூரியதீர்த்தம், ஐராவததீர்த்தம், ஐராவதம் பூஜித்தது. திருஞானசம்மந்த மூர்த்திநாயனுர் பதிகம்-2. திருநாவுக்கரசுநாயனுர், சுந்தரமூர்த்திநாயனுர் வைப்புஸ்தலம்.

126 திருநெடுங்காடு:—காரைக்காலின் வடமேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தான்றோன்றீசர், நெடுந்தவனக்

தீர்த்தாள், தீர்க்காரண்யம், நெடுந்தவனந்தீர்த்தவரி, ஸ்காந்தம், சங்கரஸம்ஹிதை, ஆசுரகாண்டம், சூரிய சந்திரனையுந் தடுக்கும்படி வளர்ந்த விந்தியமலையைக் கையாலழுத்திப் பூமிக்குச் சமமாக்கியும், வாதாபி இல்வலனிருவர்களைக் கொன்றும், தன்கடத்திலிருந்த காவேரியை இந்திரனின் கோறுதல்படி கணபதியால் குடகுமலையினின்றும் சீர்காழி வரையில் பிரவாகிக்கச்செய்தும், சமுத்திரங்களை ஆசமநஞ்செய்தவருமான அகஸ்தியரிஷி, துர்வாசரிஷிக்கும், அஜாமுகிக்கும் பிறந்த இல்வலவாதபியைக் கொன்றதாலுண்டான பாபந்தீர அவரிதில் பூஜித்து, அஷ்டலிங்கப் பிரதிஷ்டையும், செய்த ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

127 நாகூர்.—காரைக்காலின் தெற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பரமேசர், பார்வதி, விஷ்ணுகோவிலும் முக்கியம். மகமதியரின் பக்கிரியாண்டவர், மசோதாவும் பிரபலம். சுந்தரமூர்த்தி நாயனாரின் திருநாட்டுத்தொகையில் வைப்புஸ்தலம்.

128 திருநாகைக்காரோணம்:—என்பது (நாகப்பட்டினம்) நாகூரின் தெற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம்; ஆதிபுராணேசர், நீலாயதாக்ஷி, தேவதீர்த்தம், சர்வதீர்த்தம், அக்நிசாகரதீர்த்தம், புண்டரீகதீர்த்தம், மாமரம், சுந்தரவிடங்கர், முசுகுந்தர்பூஜித்த சப்தவிடங்கத்திலொன்று. வலைஞரான அதிபத்தநாயனார் தினமொரு பெருமீன் சிவனுக்கென்று கடலில்விட, அநேக தினங்களில் ஒருமீனை கிடைக்க அவைகளையும் பட்டினியிருந்து உறுதியாய் விட்டதால் சிவபதமடைந்த ஸ்தலம்.

129 நாகப்பட்டினம் ஷடி கோவிலில் சிவஸ்தலம், காயாரோகணேசர், சட்டைநாதர், நாகாம்பாள் பிரும்ம தீர்த்தம்.

வஜ்ரதீர்த்தம், புண்டரீகரிஷிக்கு காசி, காஞ்சி, குடந்தையில் பூஜித்தும் முக்திகொடாமலிதில் பூஜித்து காயத்தோடு ஐக்கியம் செய்து கொண்டஸ்தலம். இரண்டுக்கும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-4. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-7.

130 திருநாகை:—பெருமாள் கோவில், விஷ்ணு ஸ்தலம். சௌந்தரராஜர், சௌந்தரவல்லி, ஸாரபுஷ்கரிணி, நாகராஜனுக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசநம்.

131 திருச்சிக்கில்:—நாகபட்டினத்தின் மேற்கு 3-மைலில் உள்ளது. ரெயில்ஸ்டேஷன், சிவஸ்தலம். நவநீதலிங்கம், நெடுங்கண்ணிநாயகி, சிங்காரவடிவேலர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் முக்கியஸ்தலம், பாற்குளம், நவநீததீர்த்தம், குடமல்லிகை, கட்டுமலை, வசிஷ்டரிஷி வெண்ணையை லிங்கமாக்கி பூஜித்தது. கிருஷ்ணர், காமதேநு பூஜித்தது. ஷண்முகர் தேவர்களுக்கபயங் கொடுத்துச் சூரனை வெருட்டி ஸம்ஹாரஞ்செய்தது. இக்கோவிலில் வாமநப்பெருமாள், கிருஷ்ணன் சந்நிதியுமுண்டு. திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனாரும் வைப்புஸ்தலம்.

132 ஆழியூர்:—சிக்கிலின் மேற்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கங்காளேசுவரர், கற்பகவல்லி, பிடாரிதீர்த்தம், பார்வதியின் மாயாசக்தி யிலுண்டான பீடாஹாரிணியான பிடாரியால் பூஜித்தது. சுந்தரமூர்த்தி நாயனார், திருநாட்டுத் தொகையிலுள்ள வைப்புஸ்தலம்.

133 மாகாளமென்பது:—ஆனைமாகாணம். சிக்கிலின்மேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மாகாளேசுவரர், மங்களநாயகி, காளிதீர்த்தம், காளிபூஜித்தது. திருநாவுக்கரசு நாய

னார்த்திருவீழி மிழலைத்திருத் தாண்டகத்திலும், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார், க்ஷேத்திரக் கோவையிலு முள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

134 கீழ்வேளூர்:—சிக்கிலின் மேற்கு 4-மைலில் உள்ளது. ரெயில்ஸ்டேஷன். சிவஸ்தலம். அக்ஷயலிங்கேசர், கடிநஸ்தந நாயகி, சிவஞானதீர்த்தம், அக்ஷயதீர்த்தம், கருங்கல்கட்டுமலை, இலந்தைமரம், நடராஜர் முக்கியம். கந்தர்பூஜித்தது. அகஸ்தியர்பூஜித்துச் சிவன்வலது திருவடித்தரிசனங் காட்டியவர், கட்டுமலைமேலஞ்சுவட்டம். அம்மன்சந்நிதி; விசேஷம், சப்தஸ்தாந உற்சவமு மிதிலுண்டு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆக-2.

135 திருத்தேவூர்:—கீழ்வேளூரின் தெற்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தேவபுரீசர், மதுரபாஷிணி, கட்டுமலை, தேவதீர்த்தம், பிருகஸ்பதிதீர்த்தம், வாழைமரம், இந்திரன், குபேரன், கௌதமரிஷி, பிருகஸ்பதி பூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் வைப்பு ஸ்தலம்.

136 திருநாட்டியத்தான்குடி:—ரெயில் ஸ்டேஷன், கீழ்வேளூரின் தென்மேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ரத்தினகிரீசர், மலைமங்கை, சூரியதீர்த்தம், மகாதீர்த்தம், புலகரிஷி, வியண்டகரிஷி, யானைபூஜித்தது, கட்டுமலை, வேளாளரான கோட்புலி நாயனாரென்னுஞ் சேனைத்தலைவர், சிவனுக்கென்று வீட்டில் வைத்திருந்த நெல்லை மிகப்பசியாலுண்டதற்கு தாய், தந்தை, பாரி, பிள்ளைகளையும், வெட்டியதால் யாவரும் சிவபதமடைந்த ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்பு ஸ்தலம்.

137 திருப்பேரெயிலென்பது:—ஓகைப்பேரையூர். திருநாட்டியத்தான் குடிக்கு வடமேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஜகதீசர், பெண்ணமிருத நாயகி, வெள்ளையாறு, அக்கினிதீர்த்தம், அக்கிபூஜித்தது. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1

138 ஷை கோவிலுக்குள் சகலபுவனேசர், மேகலாம்பாள், வருணன் பூஜித்தது, சிவஸ்தலம்.

139 திருநெய்ப்பேரூரென்பது:—(நெய்ப்பேரூர்) திருமப்பத்து திருவாரூரின் தெற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். நெய்ப்பேரூர்நாதர், பார்வதி, நமிநந்தியடிகளாகிய பிராமணரிதில் ஜனித்து, சிவசந்நிதியில் திநம் நெய்விளக்கிட்டுவரும் நாளில், ஒருதினம் திருவாரூரில் சமணர்கள் நெய்யில்லையென்றதால், சிவனருளால் கமலாலயத்தின் ஜலத்தாலனேக தீபங்களேற்றிப் பாரியுந்தானுஞ் சிவபதமடைந்தார். திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

140 திருக்கன்றாப்பூர்:—திருநாட்டியத்தான் குடியின் கிழக்கு 4 மைல். சிவஸ்தலம், நடுத்தறியப்பர், மாதுநாயகி, ஞானதீர்த்தம், இடும்பாசுரன் பூஜித்தது. வைணவனுக்குப் பாரியான சிவபத்தியுள்ள பிராம்மணப் பெண்ணுக்காக அவள் பூஜித்தகன்று கட்டுமரப்பிலிருந்து உற்பத்தியாகி, அவளுக்கு நற்கதியளித்தவர், திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1

141 திருவலிவலம்:—திருவாரூரின் தென்கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மநத்துணைநாதர், வாளையங்கண்ணி, காரணகங்கை, சக்கரதீர்த்தம், புன்னைமரம், சூரியன், காரணரிஷி, கருங்குருவி பூஜித்தது. கட்டுமலை திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக-4.

142 திருக்காராயிலென்பது:—காரைவாசல். திருநாட்டியத்தான்குடியின் தென்கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஸஹஸ்ரநேத்திரர், கைலாஸநாயகி, குக்குடநடநம், ஆதிவிடங்கர், பிரும்மதீர்த்தம், இந்திரதீர்த்தம், பிரும்மா, இந்திரன், முசுகுந்தர் பூஜித்த சப்தவிடங்கத்திலொன்று, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

143 திருநெல்லிக்கா:—ரெயில் ஸ்டேஷன் திருவாரூரின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். நெல்லிவனேசர், மங்களேசுவரி, பிரும்மதீர்த்தம், அற்புகதீர்த்தம், பிரும்மா, சூரியன், தாருகாவனத்து ரிஷிகள் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவும் சுந்தரரும் வைப்பு ஸ்தலம்.

144 திருத்தெங்கூர்:—திருநெல்லிக்காவின் தென்மேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வெள்ளிமலைநாதர், பிருகதம்பாள், சிவகங்கை, கருணாகரதீர்த்தம், இலக்ஷ்மி, ஹரிஹரபுத்திரர், நவக்கிரகங்கள் பூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவு வைப்புஸ்தலம்.

145 திருக்கைச்சினம்:—திருநெல்லிக்காவின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கைச்சினநாயகர், வெள்வளைநாயகி, இந்திரன், திருணபிந்துரிஷி பூஜித்தது, இந்திரன் மணலான லிங்கத்தைத் தூக்கும்போது கைச்சின்னம் பட்டது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவு வைப்பு ஸ்தலம்.

146 திருக்கோளிலி:—யென்பது (திருக்குவளை) திருநெல்லிக்காவின் கிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கோளிலிநாதர், வண்டமர் பூங்குழலி, பிரும்மதீர்த்தம், அவனிவிடங்கர், பிரும்மா, பாண்டவரில்பீமன், வண்டு, முசுகுந்தர் பூஜித்-

தசப்தவிடங்கத்தி லொன்று. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக-4

147 குன்றையூர்:—திருநெல்லிக்காவின் கிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, பரவையாருக்குக் குன்றையூர் கிழவர் கொடுத்த நெல்லுமூட்டைகளைப் பூதகணங்களைக் கொண்டு திருவாரூரில் இராத்திரியிலேயே சுந்தரமூர்த்திநாயனாரின் பக்திக்கிரங்கிப் பரவையார் வீட்டில் சேர்த்தது. சுந்தரமூர்த்தி நாயனாரின் திருப்பதிக வைப்புஸ்தலம்.

148 எட்டிகுடி:—திருநெல்லிக்காவின் தென்கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, கந்தர், வள்ளி, தெய்வானை, கந்தர், அகஸ்தியருக்கு உபதேசித்தது.

149 திருத்தேன் திருவாய்மூர்:—திருநெல்லிக்காவின் தென்கிழக்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வாய்மூர்க்கடவுள், பாலினும் நன்மொழிநாயகி, சூரியதீர்த்தம், சண்டமாருத தீர்த்தம், கமலநடனம், சூரியன், முசுகுந்தர் பூஜித்த நீலவிடங்கர், சப்தவிடங்கஸ்தலம், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், திருநாவுக்கரசு நாயனாரும் சேர்ந்து பாடியது. திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. ஆக-3. சுந்தரமூர்த்தி நாயனாரும் வைப்பு ஸ்தலம்.

150 ஈசனூர்:—திருநெல்லிக்காவின் தென்கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவன், உமை, சுந்தரமூர்த்தி நாயனார் இடையாற்றுத் தொகையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம். இலமாயிருப்பதை நண்பர்கள் கவனிக்கவும்.

151 திருகோள்ளிக்காடு:—திருநெல்லிக்காவின் மேற்கு 4 மைலில் உள்ளது. சிவஸ்தலம். திருவண்ணநாதர், பஞ்சின்

மெல்லடிநாயகி, அக்கினிதீர்த்தம், வீரபத்திரரும் அக்நியும் பூஜித்தது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

152 விளத்தூர்;—திருநெல்லிக்காவின் தெற்கு 2-மைலில் உள்ளது. சிவன், உமை, சுந்தரமூர்த்தி நாயனார், திருநாட்டுத்தொகையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

153 திருத்துரைப்பூண்டி:—ஜங்ஷன் ரெயில்ஸ்டேஷன் திருநெல்லிக்காவின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வில்வவனேசர், கமலாம்பாள், வில்வமரம், தியாகராஜர் முக்கியம். புராணமுண்டு.

154 வேளூர்:—திருத்துரைப்பூண்டியின் வடக்கு 3-மைலில் உள்ளது. சிவன், உமை, சுந்தரமூர்த்தி நாயனார் திருநாட்டுத்தொகையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

155 திருத்தண்டலைநீணெறி:—யென்பது (தண்டலச்சேரி) திருத்துரைப்பூண்டியின் வடக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், நீணெறிநாதர், ஞானாம்பிகை, எமகதீர்த்தம், குருந்தைமரம், கூர்மாவதாரத்தில் மதங்கொண்ட விஷ்ணுவின் ஓட்டை சிவனணிந்தஸ்தலம். இதினெரமையிலின் கிழக்கிலிருக்கும் கணமங்கலத்தில் வேளாளர் மாபிலுதித்த அரிவாட்டாயனுபனுரிதில் தினம் செந்நெல், செங்கீரை, மாவடு, நிவேதித்துத்தான் கூலிக்கறுத்தும் ஷெடிகியமந்தலறுமல் நடத்தும்போதொருநாள் வரும்வழியில் கமரில் கொட்டிவிட, அரிவாளால் தன்கழுத்தை அறுக்கும்போது சிவன் காக்ஷிதந்து பாரியுடன் சிவபதவடைந்தார். இப்பவும் மாவடுகீரை நிவேதனமுண்டு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

156 தில்லைவிளாகம்:—திருத்துறைப்பூண்டியின் தெற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், நடராஜர், சிவகாமி, ஸ்ரீராமர் இலக்ஷ்மணர், சீதை, பரதர், சத்ருக்னர், அநுமார் இந்த மூர்த்தங்கள் வெகுகாலம் பூஜையிலிருந்து பின்பூமியில் புதைக்கப்பட்டு முப்பது வருஷங்களுக்குமுன் பூமியிலிருந்து கிடைத்தஸ்தலம். தில்லைவிளாகம் ரெயில்ஸ்டேஷன்.

157 திருமறைக்காடு:—என்பது (வேதாரண்யம்) திருத்துறைப்பூண்டியின் கிழக்கு 23-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வேதாரண்யேசர், யாழைப்பழித்தமொழியாள், உங்கார கணபதி, அமிருதநடனம், மணிகர்ணிகை, வேததீர்த்தம், சூரியதீர்த்தமாகிய சமுத்திரம், வன்னிமரம், ஆதிசேது, தக்ஷிணமூர்த்திக்கு நான்குமுகம், சநி, அகஸ்தியர், வசிஷ்டர், வேதங்கள், முசுகுந்தர் பூஜித்தசப்த விடங்கஸ்தலம். இந்த ஆலயத்தில் தீபநெய்யை உண்ணவந்த எலியால் தீபம்பிரகாசமானதால் எலி மறுஜன்மம் மகாபலி சக்கரவர்த்தியாய்ப் பிறந்து, மூவுலகாண்டார், வேதக்காப்பிட்டடைத்திருந்த கதவை திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், திருநாவுக்கரசு நாயனாரும், பதிகம்பாடிக் கதவுதிறக்கவுஞ், சாத்தவுமான, புராதன முக்தின்தலம். ஆடி, தை, அமாவாசை, ஸ்நானம் முக்கியம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-4 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-5. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-2. ஆக பதிகம்-11. ரெயில் ஸ்டேஷன்.

158 திருஅகத்தியான்பள்ளி:—வேதாரண்யத்தின் தெற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ரெயில்ஸ்டேஷன், அகஸ்தியேசர், பாகம்பிரியாள், அக்நிதீர்த்தம், அகஸ்தியதீர்த்தமாகியகடல். அகஸ்தியர் பூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்பு.

159 திருக்கோடிக்குழகர்என்பது:--கோடிக்காடு வேதாரண்யத்தின் தெற்கு 8-மைலில் உள்ளது சிவஸ்தலம். அமிருதகடேசர், மையார்தடங்கண்ணி, அமிருததீர்த்தம், தநுஷ்கோடிசமுத்திரம், உருத்திரகோடிசமுத்திரம், வருணன், வாயு, அநேகரிஷிகளும் தேவர்களும் பூஜித்தது. முன்னொரு ராமாவதாரத்திலிதில பூஜித்து அணைகட்டின ஆதிசேது, திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1.

160 தென்கோடி:—என்பது பஞ்சநதக்குளம், வேதாரண்யத்தின் மேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தென்கோடிநாதர், மதுரமொழிநாயகி, பஞ்சநதக்குளம், பாண்டவர்களும் நவகோடிசித்தர்களும் பூஜித்தது திருஞாந சம்பந்தமூர்த்திநாயனார் க்ஷேத்திரக்கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

161 தணிக்குளம்:—என்பது (கோவிற்குளம்) வேதாரண்யத்தின் தென்மேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ரிஷீசுவரர், பாலினுநன்மொழியாள், ரிஷிதீர்த்தம், ரிஷிகள்பூஜித்தது, திருநாவுக்கரசு நாயனார் அடைவுத்திருத்தாண்டகத்திலுள்ளது.

162 தகட்டூர்:--திருத்துறைப் பூண்டியின்கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவலோகநாதர், சிவகாமசுந்தரி, பைரவர் முக்கியம், ஆவிடையார்கோவிலில் மாணிக்கவாசகருக்கு சகல உற்சவமும் நடப்பதுபோல இதில் பைரவமூர்த்திக்கே சகல உற்சவங்களும் நடக்கிறது. சுந்தரமூர்த்திநாயனார் திருநாட்டுத்தொகையிலுள்ள வைப்புஸ்தலம். தகட்டூர் ரெயில்ஸ்டேஷன்.

163 திருஇடும்பாவனம்:—தில்லைவிளாகத்தின் தெற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சர்க்குணநாயகர், மங்களாம்

பாள், வெள்ளைச்சுமுகர், சீததீர்த்தம், இடும்பாசுரன் பூசித்தது. சிவனுமுமையுமுலகமுழுவதுஞ் சீக்கிரஞ் சுற்றிவந்தவர்களுக்கு மாங்கனி தருவதாகக் கணபதியையுங் கந்தரையுந் தூண்ட, கணபதி சிவனையுமுமையையும் பிரதக்ஷணஞ்செய்து உலகெலாஞ்சுற்றப் போனகந்தரை ஏமாற்றி மாங்கனி பெற்றஸ்தலம். திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1.

164 திருக்கடிக்குளம்:—என்பது (கற்பகனார் கோவில்) தில்லைவிளாகத்தின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம் கற்பகநாதர், சௌந்தரநாயகி, விநாயகதீர்த்தம், கற்பகப் பிள்ளையார், மாங்கனி கிடைத்தபின் கணபதிசந்தோஷத்தால் பூஜித்தஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1

165 முத்துப்பேட்டை:—தில்லைவிளாகத்தின் தெற்கு 10-மைலில் உள்ளது. சிவன், உமை, பெருமாள், கோவிலும் முக்கியம். சமுத்திரம், முத்துப்பேட்டை ரெயில்ஸ்டேஷன்.

166 திருஉசாத்தானம்:—என்பது (கோவிலூர்) முத்துப்பேட்டையின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மந்திரபுரீசர், பிருகதப்பாள், நிர்மலதீர்த்தம், சுக்கிரீவதீர்த்தம்; சூதவநம், ஸ்ரீராமர், இலக்ஷுமணர், ஹநுமார், சுக்கிரீவன், ஜாம்புவான் பூஜித்ததாகவும், ராமர் மந்திரோபதேச மடைந்தாரென்றும் பதிகத்திலுள்ளது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1.

167 பட்டுக்கோட்டை:—முத்துப் பேட்டையின் மேற்கு 10-மைலில்உள்ளது. விஷ்ணுஸ்தலம். பரந்தாமர், இலக்ஷுமி பட்டுக்கோட்டை ரெயில்ஸ்டேஷன்.

168 மாகுடி:—என்பது (மாங்குடி) முத்துப்பேட்டையின் மேற்கு 14-மைலில் உள்ளது. சிவன், உமை, வெள்ளாறு,

திருநாவுக்கரசுநாயனர், அடைவுத்திருத் தாண்டகத்திலுள்ள திருப்பதிகவைப்புஸ்தலம். மாங்குடி ரெயில்ஸ்டேஷன்.

169 திருச்சிற்றம்பலம்:—பட்டுக் கோட்டையின் மேற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அம்பலவாணர், சிவகாமி, சுந்தரமூர்த்தி நாயனர் திருநாட்டுத் தொகையிலுள்ளது. திருச்சிற்றம்பலம், ரெயில்ஸ்டேஷன்.

170 அறந்தாங்கி.—பட்டுக்கோட்டையின் மேற்கு 15மைலில் உள்ளது சிவன், உமை, பெருமாள்கோவிலும் முக்கியம். அறந்தாங்கி ரெயில்ஸ்டேஷன்.

171 திருச்சிற்றேமம்:—என்பது (சித்தாம்பூர்) திருத்துறைப்பூண்டியின் வடக்கு 7-மைலில் உள்ளது சிவஸ்தலம். சொர்ணேசர், அகிலாண்டவல்லி, ஹரிச்சந்திரநதி, ஆத்திமரம், சொர்ணதீர்த்தம், பிரம்மா, இந்திரன், வியாசர், அகஸ்தியர், நாகராஜர்களும் பூஜித்தது, சித்தர்கள் தேனியுருவுடன் நிதம் பூஜிக்கும்ஸ்தலம். சிவபக்தியுள்ள ஏழை வைசியகுலப்பெண்ணுன் பதி ஊருக்கு வரும்வரையில் பசியை நீக்கப்பொற்காசு கொடுத்தவர், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனர் வைப்புஸ்தலம்.

172 பொன்னிறை:—திருத்துறைப்பூண்டியின் வடக்கு 7-மைலில் உள்ளது. சிவன், உமை. சித்தாம்பூரிலிருந்து வந்த வைசியப்பெண்ணுக்கு ஒரு வைசியனைக்கொண்டு பொன்னை மாற்றிக்கொடுத்ததால் இத்தலத்துக்கு பொன்னிறையென்று பெயர்.

173 திருக்களர்:—திருத்துறைப்பூண்டியின் மேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், களர்முளையீசர், சௌந்தரநாயகி, பாரிஜாதவனம், துர்வாசதீர்த்தம், துர்வாசரிஷி, பராசரர், காளவர், பூசிக்க நடனதரிசனங்காட்டிய நடராஜர், திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1.

174 திருக்கோட்டூர்:—இராஜமன்னார் கோவிலின் தெற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவக்கொழுந்தீசர், மதுரவசனாம்பாள், அமிருததீர்த்தம், வன்னிமரம், குச்சரமுனியும் தேவர்களும் பூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

175 திருவெண்டுறை:—இராஜமன்னார் கோவிலின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வெண்காடுறை நாதர், வேல்நெடுங்கண்ணி, அகஸ்தியதீர்த்தம், தாளதீர்த்தம், அகஸ்தியரும், வித்தியாதரர்களும், வண்டுருபத்துடன் பிருங்கிரிஷியும் பூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

176 இராஜமன்னார் கோவில்:—திருத்துறைப் பூண்டியின் மேற்கு 16-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சம்பகாரணியர், பார்வதி, சுந்தரேசர், மீனாக்ஷி, புராணமுண்டு. இராஜமன்னார்கோவில் ரெயில்ஸ்டேஷன்.

177 தெ டவுன் தெக்ஷிண துவாரகை. விஷ்ணுஸ்தலம், இராஜகோபாலர், செங்கமலவல்லி, ஸ்ரீகண்ணபிரான், உருக்குமணி, சத்தியபாமை, சம்பகாரண்யம், அரித்திராநதி, சங்கதீர்த்தம், சக்கரதீர்த்தம், கிருஷ்ணதீர்த்தம், உருக்குமணிதீர்த்தம், கஜதீர்த்தம், க்ஷீரஸாகரம், கோப்பிரளயருக்கு பிரத்தியக்ஷம், 108-திவ்யதேசங்களில் சேராத புராணஸ்தலம்.

178 திருப்பாதாளேசுவரம்:—என்பது (பாம்பணி) இராஜமன்னார்கோவிலின் வடக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சரப்பேசர், அமிருதாம்பாள், பாம்பணிநதி, சர்ப்பதீர்த்தம், சர்ப்பவுருவமைந்த தநஞ்செயரிஷி பூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்,

179 திருப்பூவணூர்;—இராஜமன்னூர் கோவிலின் வடக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், புஷ்பவநேசர், கற்பகவல்லி கற்பகதீர்த்தம், கருங்குழி தீர்த்தம், பாம்பணிநதி, சுகமுனி பூஜித்தது. இதிலுள்ள சாமுண்டேஸ்வரி சந்நிதியில் எலிகடிக்கு கட்டுவது பிரபலம், திருநாவுக்கரசுநாயனூர் பதிகம்-1.

180 நீடாமங்கலம்:—இராஜமன்னூர் கோவிலின் வடக்கு 10-மைலில் உள்ளது சிவஸ்தலம், கைலாஸநாதர், உமை பாம்பணிநதி, வெண்ணூறு. நீடாமங்கலம் ஜங்ஷன் ஸ்டேஷன்.

181 திருஇரும்பூளை:—என்பது (ஆலங்குடி) நீடாமங்கலத்தின் வடக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். காசியாரணியேசர், ஏலவார்குழலி, அமிருதப்பொய்கை, காசிதீர்த்தம், விசுவாமித்திரர் பூஜித்தது, சிவன் தக்ஷிணமூர்த்தியாகி ரிஷிகளுக்குபதேசித்த ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனூர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனூர் வைப்புஸ்தலம்.

182 அவளிவநல்லூர்:—நீடாமங்கலத்தின் வடமேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சாக்ஷிநாதர், சவுந்தரநாயகி, பிரசந்நதீர்த்தம், சந்திரபுஷ்கரிணி, விஷ்ணு காசியபரிஷி பூஜித்தது. குருக்கள்பெண்ணுக்கு சாக்ஷிசொன்ன ரிஷபாருடராயிருக்கிறூர், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனூர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனூர் பதிகம்-1. ஆக பதிகம்-2.

183 திருஅரதைப் பெரும்பாழி:—என்பது (ஹரித்துவாரமங்கலம்) நீடாமங்கலத்தின் வடமேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பாதாளேசர், அலங்காரிஅம்மன், பிரும்மதீர்த்தம், விஷ்ணுவின் வராகவதாரத்தில் கொம்பை ஒடித்து மதத்தையடக்கினவர், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனூர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனூர் வைப்புஸ்தலம்.

184 கோரடாச்சேரி:—நீடாமங்கலத்தின் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பரமசிவன், பார்வதி, கோரடாச்சேரி ரெயில்ஸ்டேஷன்.

185 அமிருதேசுவரம்:—கொரடாச்சேரியின் சமீபம். சிவஸ்தலம். அமிருதேசர், உமை, புராணமுண்டு.

186 எண்கண்:—கொரடாச்சேரியின் சமீபம் சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சூரனைக் கொன்றதாக ரிஷிகளுக்குச் சொன்னஸ்தலம்.

187 திருக்கொள்ளம்புதூர்:—என்பது (செல்லூர்) கொரடாச்சேரின்வடமேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வில்வவனேசர், சௌந்தராம்பாள், பிரும்மதீர்த்தம், வெட்டாறு, வில்வமரம், சாண்டிலியர்பூஜித்தது. ஐப்பசிமாச அமாவாசையில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு ஓடம்விட்டவர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

188 திருக்குடவாசல்:—கொரடாச்சேரியின் வடக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கோணேசர், பிருஹந்நாயகி, அமிருததீர்த்தம், திருக்குடம், திருணபிந்துமுனி பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

189 நாலூர்:—என்பது (நாத்தூர்) கொரடாச்சேரியின் வடக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பலாசவனேசர், பிருஹந்நாயகி, பலாசதீர்த்தம், ஆபஸ்தம்பரிஷி பூஜித்தது.

190 நாலூர்மயானம்:—கொரடாச்சேரியின் வடக்கு 11-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பரமேசர், பார்வதி, சந்திரபுஷ்கரிணி, 189-நாத்தூருக்கும் இந்தஸ்தலத்துக்கும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

191 திருச்சேறை:—என்பது (உடையார்கோவில்) கும்பகோணத்தின் தென்கிழக்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், செந்நெறியப்பர், ஞானவல்லி, மார்க்கண்டேயதீர்த்தம் மனோகரதீர்த்தம், மார்க்கண்டேயரும் தௌமியரும் பூஜித்தது.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2 ஆக பதிகம்-3.

192 ஷை திருச்சேறை விஷ்ணுஸ்தலம், ஸாரநாதர், ஸாரநாயகி, ஸாரபுஷ்கரணி, ஸாரக்ஷேத்திரம், காவேரிக்கும் வருணனுக்கும் பிரத்தியக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

193 திக்கவோக்கரைப்புத்தூர்:—என்பது (ஆண்டார் கோவில) கொரடாச்சேரியின் வடமேற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சொர்ணபுரீசர், சிவாம்பிகை, சொர்ணதீர்த்தம், காசியபரிஷி பூஜித்தஸ்தலம் திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1

194 சம்போமகாதேவி:—இராஜமன்னார் கோவிலின் தெற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சுந்தரேசர், மீனாக்ஷி, ஓங்காரஸ்தலநருமதை நதியிலிருந்து மன்னார்கோவில் மகான் அப்பய்யதீக்ஷிதர், மதுரைப்பாண்டிய ராஜமந்திரி நீலகண்ட தீக்ஷிதர் வம்சத்திலுதித்த சாஸ்திரநிபுணரான மன்னார் கோவில் ராஜூசாஸ்திரிகளின் சிஷரான மகான் ஷையூர் வெங்கடராமசாஸ்திரிகளால் கொண்டுவந்து பூஜித்து இதில் ஸ்தாபிக்கப்பட்டது. ஓங்காரஸ்தலநருமதை நதியிலிருந்து எடுக்கும் பாணலிங்கங்கள் தவிர இமயமலையில் கைலாஸகிரியின் 80-மைலுக்கு தெற்கிலுள்ள மாநஸஸரஸிலும் பாணலிங்கங்கள் கிடைக்கும். கங்கோத்பத்தியாகிய மாநஸஸரசில் இந்துமடங்களும் தவசிகளுமுண்டு. வடபுறம் காடானதால் கைலாஸகிரிக்கு மனிதர் போகமுடியாது.

195 நந்திபுரவிண்ணகரம்:—என்பது (நர்தர்கோவில்) கும்பகோணத்தின் தெற்கு 5-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஜகநாதர், விண்ணகரப் பெருமாள், சண்பகவல்லி, நந்திதீர்த்தம், அரிசிலிநதி, நந்திக்கும் சிபிசக்கரவர்த்திக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# நான்காம் அத்தியாயம்.

## சோழநாடு மேல்பாகம் காவேரி வடகரை அப்புலிங்க ஸ்தலம்.

1 திருவானைக்கா:—திருச்சியின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஜம்புநாதர், அகிலாண்டநாயகி, காவிரி, ஜம்புதீர்த்தம், வெள்ளைநாவல்மரம், ஜலமயமானலிங்கம், பார்வதி, திருமால், பிரும்மா, ராமர், வசிஷ்டர், பாராசரர், அகஸ்தியர், கௌதமர், சூரியன், சந்திரன், சநீசுவரன், வருணன், காட்டானை, சிலந்தி, இவர்கள் பூஜித்ததாக 30 அத்தியாயமுள்ள புராணமுள்ளது, 24 சதுர்யுகங்களுக்குமுன் யானைக்காடாயிருந்தபோது திநம் நாவல்மரத்தடியிலுள்ள லிங்கத்தைச் சிலந்தி பூஜித்துத் தழைவிழாமல் வாய்நூலால் லிங்கத்துக்குமேல் பந்தலிட்டு வந்ததைப் பக்தியுடன் பூஜித்த ஒரு காட்டானை துதிக்கையால் பந்தலைத் திநமுமறுத்து விட்டதால், சிலந்தி கோபமடைந்து யானையின் துதிக்கையில் நுழைந்ததால் யானை இறந்து சிவனுலகடைந்தது. சிலந்தியுமிறந்து மறுஜன்மம் உறையூரில் கோச்செங்கட்சோழ நாயனாராகப் பிறந்து முன் ஜன்ம எண்ணப்படி இதிலனேக திருப்பணிகள்செய்து யானை நுழையாதமாடக் கோவிலாக இதிலுமின்னம் (64) சிவபதிகளிலுமமைத்துச் சிதம்பரத்திற் ஐக்கியமானார். ஷை சோழராஜன் கழுத்திலிருந்து காவிரியில் விழுந்தமுத்துமாலையைச் இச்சிவன் வரச்செய்தவர், சிவன் தன் கரத்தால் திருநீறள்ளிக் கொடுத்துக்கடைசி மதிலெழுப்பியதால் அதற்குவிபூதிப்பிரதக்ஷிணமென்றுபெயர். பஞ்சப்பிராகார உற்சவம், நிரம்பவும் முக்கியம். 4000-சோழியப்பிராமணர்கள் பூஜிக்கும் ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-3. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-3. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-7.

2 ஷை ஸ்தலம் தெப்பகுளமேல்கரையில் நீலஹரேசர், அகிலநாயகி, ராமதீர்த்தம், ஸ்ரீராமர் பூஜித்தலிங்கம் இதின் வடபுறம் ஸ்ரீராமர்கோவில் பெரிதாயிருந்ததற் கடையாள மாகக் கோபுரமுஞ் சுற்றுமதிலு மிடிந்திருக்கிறது. ஸ்ரீராமர், இலக்ஷ்மணர், சீதை இந்த விக்கிரகங்களை ஸ்ரீரங்கத்தில் அமைத்திருக்கிறார்கள்.

3 ஸ்ரீரங்கம்:—திருச்சியின் வடமேற்கு 2-மைலில் உள்ளது, டவுன், விஷ்ணுஸ்தலம், ஸ்ரீரங்கநாதர், ரங்கநாயகி, காவேரி, கொள்ளிடம், சந்திரபுஷ்கரணி, பின்னைமரம், பிரணவாகிருதி விமானம், வேதசிருங்கம், புஜங்கசயனம், தெற்கே திருமுகம் ஸ்ரீராமர்பூஜித்தது விபீஷணருக்குக் கொடுத்தது. தருமவர்மா, ரவிவர்மா, சந்தநு, அருச்சுனனுக்கும் பிரத்தியக்ஷம். வைகுண்ட ஏகாதசி உற்சவம் பிரபலம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருப்பாணாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருமங்கையாழ்வார் இவர்களின் மங்களாசாஸனம். இதில் உள்பிரகாரத்தில் விநாயகரும், க்ஷேத்திரபாலகராய் யிருக்கிறார், சந்திரபுஷ்கரணிக்கு கீழ்புறம் ஸ்ரீராமர், இலக்ஷ்மணர், சீதை; வைகுண்டநாதர், இலக்ஷ்மி சந்நிதிகளுமுண்டு. சுற்றுப்பிரகாரத்தில் 10 ஆழ்வார்கோவில்களும் கிருஷ்ணன் சந்நிதியுமுண்டு. அடையவளஞ்சான் திருமதிலுக்கு வெளியில் வடக்கு வாசலுக்கு மேல்புறம் தசாவதாரர் கோவிலும், கீழ்வாசலுக்குத் தென்கிழக்கில் சிங்கப்பெருமாள் கோவிலும் முக்கியம். சந்நிதிக்கு நேராகக் காவிரி அம்மாமண்டபத் துறையில் ஸ்நானம் புண்ணியமானது. இஷ்டசித்தியும் முக்தியுமடையலாகும். திருமஞ்சனக்காவிரியின் தென்கரையில் நூதனமாகவிநாயகருமுண்டு. இலக்ஷ்மியாகிய ஆண்டாளை ரங்கநாதர் கலியில் மணஞ்செய்தார்.

4 கரம்பனூர்.—என்பது (உத்தமர் கோவில்) ஸ்ரீரங்கத்தின் வடகிழக்கு 1-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், கொள்ளிடம் வடகரை, புருஷோத்தமர், பூர்வாதேவி, கதம்பதீர்த்தம், கதம்பரிஷி, உபரிசரவசு, சனக, சநந்தன, சநாதன, சநற்குமாரருக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

5 ஷை உத்தமர்கோவிலுக்குள் பிக்ஷாடனர், பாலைபார்வதி, விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, இதில் பிரும்மாவும், சரஸ்வதிகோவில்களுமுண்டு. இது திருமூர்த்திஸ்தலம். இதில் புதிய ரெயில்வேஸ்டேஷனும் ஏற்படுகிறது.

6 மண்ணச்சநல்லூர்:—உத்தமர்கோவிலின் வடமேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிருதிவீநாதர், உமை, பற்குநிநதி.

7 திருப்பாச்சிலாச்சிராமம்:—என்பது (திருவாசி) உத்தமர்கோவிலின் மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மாற்றுவரதீசர், பாலசுந்தரி, கொள்ளிடம், பிரும்ம தீர்த்தம், பொய்கை, ஆரண்யதீர்த்தம், சமீவகம், வன்னிமரம் மழவராஜன் பெண்ணுக்கு திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பாடி முயலகப்பெரு வியாதியைத் தீர்த்தது. இதில் சபாபதிக்குக் கிரீடமும் சர்ப்பத்தின் மேல்நடனமுமுண்டு. சுந்தரமூர்த்தி நாயனார் பாடி மட்டுப்பொன்னைக்கொடுக்க, மறுபடியும் பாடிய பின் விஷ்ணுவைக்கொண்டு உயர்ந்த மாற்றாகக் காண்பித்ததால் மாற்றுவரதீசரென்று பெயர். இதின்கிழக்கு 2-மைலில் மாதவப்பெருமாள் கோவிலுக்குள்பெருமாளும், சிவலிங்கமும் அம்மனுமொரு ஆலயத்துக்குள்ளிருக்கிறார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

8 துடையூர்:—உத்தமர்கோவிலின் மேற்கு 6-மைலிலுள்ளது. சிவஸ்தலம், விஷமங்களேசர், மங்களநாயகி, ராமபாண்டியன் பூஜித்தலிங்கம். 7, 8, 9 இலக்கமுள்ள ஸ்தலங்களின் சுவாமிகளும் இன்னம் 6-ஸ்தல சுவாமிகளும் தைப்பூசத்திவிதில் கொள்ளிடத்தில் தீர்த்தம் கொடுப்பதுண்டு. திருநாவுக்கரசுநாயனார் அடைவுத்திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிகவைப்புஸ்தலம். இது கொள்ளிடக்கரையோரம்

9 திருப்பைஞ்ஞீலி:—உத்தமர் கோவிலின் வடமேற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், நீலகண்டேசர், விசாலாக்ஷி நீலிவனம், கல்லில்வாழை எப்பொழுதுமுள்ள கதலீவனம் தரளாசலம், விமலாரணியம், தேவதீர்த்தம், மணிகர்ணிகை, அக்நிதீர்த்தம், சிவகங்கை, இந்திரதீர்த்தம், இயமதீர்த்தம், அப்பர்தீர்த்தம், துற்கி, அம்பிகை, பிரும்மா, விஷ்ணு, இராமர், வாயு, காமதேநு, தால்பியர், முசுகுந்தர், அருச்சுனன், இயமன், அங்கமித்திரன், வியாக்கிரசூரன், அகஸ்தியர், வசிஷ்டர், இராமபாண்டியன் இவர்கள்பூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் வரும்வழியில் கட்டமுது கொடுத்தவர், பஞ்சப்பிரகார உற்சவமுமுண்டு. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசநாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-3.

10 திருவெள்ளறை:—ஸ்ரீரங்கத்தின் வடக்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம்; புண்டரீகாக்ஷர், சுவேதகிரிமூர்த்தி சண்பகவல்லி, பங்கஜவல்லி, குசதீர்த்தம், மணிகர்ணிகை, சக்கரதீர்த்தம், புஷ்கலதீர்த்தம், திவ்யதீர்த்தம், பத்மதீர்த்தம், கந்தபுஷ்கரிணி, க்ஷீரபுஷ்கரணி, சிரியதிருவடிக்கும், சிபிசக்கிரவர்த்திக்கும், மார்க்கண்டேயருக்கும், பூதேவிக்கும் பிரத்தியக்ஷம் பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

11 துறையூர்;—உத்தமர்கோவிலின் வடமேற்கு 12-மைலில் உள்ளது. ஜமீன், சிவஸ்தலம், சிவன், உமை திருநாவுக்கரசுநாயனாரின் அடைவுத்திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம். இதில் பெருமாள்கோவிலும் முக்கியம்.

12 திருப்பட்டியூர்:—உத்தமர்கோவிலின் வடக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பட்டீசர், ஜகதம்பாள், சுந்தரமூர்த்திநாயனார் ஊர்த்தொகையிலுள்ள வைப்புஸ்தலம். கந்தரும் முக்கியம்.

13 செட்டிகுளம்:—உத்தமர்கோவிலின் வடக்கு 22-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, தனிமலை புஷ்கரிணி. திருப்புகழ்பாடலுள்ள சுப்பிரமணியர் முக்கியமான வடபழணிஸ்தலம்.

14 குணசேகரம்;—உத்தமர்கோவிலின் மேற்கு 9-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், வேங்கடேசர், அலமேலுமங்கை, பூதேவி, அகண்டகாவிரி, பவிஷியத்புராணம் உத்தரபாகத்தில் குணசீலமான்மியம் (10) அத்தியாயம் புராணமுள்ளது. தால்பியரிஷியின் சிஷ்யரான குணசீலரிஷி வடதிருப்பதியில் வேங்கடேசரைத்தரிசிக்க அவர்பிரத்தியக்ஷமாகித் தரிசனந்தந்தபோது அவரைஇலக்ஷ்மியுடன் தனதாசிரமம்வரும்படி வேண்டியதால் குணசீலரிஷியின் பக்திக்காக அவராசிரமமாகிய இந்நிலமைந்தார். கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகமிவர்பூஜித்து வைகுண்டமடைந்தார். பிறகு பெருமானை புற்றுமூடிவிட்டது. கலியுகமாதியில் இடையர்கள் நிசுளாபுரத்து இராஜனுக்குப் பாற்குடங்கள் கொண்டுபோனபோது புற்றில் பாற்குடங்கள் தலையிலிருந்து தானேகவிழ்ந்ததால் ராஜனாகிய கரிகாலச்சோழனென்னும் ஞானவர்மாவிடம் தெரிவிக்க அவருமிங்குவந்து புற்றைச் சோதித்து, வேங்க

டேசரைக்கண்டு தரிசித்து அவர் பிரசன்னமானதால் அவருத்திரவுப்படி இதில் கோவிலும் பத்திர சக்கரநகரமு மேற்படுத்தி, பூஜைகள் நடத்தி, சனிக்கிழமைதோறுந் தரிசித்து வந்தான். இதில் விருதமிருந்து தரிசித்த பாத்துவாஜரின் சீஷரான சுருதசேதவருக்குக் கண் தெரியச்செய்தும், நொண்டியான பகுவிரஜனுக்குக் காலைக்கொடுத்தும், கூர்ஜா அரசன் ஊமைப்பிள்ளையைப் பேசச்செய்தும், விசுவகுப்தனென்னும் வணிகனுக்கு புத்திரனளித்தும், இக்கலியிலும் இஷ்டசித்தியும் முக்தியுமளிக்கிறார்.

15 பாதாளேசர்கோவில்:—குணசேகரத்தின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அப்பாணைக்கட்டு வடகோடியில் பாதாளேசர், பார்வதி, இங்கு அகண்டகாவிரியில் ஐயாறு சங்கமம்.

16 ஆமூர்:—குணசேகரத்தின் மேற்கு 2-மைலில் உள்ளது சிவஸ்தலம், ரவீசர், ஆநந்தவல்லி, அகண்டகாவிரி புராணமுள்ளது.

17 அய்யம்பாளையம்:—குணசேகரத்தின் மேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சிருங்ககிரி, சங்கராசாரிசுவாமியால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

18 முசிறி:—குணசேகரத்தின் மேற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தாலூகா சந்திரமௌளீசர், கர்ப்பூரவல்லி, காவிரி புராணமுண்டு. இது குழித்தலை ரெயில்ஸ்டேஷனின் வடக்கு ஒருமைலில் உள்ளது.

19 திருஈங்கோய்மலை:—யென்பது (திருவேங்கிராதமலை) முசிறியின்மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மரகதாசலேசர், மரகதவல்லி, அகண்டகாவிரி, அமிருததீர்த்தம்,

அகஸ்தியதீர்த்தம், வன்னிமரம் அகஸ்தியரும், ஈக்களும் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

20 திருநாராயணபுரம்.—முசிறியின் மேற்கு 8-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம், திருநாராயணமூர்த்தி, எதுகிரி நாச்சியார், காவிரி யாதவதீர்த்தம், பாண்டவதீர்த்தம், எதுகிரி, யாதவகிரி, கருடனுக்குப் பிரத்தியக்ஷம். புராணஸ்தலம்.

21 அயிலூர்:—முசிறியின் மேற்கு 12-மைலிலுள்ளது, சிவஸ்தலம் வாலீசுவரர் சொர்ணம்பாள், காவிரி, புராணமுண்டு.

22 வடபேரூர்:—முசிறியின் வடக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, ஐயாறு, சுந்தரமூர்த்திநாயனார் பாடிய வைப்புஸ்தலம்.

?3 கோல்லிஅறப்பள்ளி:—முசிறியின் வடக்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தருமகோசேசர், சுமாதா கொல்லிமலை ஐயாறு உற்பத்தி, பாபநாசதீர்த்தம், தேக்கு திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக்கோவையிலும், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடலிலுமுள்ள வைப்புஸ்தலம்.

24 மாகாளேசுவரம்:—என்பது (மாகாளிகுடி, சமயபுரம்) ஸ்ரீரங்கத்தின் வடக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், போஜேசுவரர்; போஜேசுவரி, போஜராஜன் பூஜித்தது. மாகாளிகுடியில் மகாகாளியும், சமயபுரத்தில் மகாமாயை கோவிலும் முக்கியம். திருநாவுக்கரசுநாயனாரின் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம். கிலமாய் உள்ளது.

25 ஊற்றத்தூர்:—ஸ்ரீரங்கத்தின் வடக்கு 18-மைலில் உள்ளது சிவஸ்தலம், சுத்தரத்திநேசுவரர், அகிலாண்டவல்லி,

சந்திரநதி, அமிருததீர்த்தம், நந்தியுமிந்திரனும் பூஜித்தது, நந்தி வாயிலிருந்து இதில் நந்தியாறு உற்பத்தியாகி 56-வது இலக்கல்தலத்தின் சமீபம் கொள்ளிடத்தில் சங்கமம், திருநாவுக்கரசுநாயனரின் க்ஷேத்திரக்கோவையிலுள்ள வைப்புஸ்தலம். விளாங்கனி நிவேதித்த வேடனுக்கு பாபம் நீங்கினது.

26 பெருமாள்மலை:—ஸ்ரீரங்கத்தின் வடக்கு 18-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், பெருமாள் கிரிமூர்த்தி, இலக்ஷுமி மலைமேல் கோவில்.

27 திருவேங்கனூர்:—ஸ்ரீரங்கத்தின் வடகிழக்கு 26-மைலில் உள்ளது. சிவஸ்தலம், விருத்தாசலேசர், பிருகந்நாயகி, கருங்கல்லிழைப்பு வேலையுள்ளது. ரெட்டியாகிய சிவபக்தன் நியமனப்படித் தினம் விருத்தாசலம்போய் தரிசிப்பதற்குத் தடையாய் ஒருநாள் வெள்ளாற்றில் வெள்ளம் பெருகியதால் அவன் உயிர்விட எத்தனிக்க விருத்தாசலேசரே இஸ்தலம் வந்து தரிசனந் தந்தார். இது திருநாவுக்கரசுநாயனர் க்ஷேத்திரக்கோவையில் வேங்கூரென்று பாடின திருப்பதிக வைப்புஸ்தலம்.

28 பெருவளப்பூர்:—ஸ்ரீரங்கத்தின் வடகிழக்கு 18-மைலிலுள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, நந்தையாறு திருநாவுக்கரசுநாயனர் அடைவுத்திருத்தாண்டகத்திலும், சுந்தரமூர்த்தி நாயனர் ஊர்த்தொகையிலுமுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

29 பெரம்பலூர்:—ஸ்ரீரங்கத்தின் வடக்கு 29மைலில் உள்ளது சிவஸ்தலம், பரமேசர், பார்வதி விஷ்ணுவும்முக்கியம்.

30 குறும்பலூர்:—ஸ்ரீரங்கத்தின் வடக்கு 29-மைலில் உள்ளது. சிவஸ்தலம், தியாகேசர், உமை, விஷ்ணுவும் முக்கியம். சுந்தரமூர்த்திநாயனர் ஊர்த்தொகையிலுள்ள வைப்புஸ்தலம்.

31 திருப்பாற்றுறை:—ஸ்ரீரங்கத்தின் கிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம, ஸ்ரீமூலநாதர், மேகலாம்பிகை, கொள்ளிடம், திருக்குளம், சிவபெருமான் புற்றில் பொன்னிறமாக எழுந்தருளியது. மார்க்கண்டேயர் பூஜைக்குப் பால் பெருகினது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1.

32 வாளாடிபுதுக்குடி:—என்பது (வாளாடிமேலக்கோவில்) ஸ்ரீரங்கத்தின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், விசுவநாதர், விசாலாக்ஷி, திருநாவுக்கரசுநாயனரின் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிகவைப்புஸ்தலம்.

33 துவையூர்:—என்பது (வேங்கடத்துறையூர்) வாளாடியின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, திருநாவுக்கரசுநாயனர் அடைவுத்திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

34 திருமணல்மேடு:—வாளாடியின் தென்கிழக்கு 1-மைலிலுள்ளது. சிவஸ்தலம், வாசிஷ்டேசர், உமை, வசிஷ்டர் பூஜித்தது.

35 திருமாந்துறை:—வாளாடியின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஆமிரவநேசர், பாலாம்பிகை, காயத்திரிநதி, மாமரம், கண்ணுவரிஷி, சோழராசன், பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனரும் சுந்தரமூர்த்திநாயனரும் வைப்புஸ்தலம்.

36 அகங்கரை:—மாந்துறையின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மருதாந்தநாதர், சுந்தராகாஞ்சனை, சோழராசனது மந்திரி மருதாந்தன் பூஜித்ததாக மாந்துறைப்புராணததிலுள்ளது. வேதமோதியகனபாடிகள் வெகுபேர்களிதிலுண்டு. பெரிய அக்கிரஹாரம்.

37 திருநகரி:—மாந்துறையின் வடக்கு 1-மைலில் உள்ளது சிவஸ்தலம், அப்பிரதேசர், அசலசுந்தரி, பற்குநிநதி, அருச்

சுணவனம், மருதவனம், இந்திரனும், குபேரனும், பூஜித்த தாக பூவாளூர் புராணத்திலுள்ளஸ்தலம்.

38 திருமங்கலம்:—மாந்துறையின் வடகிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சாமவேதேசர், லோகாம்பாள் பற்குநிகதி, பிருகுமுனியின் புத்திரரும், சையாதிராஜன், புத்திரி சுகன்னியின் புருஷரும், அசுவினீதேவர்களால் இளமை அடைந்தவருமான சியவனரிஷி யாகஞ்செய்து, அசுவினீதேவ சிருவருக்கும் அவிற்பாகமளித்ததால், இந்திரன் கோபித்து வஜ்ராயுதத்தை அவர்மேலெறிய, ரிஷி, அதைநிறுத்தி, இந்திரனை அரசிழக்கும்படி சபித்தார். ஸ்தலத்தில் பூஜித்து தபசிலிருந்த உதங்கமுனிக்கு, சிவனுத்தரவுப்படி, இந்திரன் அமிருதங் கொடாததால், தரித்திரனாகும்படி உதங்கருஞ், சபித்ததால், குருவான பிருகஸ்பதி சொன்னபடி இந்திரனிதில் பூஜித்துச் சாபங்களும் நீங்கி, உதங்கமுனிக்கு அமிருதமுங் கொடுத்தார். மகாலக்ஷுமி பூஜித்தது. மழவராஜனிதிலாண்டதால் மழவனூரென்னும், இதில் (ஆனாயநாயனார்) பக்தியாகப் பில்லாங்குழல் வாசித்து, மிருகபக்ஷிகள் மனமுருகியதால், பரமசிவன் ரிஷபாரூடராகக் காக்ஷிதந்து, கைலாஸபதவியுங் கொடுத்தஸ்தலம். தவிர இதில் தபசு செய்து பூஜித்த நொண்டியான ரயிக்குவரிஷி தன் மாடுக்கொன்ற, சுவேதகிரியிலாசாண்ட சுந்தரனென்னுமாசனைச் சாம்பலாகும்படி சபிக்க, அவன்பணிந்து வேண்டியதால், நீ மறுஜன்மம் விஷ்ணுவுக்கு மன்மதனாகப் பிறந்து, சிவநேத்திரத்தால் சாம்பலாகி இதிலுன் மனைவிபூஜித்துத் தேகமடைவாயென்று சொன்னபடியால், மன்மதனும் பூஜித்தான். ஷை ரயிக்குவரிஷி தன் பிதுரர்களை நற்கதிசேர்க்கப் பிரார்த்தித்தபடி சிவன் உத்தரகயாபற்குநியை இதிலழைத்தது, அதுதான் கூழையாரென்பது.

**39 மாதானம்:**—என்பது (திருப்பூவாளூர்) மாந்துறையின் வடகிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஸ்ரீமூலநாதர், குங்குமாம்பிகை, கயாபற்குநி யென்னும் கூழையாறு, வில்வவனம், கலியாணபுரம், சப்தரிஷிகளின் புத்திரர்கள் பாற்கவர், ஆங்கீரசர், வசிஷ்டர், காசியபர், ஆத்திரேயர், கௌசிகர், கௌதமீயர், என்னுமெழுபதுபேர்கள், இதில் பூஜித்து, யாகஞ்செய்து, சிவன்குருவாக இவர்களுக்கு, சரியை, கிரியை, யோகம், ஞாநமென்னும், வேதாந்தவுபதேசம் செய்தார். சியவனரிஷி, உதங்கமுனி, பிரும்மா, இந்திரன், மன்மதன், ரதிதேவி இவர்கள்பூஜித்தது. தேவர்களுக்காக அக்கிநிதேவன் கைலையில், சிவனுமுமையும் ஞாநக்கலவியி லிருக்குமிடத்தில், புறாவேடம்பூண்டு வந்தமையா லுமைக்குக் கோபமுண்டாகி அக்நியை யெப்போதும் புறாவாகிச் சிறுகற்களைத் தின்னுமென்று சபித்தார். அக்நியுஞ் சிவனை வேண்டியதால், அவர், தனதிந்திரியங்களைத் தாங்குமென்று கொடுக்க, அக்கினியால் தாங்கமுடியாமல் கங்கையில்விடச் சரவணப்பொய்கையில் நாணலில் தங்கி ஆறுமுகத்தேவருதித்தார். சிவனுத்தரவுப்படி அக்கிநிதேவருமிதில் பூஜித்து புறாவுருவமு முமைசாபமும், நீங்கியஸ்தலம். இக்கலியுகத்தில் கைலையில் சிவனுமைக்குத் தினம் பூக்கொய்யும் மணிசூடனும், சந்திரவதியும், ஆசைகொண்டதால், மணிசூடன் விருத்தாசலத்தில் வணிகப்பிள்ளையாகவும், சந்திரவதி ஸ்தலத்தில், குழுதையாகவும், சிவனுமதிப்படி . மானிடஜென்மமெடுத்து விருத்தகிரியில் மணிசூடனுக்குச் சிவன்தவ வேஷம்பூண்டு, ஸ்தலத்தில் குழுதையின் பிதாவான மஞ்சுளனென்னும் வணிகனிடம், பெண்பேசிக் கலியாணஞ்செய்ததால், கலியாணநாதரென்றும் பெயர். திருநாவுக்கரசுநாயனாரின் க்ஷேத்திரக் கோவையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

40 எழுவாதவத்துறை:—என்பது (லாலுகுடி) மாந்துறையின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சப்தரிஷிநாதர், பிரஸிருத்தஸ்ரீமதி, சபாநாதர், சிவகாமி, சிவகங்கை, பைரவிவனம், காயத்திரிநதி. கொள்ளிடநதி, மாணிக்கவாசகர் பாடியது. 108-அத்தியாயங்களுள்ளபுராணமுள்ளது. சப்தரிஷிகளான-1. அத்திரி-2. பிருகு-3. புலஸ்தியர்-4. வசிஷ்டர்-5. கௌதமர்-6. ஆங்கீரசு-7. காசியபர், வசிஷ்டர் பத்தினி அருந்ததியாகிய இவள்தவிர, மற்ற ஆறுரிஷிபத்தினிகளும் தங்களுக்கு அக்கினிதேவனால் வந்த, அவதூறுநீங்கச் சிவனனுமதிப்படி, சரவணப்பொய்கையில், ஆறுமுகக்கடவுளுக்குப்பால் கொடுத்ததை சப்தரிஷிகளிகழ்ந்ததால் சூத்திரராகும்படி. குமாரதேவரால் சாபமடைந்து, இதில் சிவனைப்பூஜித்தும் தபசுசெய்தும் சாபநிவர்த்தியானதால் சப்தரிஷிநாதரென்று பெயர். திருப்பாற்கடலிலுண்டான மகாலக்ஷ்மி யிதில் பூஜித்துத் தபசுசெய்து மகாவிஷ்ணுவின் மார்பிலமர்ந்ததால், ஸ்தலத்துக்கு திருத்தவத்துறையென்று பெயர். பைரவிஎன்னுங் காளி, நடனத்தில் பிரும்மா விஷ்ணுக்களையும் வென்று, இதில் சிவனுடன் நடனமாடிச் சிவன் வலதுகாலை ஆகாசத்தில்தூக்கி, ஊர்த்வதாண்டவஞ் செய்யக் காளியுமதற்கெதிர்க்கப் பெருந்திருவாட்டியாகிய ஸ்ரீமதிஅம்மனாய் தடுக்கப்பட்டுச் சிவனுடன் வாதுசெய்தபாபம், இதில் பூஜித்து, விலகினதால் பைரவிவனமென்று பெயர். மழவராஜன் பதிவிரதா ஸ்திரீயுடன் துராகிருதப் புணர்ச்சி செய்ததால், அவள் சாபத்தால் சரீரமுழுவதும் வெண்குஷ்டப் பெருவியாதியுண்டாகி, இச்சிவகங்கையில் வாயை மூடிக்கொண்டு அவன்முழுகியதால், உதடுகள் தவிரமற்றஇடங்களிலுள்ள குஷ்டங்கள் நீங்கித் திடசரீரனாகி சப்தரிஷி லிங்கத்தையும் பூஜித்துத் திருப்பணிகள் பலசெய்திதைப் பட்டினமாக்கி, அரசாண்டதால், ஸ்தலத்துக்கு மிதைச்சுற்றிலு

முள்ள ஸ்தலங்களுக்கும், மழவனூரென்றும் பெயர்வந்தது. பதினாயிரம் பிரும்மகற்பம் முடிந்தாலொருகை ரோமமுதிரும் தீர்க்காயுளைப்பெற்ற ரோமசமகாரிஷியும், அவர் புத்திரர் மாங்கலியரிஷியுமிதில் பூஜித்ததால், பார்வதியார் பெண்ணுருவாய்ச் சிவகங்கையிலுண்டாகப் பெருந்திருவாட்டியென்னுமப் பெண்ணை, மாங்கல்யரிஷி பத்தினியிடம்கொடுத்து, அவராசிரமமாகிய விடையாற்றுமங்கலத்தில் வளர்த்துச் சிவனைப்பிரார்த்தித்துவந்தால்,சிவனுங்கைலையிலுமையுடன் கண்ணாடிபார்க்கும்போது வலதுபுறங் கண்டதன்னிழலையே இடதுபுறமென்னையும், வலதுபுறம் வேறுபெண்ணையும், தலையில் கங்கையையுமடைந்திருக்கிறீரென்று, பரிகாசஞ் செய்தபோது, நீ பூவுலகில் மாங்கலியரிஷிக்குப் பெண்ணாக, நான்மணம்புரிவேனென்று சிவன் முன்சொல்லியிருந்த வாக்கியப்படி, சப்தரிஷிநாதர், சப்தரிஷிகள், பிரும்மா, விஷ்ணுவாதிதேவர்கள், பூதகணங்களுடன், மாங்கல்யரிஷியாசிரமம் போய்ப் பெருந்திருவாட்டியம்மையை, மணஞ்செய்து ஸ்தலமடைந்தார்கள். 34, 35, 36, 41, 43, 44, 45 இலக்கமுள்ள இதுகள் இதின் சப்தஸ்தான உற்சவஸ்தலங்கள். (400) வருஷங்களுக்குமுன் தொண்டமண்டலம் குமாரசாமிப்புலவரும், (100) வருஷங்களுக்குமுன் திருநபம் கிருஷ்ணபாரதியு மிதைப்பாடியுள்ளார். இதில் சாஸ்தாவாகிய கமல கொத்தப்பனார் முக்கியம் திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகத்திலுள்ள வையப்புஸ்தலம் இப்புஸ்தகம் வெளியிட்ட மழவனூட்டுப் பிரகத்சரணகொண்டினிய கோத்திராகிய ஸ்ரீநிவாஸப்பரின் ஜனனபூமி. இதில் புதிய ரெயில்வேஸ்டேஷனும் ஏற்படுகிறது.

41 விடையாற்றுமங்கலம்:—லாலுகுடியின் தென்மேற்கு 1-மைலில் உள்ளது சிவஸ்தலம், மங்களேசர், மங்களநாயகி, காவிரி, மாங்கலியரிஷி ஆசிரமம் லாலுகுடிஸ்தலத்தில் சொன்

ணபடி. சப்தரிஷிநாதர், பெருந்திருவாட்டியம்மையைக் கலியாணஞ்செய்த ஸ்தலம். கொள்ளிடம்நதி.

42 மணக்கால்:—லாலுகுடியின் வடகிழக்கு ½-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம், வரதராஜர், மகாலக்ஷுமி, மணக்கால் நம்பி ஆழ்வாருக்கு பிரத்தியக்ஷம். இதில் காயத்திரிநதிக்கரையில் கந்தராலயமும், பாடசாலையும் முக்கியம்.

43 சேன்னிவாய்க்கால்:—லாலுகுடியின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பராசரேசர், அமிருதநாயகி, கொள்ளிடம் காயத்ரிநதி, பராசரரிஷிபூஜித்தஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனூர் இடையாற்றுத்தொகையிலுள்ள வைப்புஸ்தலம்.

44 ஆதிகுடி:—லாலுகுடியின் கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பரமாம்பிகை, காயத்திரிநதி, லாலுகுடியின் சப்தஸ்தானஸ்தலம்.

45 அன்பிலாலந்துறை,—யென்பது (கீழன்பில்) லாலுகுடியின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சத்தியவாகீசர் பிரேமபுரீசர், சௌந்தரியநாயகி; பிரேமநாயகி, பிரேமபுரி, வடவாலமரம். காயத்திரிநதி, கொள்ளிடத்தில் சங்கமம்சரஸ்வதியு மந்தர்வாகினியாக சேருவதாலிது, திருவேணி, தக்ஷிணபிரயாகை. (25) அத்தியாயங்கள் புராணமுள்ளது. பிருமா கைலாஸதரிசனத்துக்குப் போகும்போது வெளியில் சேடியுடன் பூக்கொய்த பார்வதியை வணங்காமல் அன்னவாகனத்திலேயே போனதால் சிவனுலொரு சிரமறுப்படிக்கும் சிருஷ்டித்தொழில் நீங்கவும் பார்வதிசபித்தாள். பிரும்மாஇதில பூஜித்தும், யாகஞ்செய்தும், சிருஷ்டித்தொழிலடைந்து, ஞண்டிவிநாயகராகவும் வடவாலின் கீழிருக்கிறார். சமணமதத்திலிருந்த கேகயனென்னும் மகதநாட்டரசன், நரகங்களனுபவித்து மண்டூகமாகித் திருவேணியில் முழுகியதால் சிவபதமடைந்

தான். பிருகுமுனியின் பாரி, ராக்ஷதர்களை ஆசிரமத்திலொளித்து, விஷ்ணுவுக்கு வழிவிடாததால் அவர் அவளைக் கொன்றார். அப்பழிநீங்க இதில்பூஜித்துவசிக்கிறார். சூரியன்பூஜித்து சூரியபுஷ்கரிணியுண்டானது. சந்திரன்பூஜித்து தக்ஷசாபம் நீங்கி க்ஷயரோகம்தீர்ந்தது. சப்தரிஷிகளும், வாசுகியும, பூஜித்தது. இந்திரன் முசுகுந்தருக்கு, ஐராவதம் குடைதவிர மற்றெதை கேட்டாலுந் தருவேனென்று சொல்லி அவர் கேட்டபடி, எழுதியாகரையும் திருமாலிடமிருந்து தானடைந்து பூஜித்து வந்தசநாதனத்தியாகராஜரையுங் கடைசியாகக் கொடுத்ததால் சிவபூஜையுந்தவிரவென்று சொல்லாத இந்திரனைச் சிவன் சண்டாளனாகும்படிசபிக்க, இந்திரனுமிதில்பூஜித்து சாபநிவாரணம்பெற்றான். வால்மீகிரிஷி வேடராயிருந்து அத்திரிரிஷியால் பாராம சராம தராம ஹராம என்னுமுபதேசத்தால் பிரும்மரிஷியாகியிதில் பூஜித்தும் தபசுசெய்தும் ராமாயணமுஞ் செய்தார். மாணவளர்த்துவந்து அந்த ஞாபகத்துடனிறந்த சடபரதரிஷியிதில் ஞானமுள்ள மௌநியாயிருந்து, சோழராஜன் பல்லக்கைச்சுமந்து அவருக்கும் ஞானோபதேசஞ்செய்து தெக்ஷிணகாசியாகிய விதிலிருவரும் பூஜித்துச்சிவபதமடைந்தார்கள். வியாசரும், காவேரியும் பூஜித்தது அயோத்தியையாண்ட அளர்க்கராஜன்பூஜித்து இதைக்காடழித்துப் பட்டினமாக்கினர். கர்க்கமுனிவர் வடவிருக்ஷவடிவு கொண்டு பூஜித்தார். பிரும்மதீர்த்தம், பிரேமதீர்த்தம் அமிருதவாபி, ஞானவாபி, முதலியது முள்ளது. சுக்ரீவன் பூஜித்து ஸ்ரீராம சக்கியம் பெற்று ராஜனானான். ஸ்ரீராமர் இக்காவிரிதீரங்களில் நானூறு கிரகங்கள் பொருந்திய பதினெட்டுக் கிராமங்களை யேற்படுத்தி ஒவ்வொரு கிராமத்திற்கும் நானூறுவிளைசெய்நிலங்களையுமமைத்து சப்தரிஷிவம்சப் பிராமணர்களுக்குக் தானஞ்செய்ததிலிதுவு மொன்றென்றும் இதிலும் பூஜி

த்து திருப்பணிகள் செய்தாரென்றும் ஸ்தலமான்மியம் (24) வது அத்தியாயத்தில் சொல்லுகிறது. இக்கலியிலும்கோவில மாடுகள் மேய்த்தபிரேமனென்னு மிடையன், கோவில்கணக் கனுக்குலஞ்சங்கொடாததாலிடையன்மாடுதிருடினனென்று குற்றமேற்படுத்திச் சிறையிடுவிக்கப் பிரேமபுரீசரே சாக்ஷி சொல்லி,வசிஎன்னுங்கணக்கனைத்தண்டித்துஇடையனைநற்கதி யடைவித்தார். திருநயம் கிருஷ்ணபாரதியுந் தமிழில் பாடி யுள்ளது. சோழியப்பிராமணர்கள் பூஜித்தஸ்தலம். திருஞா னசம்பந்தமூர்த்திநாயனார்பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

46 ஷையூர் பெருமாள்கோவில் விஷ்ணுஸ்தலம், சுந்தரரா ஜர், சுந்தராம்பாள். மண்டூகபுஷ்கரிணி, புஜங்கசயநம், பிரும் மாவுக்கும், வால்மீகிரிஷிக்கும், பிரத்தியக்ஷம். திருமங்கை யாழ்வார் மங்களாசாஸனம். அறுபத்திநான்கு சதுர்யுகமா யுள்ளஸ்தலம்.

47 திருநயம்:—என்பது (தின்னியம்) லாலுகுடியின் வட கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோஷ்டேசுவரர், பிருகந்நாயகி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, கந்தர் முக்கியம். கயாபற்குநியாகிய கூழையாறு. இதில் ஜனித்தவ ரும் திருவிளையாடல் புராணத்தை தமிழில்ப்பாடிய வரு மான கிருஷ்ணபாரதி பாடியுள்ளது. அன்பில் ஸ்தலத்தின் வடமொழிபுராணத்தைத் தமிழ்ப்படுத்திய மாத்ருபூதசாஸ் திரிகளுமிதில் பாடியுள்ளது, இதுகள் மழவனூடென்பதற் குருசுவாக இதிலும். 5, 32, 36, 37, 40, 41, 42, 48, 52, 1-வது அத்தியாயம் 13, 14, 35 லெக்கமுள்ள ஸ்தலங்களிலு மின்னமிதுகளின் சுற்றுக்கிராமங்களிலும் ஒவ்வொன்றிலும், நாறுவீடுகளுக்குமேற்பட்டு மழவனூட்டுப் பிருகத்சரண பிரா மணர்கள் வசிக்கிறார்கள். கிலமாயிருந்த திருநாவுக்கரசுநாய

ரின் பாடலிலுள்ள தேவன்குடி சிவன் கோவிலைப் பிரித்து இதிலமைக்கப்பட்டதால் இதுவும் வைப்புஸ்தலம்.

48 அரியூர்:—லாலுகுடியின் கிழக்கு 6-மைலில் உள்ளது, சிவஸ்தலம், கைலாசநாதர், காமாக்ஷி, காவிரி பெரியஅக்கிர காரம்.

49 திருப்பேர்நகர்—என்பது (கோவிலடி) சோழயம்பட்டி ரெயில்ஸ்டேஷனின் வடக்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணு ஸ்தலம், காவிரி, இந்திரதீர்த்தம், ரெங்கநாதர், கமலவல்லி, புஜங்கசயநம், இந்திரகிரி, அப்பக்குடத்தான், வலதுஹஸ்தத் தின்கீழ்குடம், இந்திரனுக்கும், உபமன்யுவுக்கும், பராசர ரிஷிக்கும் பிரத்தியக்ஷம். நெய்யப்பம் தினம் நிவேதன முண்டு. திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். இதில் கணபதி முக்கியம்,

50 திருச்சின்னப்பூண்டி:—கோவிலடியின் கிழக்கு 1-மை லில் உள்ளது. சிவஸ்தலம், சடையீசர், பாலாம்பாள், காவிரி, இலமானது.

51 திருக்கானூர்:—கோவிலடியின் கிழக்கு 5-மைலில் உள் ளது. சிவஸ்தலம், செம்மேனீசர், இக்ஷுவநேசர், சிவயோக நாயகி, சவுந்தராம்பாள், மாமரம் கொள்ளிடநதி உமை பூஜித் துந்தவமியற்றியும் சிவன் அக்கினிவடிவாய் பிரசன்னமான ஸ்தலம். பரசுராமரும் பாபந்தீரப் பூஜித்தும், மணல்மூடியிரு ந்ததுமான ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதி கம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்- . சுந்தரமூர்த்தி நாயனாரும் வைப்பாகப் பாடியுள்ளது.

52 விஷ்ணம்பேட்டை:—பூதலூர் ரெயில் ஸ்டேஷனுக்கு வடக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கைலாஸநாதர்,

காமாக்ஷி, வேணுகோபாலர் கோவிலும், காவேரிப்படித்துறை கணபதியும், காசிவிசுவேசலிங்கமும், நந்தவனமும், பிரபலம். இப்புஸ்தகம்வெளியிட்ட ஸ்ரீநிவாஸய்யர் வாசஸ்தலம். அடுத்த பவணமங்கலத்தில் பொன்னியம்மனும் முக்கியம்.

53 நத்தம்:—திண்ணியத்தின் கிழக்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். ஆதிமூலமூர்த்தி, மகாலக்ஷ்மி, நந்தியாறு, புஜங்கசயநம், ஆதிமூலமே யென்றழைத்த கஜேந்திரனுக்குப் பிரத்தியக்ஷம்.

54 புள்ளம்பாடி:—லாலுகுடியின் வடகிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிதம்பரேசர், சிவகாமியம்மை.

55 ஆலம்பாக்கம்:—லாலுகுடியின் வடகிழக்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கைலாசநாதர், அருந்ததியம்மாள்.

56 திருநேற்குன்றம்:—என்பது (தின்னக்குளம் விரகாலூர்) லாலுகுடியின்கிழக்கு 13-மைலிலுள்ளது. சிவஸ்தலம், தானிய கிரீசர், சாகுந்தளாம்பாள், இந்திரதீர்த்தம், (2ஃ) இலக்கஸ்தல மாகிய ஊற்றத்தூரில், நந்திவாயிலிருந்து வரும்நந்தியாறும், கயாபற்குனியாகிய கூழையாறும், கொள்ளிடத்தில் சேருஞ் சங்கமதீர்த்தம், இந்திரன் கிளிரூபத்துடன் நெற்கதிர் களால் பூஜித்தஸ்தலம். இதின்வெளிச்சுற்று மதில்களையும், கோபுரத்தையும், 60-வருஷங்களுக்குமுன் கல்லணைக்கும், நந்தை கூழை அணைக்கட்டுகளுக்கும் இடிந்தகருங்கல்லுக்களை சற்க்காரிலுபயோகப்படுத்தி விட்டதால், பாக்கி அஜீர்ணமாயிருந்த மூலஸ்தாநம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், அம்மன்சந்நிதி கலியாணமண்டபம், சபாமண்டபம், திருமதில்கள், விநாயகர், சுப்பிரமணிய ராலயங்க ளிவைகளை, ஷையூர் பிரபுக்கள்ளர்களான சிவபக்தர்களினுதவியால் ஏழாயிரரூபாய்செலவுசெய்து, வழையும் ஷையூர் கர்ணமுமான இப்புஸ்தகம் வெளியிட்ட ஸ்ரீநிவாஸய்யர் பிரித்துப்புதுப்பித்துச் சோபகிருது வருஷம்

கும்பாபிஷேகஞ்செய்த ஸ்தலம் பிறகுபத்து ஏகருநஞ்சை நிலங்களும் பூஜைக்குண்டாயின. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம். விரகாலூரில் வல்மீகநாதராலயமுண்டு. இதையும் அக்கிரகாரத்தையும் ஷெியூர் ரோமன் கிருஸ்தவர்கள் வீணாக்கிவிட்டார்கள்.

57 வாணரராங்குடி விஷ்ணம்பேட்டையின் வடகிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். நாகநாதர், நாகாம்பிகை, கொள்ளிடம் நதி.

58 திருச்சடைவளந்தை:—விஷ்ணம்பேட்டையின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். புவநேசர், புவநேசுவரி, காவிரி, திருநாவுக்கரசு நாயனாரின் க்ஷேத்திர கோவையிலுள்ளவைப்புஸ்தலம். இலமாயிருப்பதை கவனிக்கவும்.

59 மருதூர்:—விஷ்ணனும் பேட்டையின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பகபதீசர், மங்களநாயகி, காவிரி, இதினடுத்த வடுவக்குடியில், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானைமுக்கியம், காவேரிகோள்ளிட மொரேகரையுடையது.

60 திருமழபாடி:—திருவையாற்றின் வடமேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வச்சிரஸ்தம்பேசர், சுந்தரகுசாம்பாள், சிவகங்கை, லக்ஷ்மிதீர்த்தம், கொள்ளிடமுத்தரவாகிநி, தாளவிருக்ஷம், விஷ்ணு, லக்ஷ்மி, வசிஷ்டர், இந்திரன், பூஜித்தது, தக்ஷிணகயை, ஒருமகாபாபியினெலும்பைக்கழுகு தூக்கியிதிலெறிந்ததால் பாபிக்குங்கழுகுக்கும் முக்திகொடுத்தஸ்தலம். மாகஸ்நாநம் முக்கியம். இதில் வசிஷ்டபௌத்திரியான, சுயசையை, நந்திகேசருக்குத் திருமணம் முடித்ததால் ஒவ்வொரு பங்குநிமாசமும் திருவையாற்றுப் பஞ்சாபகேசரும் நந்திகேசருமிங்குவந்து, கலியாணம் நடக்கிறது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-3. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-6

61 கடுவெளி:—திருவையாற்றின் மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஆகாசர் மங்களாம்பாள், காவிரிநதி.

62 திருப்பெரும்புலியூர்:—திருவையாற்றின் மேற்கு 1-மைலில் உள்ளது சிவஸ்தலம், வியாக்கிரபுரீசர், சௌந்தராம்பாள் காவிரி, வியாக்கிரதீர்த்தம், பதஞ்சலி, வியாக்கிரபாதர் பூஜித்தது. திருஞானசம்பந்த நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

63 ஷை யூர் விஷ்ணுஸ்தலம். சுந்தரராஜமூர்த்தி, சுந்தராம்பாள்.

64 திருநெய்த்தானம்:—திருவையாற்றின் மேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கிருதஸதாநேசர், பாலாம்பிகை, காவிரி, காசியபரிஷியும், வாக்கின் செல்வியான சரஸ்வதி தேவியும் பூஜித்தது. திருவையாற்று ஸ்தலத்தின் ஸப்தஸ்தானஸ்தலம். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-5, ஆக பதிகம்-6. சுந்தரமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

65 திருவையாறு:—தஞ்சாவூரின் வடக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பஞ்சாபகேசர், செம்பொன்ஜோதீசர், தருமசம்வர்த்தனி, தக்ஷிணகைலாஸம், உத்தரகைலாஸம், ஆள்கொண்டார், காவிரி, சூரியபுஷ்கரிணி, லக்ஷுமிகூபம்-1 காவிரி-2, சடைக்கங்கை-3, முடியிலுள்ள சந்திரனமிருதம்-4, கௌரியின்க்ஷீரம்-5, நந்தியின் நுரையாகிய ரிஷபநதி. இந்த ஐந்தாலும் நந்திகேசருக்குச் சிவனபிஷேகஞ் செய்ததால் ஐயாறு என்னப்படுகிறது. மற்ற நான்குதீர்த்தங்களும் காவிரியில் சேர்ந்திருக்கிறது. திருநாவுக்கரசுநாயனார் கைலாசஞ் செல்லவடக்கேக வெகுதூரஞ் சென்றதால், கால்தேய்ந்து தத்தளிக்கச், சிவனொருகுளத்திலவரை முழுகச்செய்து இத்தலத்தில்சேர்த்து ஆடி அமாவாசையில்லல்லாந் தானுக்கைலாச

தரிசனங்காட்டினார். சுந்தரமூர்த்திநாயனார், சேரமான்பெருமாள் நாயனார் பரிஜனங்களுடனிங்கு வரும்படிக் காவிரிப் பிரவாகத்தை ஒதுக்கி வழிகாட்டித் தரிசனங்காட்டியவர். அத்திரிமுனி பூஜித்த முக்திஸ்தலம். இதில் மரணமடையுஞ் சீவர்களுக்கு வலது செவியில் தாரகோபதேசஞ் செய்யப்பட்டுக் கைலாசமடைகிறார்களென்று, சுமந்துரிஷி தேவவர்மராஜனுக்குச்சொல்லியிருக்கிறார். அடியில் விபரித்தபடி (26) அத்தியாயங்களுண்டு. (1) துஷ்பிரவிருத்தியென்னும் பாபிக்கு மாத்ருகமனஞ்செய்து பிதாவையும் கொன்ற பாபம் நீங்கியது. (2) சிவப்பிரியரிதில் தினம் (30000) பஞ்சாக்ஷரமும் ஜபிக்க, சுதர்மா வேதமுமோதி யெல்லா யாகங்களுமிதில் செய்யச் சிவப்பிரியருக்கு சாரூப்பியமும், சுதர்மாவுக்கு சுவர்க்கமுங் கிடைத்தது. (3) அயோத்தியிலாண்ட சுரதராஜனுக்குத் தூர்வாசராலிதில் கைலாசதரிசனமும், சிவதத்தனென்னும் புத்திரனையுஞ் சிவபக்தியையுங் கொடுத்தது. (4) சுசரிதன், இயமனுக்குப் பயந்து இத்தலமடைந்து பஞ்சாக்ஷரம் ஜபித்த மகிமையால் சிவன் நந்திகேசரைக்கொண்டு இயமனைக்குத்திச் சிவபதவியளித் தியமனையு மெப்போதுமிதில்வாராமல்தடுத்தது. (5) இதில் லக்ஷ்மியை யுண்டாக்கியது. (6) கௌதமருக்கு அதிதிபூஜைக்குத் திருச்சோற்றுத்துறையில், அரிசிபாக விளையச்செய்தது. (7) கௌதமபுத்திரர் சதாநந்தர் பூஜித்துத் தபசுசெய்தபின் சிவன் காக்ஷியும் ஞானசித்தியுந்தந்தது. (8) கோரதபசியாய் மலையைத்தின்ற சிலாதரிஷிக்குக் காக்ஷி தந்து தூர்வாசர் உபதேசம் பெற்றது. (9) சிலாதரிஷிக்குச் சைலாதி நந்திமுகத்துடன் பிறந்து சிவன் ஐயாறு வரச்செய், தபிஷேகஞ்செய்தது. (10) அகஸ்தியரால் சையமலையிலிருந்து விடப்பட்டகாவிரி யிதில்தங்கியதால் சமுத்திரராஜனிதில் பூஜித்து அழைத்துப்போய்ச் சுவேதவனத்தில் மணஞ்செய்தது. (11) காசிக்குப்போன சிவதாசரையோண்டபக்ஷி விழுங்க

பஞ்சநதீசரனைதவெட்டி ஒருகுளத்தில் முழுகச்செய்து இதில் வரவழைத்து விசுவநாதர், விசாலாக்ஷியாக தான் காக்ஷிதந்து காவிரியே கங்கையென்று சொன்னது. (12) துர்த்தமனென் னும் பிராமணன் காவிரியில் துலாஸ்நானம் செய்பவர் மூட் டையைத் திருடியோடச் சேவகன் துரத்தப் பயத்தால் காவிரியில் விழுந்து முழுகியோடியதினுல் பாபந்தீர்ந்து நற் கதியடைந்தான். (13) துஷ்பிரக்ஞனென்னும் பிராமணன் வலைச்சியுடன்கூடி மது, மாமிசமுண்டு அவளுடன் சித்திரைத் தேருக்கு இங்குவந்து திருடனுல் வெட்டுண்டிறந்ததால் பிரா மணன் கைலாஸமடைந்தது. (14) பாபஞ்செய்தவரையும் ஜன்மவரலாறுரைத்தது. (15) மரணக்குறி சொன்னது. (16) திருவையாறு அநேக கற்பங்களாக அழியாதஸ்தலமென்றது (17) நாதசர்மாவுக்கும் அவர் பாரியாள் அனவர்த்யைக்கும் சிவன் கலியில் பாபஞ்செய்தவர்களிதில் ஸ்நானமும் தரிசன மும் தக்ஷிணுமூர்த்தி சந்நதியில் பஞ்சாட்சர ஜபமுஞ் செய் தால் எல்லாப்பாபங்களும் நிவர்த்தி, யென்றது. (18) தகாத வஸ்துக்களை உண்பதினுல் வரும் பாபங்களுமிதில் ஸ்நான தரிசனத்தால் நீங்குமென்றது. (19) காஞ்சியில் வசிக்கும் விராஜனென்னும் வேதியனுக்குக் கம்பாநதியை யிதிலழைத் தும் புத்திரனளித்தும் முக்திகொடுத்தது. (20) ததீசரிஷிக்கு முக்தியளித்தது. (21) சிவஜன்மவேதியனுக்கு க்ஷயரோகம் நீங்கியது. (22) பிரகலாத வம்சமான சர்வ விஜயனுனவன் இதில் ஒளிந்து பூஜித்த இந்திரனுடனிங்குவந்து யுத்தஞ் செய்யச் சிவன் ஆள்கொண்டாராகிய பைரவரால சர்வவிஜ யனைக்கொன்றது. (23) சுசிகரனென்னும் வேதியனுக்கு மகர சங்காந்தியிலிதில் ஸ்நானஞ்செய்து தரிசித்தால் கலியணுகா மல் முக்தியடைவார்களென்று சிவன்சொன்னது. (24) தருமசேது வென்பவர் தன் தாய்தந்தைகளின் அஸ்திகளைக் கட்டி இராமேசுவரம் போக நினைத்து இதில் தங்கியதால் அவர்கள்

சிவனுலகடைந்தது. (25) கழுதை, மான், நாய், பன்றி இந்நாலும் நதீசிரிஷியால் முன்ஜன்மமறிந்து இதில் வந்தவுடன் சுவர்கமடைந்தது. (26) அகஸ்தியரை பார்வதி விவாகத்தில் பூமியின் தென்புறந்தாழும்படி கைலாஸபதி, தெற்கே யனுப்ப வழியில் விந்தமலையை யடக்கி, வாதாபி, வில்வலனைக் கொன்று இதில்பூஜித்துதும்புருநாரதரை கர்வபங்கம்பண்ணித் தாளத்தை மதுரையில் தமிழ்ச்சங்க பீடமாக்கிக் குத்தாலத்தில் விஷ்ணுவைச் சிவலிங்கமாக்கிப் பொதியமலையில் வசித்தார். பஞ்சநதீசர், நந்திக்குச் சிவதீக்ஷைசெய்து நந்திகேசரால் சனற்குமாரருக்குபதேசஞ் செய்வித்தது நந்திகேசருக்குப் பங்குனி புனர்பூசத்தில் திருமழபாடியில்க் கலியாணமும் சித்திரைமீ சப்தஸ்தானமும் முக்கியம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-5. திருநாவுக்கரசுநாயனர்பதிகம்-12. சுந்தரமூர்த்திநாயனர் பதிகம்-1, ஆக பதிகம்-18.

66 ஷையூர் மேட்டுத்தெருவு. விசுவேசர், விசாலாக்ஷி, அபீஷ்டவரதவிநாயகர் (10) வது அத்தியாயப்படி வந்தசமுத்திரம் முருகிராடு தெலுங்காகிய ராமபிரும்மத்தின் புத்திரர், ராமபக்தரான தியாகராஜய்யர், நாரதருபதேசத்தால் தெலுங்கில் கீர்த்தனங்கள்பாடி 75-வருஷங்களுக்கு முன்னில் முக்தியடைந்தார். பிரதி தை மாசங்களிலும் அவருக்குற்சவமும் நடந்து வருகிறது. பிராமணுளிதில் முக்கியம்.

67 திருப்பழநம்:—திருவையாற்றின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஆபத்சகாயர். பிருகந்நாயகி காவிரி, மங்கள தீர்த்தம், கௌளசிகாசிரமம், இக் பாலகர்கள் கௌசிகர், பிருகுமுநிபூஜித்தது, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனர் பதிகம்-5. ஆக பதிகம்-6. திருநாவுக்கரசு நாயனர் பதிகத்தி லப்பூதிநாயனரைப்பாடியுள்ளது. சுந்தரர் வைப்புஸ்தலம்.

68 திங்களூர்:—திருவையாற்றின் வடகிழக்கு 2-மைலிலுள்ளது. சிவஸ்தலம். விஷம்தீர்த்தநாதர், பூங்கோதை, காவிரி அப்பூதிநாயனாரென்னும் பிராமணர் திருநாவுக்கரசுசுவாமிக்கு அமுது செய்யப், பக்தியாலவர்பெயரிட்ட தன்மகன் திருநாவுக்கரசைவாழையிலை யறுக்கச்சொல்ல, அங்கவனைப்பாம்புதீண்டி யிறந்ததால், அதைமறைத்து, மூடிவைத்து, நாயனாரை அமுதுக்கழைக்க, அவர்மகனெங்கேயென்று கேட்க, உண்மையைச் சொன்னதால் இவ்வாலயம் புகுந்துபதிகம்பாடி இறந்தமகனையும் பிழைப்பித்துப் பின்னமுதுமுண்டார் (1300) வருஷங்களுக்குமுன் திருஞானசம்பந்தரும் அப்பராகிய திருநாவுக்கரசும் பாடியதொரேகாலம். பின்பு சுந்தரர்பாடியது மூவருக்கும் பின்பு மாணிக்கவாசகர்பாடியகாலம். இது சந்திரன்பூஜித்தது திருநாவுக்கரசு நாயனார்த் தாண்டகத்திலும், சுந்தரமூர்த்தி நாயனார் இடையாற்றிலுமுள்ள வைப்புஸ்தலம்.

69 சோமேசுவரம்;—என்பது (பெரம்பூர்) திருவையாற்றின் வடகிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சோமசுந்தரேசர், மீநாக்ஷி, காவிரி, திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக்கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

70 பட்டுகுடி:—திருவையாற்றின் வடகிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம் பசுபதீசர், பார்வதி, புராணஸ்தலம்.

71 வடகுரங்காடுதுறை:—திருவையாற்றின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். குலைவணங்கீசர், அழகுசடைநாயகி, காவிரி, வாலிதீர்த்தம், வாலிபூஜித்தஸ்தலம். திருஞானசம்பந்த மூர்த்திநாயனார். பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

72 கூடலூர்:—ஷடியூர்பெருமாள்கோவில் விஷ்ணுஸ்தலம். ஜகத்ரக்ஷகர், பத்மாசநவல்லி, காவிரி, சக்கரதீர்த்தம், நந்தகமகாமுநிக்குப் பிரத்தியக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களா

73 கணபதி அக்கிரகாரம்:—திருவையாற்றின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, கணபதி முக்கியம். அக்கிரகாரங்களும் பெரிது.

74 கபிஸ்தலம்:—பாபநாசம் ரெயில்வேஸ்டேஷனின் வடகிழக்கு 2-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம் கஜேந்திரவரதர், ரமாமணிவல்லி, காவிரி, கஜேந்திர புஷ்கரிணி, கபிலதீர்த்தம், புஜங்கசயனம் கஜேந்திரனுக்கும், ஆஞ்சநேயருக்கும் பிரத்தியக்ஷம். திருமழிசையாழ்வார் மங்களாசாஸனம் தாயார் சந்நிதிக்குத் தென்புறமாடத்திலுள்ள தேனடையில் தினமும் அபிஷேகத்துக்குத் தேன் உண்டாகிறது.

75 ஆதனூர்:—சுவாமிமலையின் வடக்கு 1-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம், ஆண்டளக்குமையர், ஸ்ரீரங்கநாயகி, சூரியபுஷ்கரிணி, புஜங்கசயனம், காமதேநுவுக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

76 ஷை ஆதனூர் சிவன், உமை, கொள்ளிடம், சிதம்பரத்திலேக்கியமான திருநாளைப்போவாரென்னும் சண்டாளராகிய நந்தனர் ஜனித்தஸ்தலம்.

77 திருவேரகம்:—என்பது (சுவாமிமலை) கும்பகோணத்தின் வடமேற்கு 3-மைலில் உள்ளது. சிவன், உமை, சுவாமிநாதர், வள்ளி, தெய்வானை, ஓமென்னும் பிரணவத்துக்குப் பிரும்மாவுக்குப் பொருளுரைத்தவர். மாயாசக்தியால் ஷை மலையுண்டானது. இதில்-12000 வடமப்பிராமணர்கள் பூஜித்ததாகத் திருச்செந்தூர்ப் புராணம் சொல்லுகிறது. வேதீசுவரமென்று திருநாவுக்கரசு நாயனர் க்ஷேத்திரக்கோவையிலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

78 திருவைகாவூர்:—சுவாமிமலையின் வடமேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வில்வவநேசர், பூவைவல்லி, வியாக்கிர தீர்த்தம், வில்வதீர்த்தம், வில்வமரத்திலமர்ந்த மகாலக்ஷுமி

வில்வத்தால் பூஜித்தஸ்தலம். சிவராத்திரியில் வேடனைத் துரத்தின புலிக்குப்பயந்து வில்வமரத்திலேறித் தூங்கா முயற்சிக்கு வில்வத்தைப்பறித்து மரத்தடியிலுள்ள லிங்கத் தின்மீதுபோட்டதால், கண்விழித்தவேடனுக்கும், புலிக்கும் சிவபதவிகொடுத்தது. திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1 அப்பராகிய திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

79 திருவிஜயமங்கை:—சுவாமிமலையின் வடமேற்கு 3-மை யில் உள்ளது. சிவஸ்தலம். விஜயநாதர், மங்கைநாயகி, விஜய தீர்த்தம், அருச்சுநன் தபசுசெய்து பூஜித்துப் பாசுபதம் பெற் றது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திரு நாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

80 தியாகசமுத்திரம்;—சுவாமிமலையின் மேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தியாகேசர், ஞாநாம்பிகை, காவிரி, ஒரு ஏழைப்பிராமணபக்தி மாது யாசித்துத் திருப்பணிசெய் தது. பிரும்மோற்சவமுமுண்டு.

81 திருப்புறம்பியம்:—சுவாமிமலையின் வடகிழக்கு 4-மை லில் உள்ளது. சிவஸ்தலம். சாக்ஷிநாதர், சொல்வளநாயகி, கூப தீர்த்தம், பிரும்மதீர்த்தம், மண்ணியாறு, பின்னைமரம், வன் னிமரம். அகஸ்தியர், வசிஷ்டர், சுந்தோபசுந்தர்கள், பூஜித் தது. இதிலுள்ள பிரளயங்காத்த பிள்ளையாருக்கு விநாயக சதுர்த்தியில் 64-சேர் தேன்பரிவிட்டங் கொண்டொற்றியு மதில் சுவறிவிடுகிறது லிங்கம், வன்னி, கிணறு, மூன்றும் வணிகப்பெண்ணுக்குமதுரையில் சாக்ஷிசொன்னது. திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-3. கோவிலுக்கு விறகுகொண்டு வந்த ஒரு நீசனுக்கு சுவாமி அந்த ரூபத்துடனனுக்கிரகித்தார், மாணிக்கவாசகருந் திருப் புகழ்பாடியதால் சமயகுரு நால்வருக்கும் தருமோபதேசஞ் செய்தஸ்தலம்.

82 திருவின்னம்பர்:—சுவாமிமலையின் வடகிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அம்பாமூர்த்திசர், கொந்தார்பூங்குழலி, அகஸ்தியதீர்த்தம், ஐராவததீர்த்தம், பலாமரம், அகஸ்தியரிஷியும், ஐராவதமும், பூஜித்தது, அகஸ்தியரிதிலிலக்கணவுபதேசம் பெற்றார். சிவபெருமாள் எழுத்தறியும் நாயகரென்னும், கோவில்க்கணக்கனாக வெள்ளேட்டைக் கையில் வைத்துக்கொண்டு சோழராஜனிடம் கணக்குச்சொன்ன ஸ்தலம். அப்பரின் பதிகத்திலுள்ளது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-4. ஆக பதிகம்-5. சுந்தரமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

83 திருக்கோட்டையூர்:—கும்பகோணத்தின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோடீசர், பந்தாடுநாயகி, கோடிதீர்த்தம், காவிரி, ஆமணக்குக்கொட்டை மரத்தின் கீழ் சுவாமி உற்பவித்தார். மார்க்கண்டேயர் பூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1.

84 திருந்துதேவன்குடி:—கும்பகோணத்தின்கிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கர்க்கடேசர், அருமருந்தம்மை, அசுவதீர்த்தம், பங்கஜதீர்த்தம், தேவர்களும் உச்சைசிரவசு என்னும் தேவர்க்குதிரையும் நண்டும் பூஜித்தது. பால் பதிங்கலம் சிவன் முடியிபிஷேகஞ்செய்தால் முடிமீது நண்டு பொன்னிறமாகத் தரிசனமாகும். சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

85 திருவியலூர்:—என்பது (திருவிசநல்லூர்) கும்பகோணத்தின் வடகிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், யோகாநந்தநாதர், சவுந்தரநாயகி, சடாயுதீர்த்தம், சிவகங்கை, சடாயுபூஜித்தது. ஐயாவாளென்னுந் தெலுங்கப்பிராமணரில் கங்கையை யழைத்ததால் கார்த்திகை அமாவாசைதினம் ஸ்நானம் முக்கியம். பெரிய அக்கிராரம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. அப்பர்வைப்புஸ்தலம்.

86 வேப்பத்தூர்;—கும்பகோணத்தின் வடகிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மருதீசர், பாலாம்பாள், காவிரி, தைபூச உற்சவம் முக்கியம்.

87 திருச்சேய்ஞலூர்:—கும்பகோணத்தின் வடகிழக்கு 6 மைலில் உள்ளது. சிவஸ்தலம், சத்தியகிரீசர், சகிதேவியம்பாள், மண்ணியாறு, சப்தரிஷிதீர்த்தம், ஆத்திமரம், சூராதிகளைத் கொல்லவந்தபோது ஷண்முகரும் சப்தரிஷிகளும், சசீதேவியும் பூஜித்தது. ஆத்தியின் கீழ்மணலால் லிங்கமமைத்தும் பாலபிஷேகம் பண்ணிபூஜிக்கும்போது தன் தகப்பன் வந்து பாலைக் காலாலிடற அவர்காலையும் வெட்டிய சண்டேசநாயனரிதில் ஜனித்து பக்தியாய் பூஜித்து முக்திபெற்றஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனரின் பதிகம்-1 அப்பரும் வைப்புஸ்தலம்.

88 திருவாப்பாடி:—கும்பகோணத்தின் வடகிழக்கு 7-மைமைலில் உள்ளது. சிவஸ்தலம், பாலுகந்தீசர், பிருஹந்நாயகி, பால்தீர்த்தம், ஆத்திமரம், சண்டேசநாயனர் பூஜித்ததால் லிங்கதீபாராதனை யானவுடன் சண்டேசருக்குத் தினம் தீபாராதனை நடக்கிறது இடையன் பால்குடங்கொண்டுவரும்போது தினமும் கவிழ வெட்டிப்பார்த்த அவ்விடையனுக்கு லிங்கருபியாய்பதவி. கொடுத்தவர் திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1 திருஞானசம்பந்தர் வைப்புஸ்தலம்.

89 திருப்பணந்தாள்:—கும்பகோணத்தின் வடகிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தாடகேசர், சடையப்பேசர், பெரியநாயகி, பிரும்மதீர்த்தம், பனைமரம், தாடகையம்மாள் பூமாலைசாத்த லிங்கம் பக்திக்காகச்சாய்ந்ததைச் சோழராஜன் யானை சேனைகளால் நிமிராமல் திருகடையூர்க் குங்கிலியக்கலய நாயனரின் பக்திக்காக கழுத்தில் கயறு போட்டவுடன் நிமிர்ந்து காக்ஷிதந்தஸ்தலம். அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. பெரியமடாதீனமுள்ளது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. அப்பர் வைப்புஸ்தலம்.

90 திருவெள்ளியங்குடி:—கும்பகோணத்தின் வடகிழக்கு 8-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், கோலவில்லி ராமமூர்த்தி, மரகதவல்லி, பிரும்மதீர்த்தம், சுக்கிரபுஷ்கரிணி, புஜங்கசயனம், பிரும்மா, சுக்கிரன், பராசரர், இந்திரனுக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். திருவெள்ளியங்குடிக்கு வடக்கு 1-மைலில் செங்கநல்லூர் விஷ்ணுஸ்தலமிருக்கிறது. இதில் பெரிய வாச்சான்பிள்ளையின் ஜனனம்.

91 புள்ளம்பூதங்குடி:—சுவாமிமலையின் வடக்கு 2-மைலில் உள்ளது. வல்விலிராமர், பொற்றாமரையாள், சோபனவிமானம் கிருத்திரதீர்த்தம், சக்கிரவர்த்தி திருமகனுக்கும் கிருத்திரராஜனுக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். இதின் மேற்கு 1-மைலில் மண்டங்குடியில் தொண்டரடிப்பொடியாழ்வார் ஜனித்தது.

92 மேலப்பழூர்:—திருவையாற்றின் வடகிழக்கு 8-மைலிலுள்ளது. சிவஸ்தலம், சுந்தரேசர், மீனாக்ஷி,

93 திருப்பழூர்:—திருவையாற்றின் வடகிழக்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வடமூலநாதர், அருந்தவநாயகி, பிரும்மதீர்த்தம், சப்தமாதாக்களும், பிரும்மாவும் பரசுராமரும் பூஜித்தது. மலைபாளஅந்தணர்கள் பூஜித்ததாக திருஞானசம்பந்தர் பதிகத்திலுள்ளது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

94 அரியலூர்:--திருப்பழூரின்கிழக்கு 5-மைலிலுள்ளது சிவஸ்தலம், வடமூலநாதர், மகாதபஸ்வினி, பார்வதி பூஜித்தது.

95 ஷை அரியலூர். விஷ்ணுஸ்தலம், சுந்தரராஜர், மகாலக்ஷ்மி, இதிலும் கிருஷ்ணன் கோவில் பிரபலம்.

96 கலியபெருமாள்கோவில்:—அரியலூரின் கிழக்கு 5-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், கலியபெருமாள், மகாலக்ஷ்மி

97 உடையார்பாளயம்:—கும்பகோணத்தின் வடக்கு 18-மைலில் உள்ளது சிவஸ்தலம், தானாகா சுந்தரேசர், மீனாக்ஷி, பெரியஜமீனுள்ளது.

98 ஷெடியூர் பெருமாள்கோவில் தேவபிரான், ஸ்ரீதேவி, கிருஷ்ணனும் முக்கியம்.

99 ஜயங்கொண்டசோழபுரம்:—உடையார் பாளயத்தின் கிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சோழேசர், உமை. சோழராஜன் பூஜித்தது.

100 கங்கைகொண்டசோழேசுவரம்:—உடையார் பாளயத்தின் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிருகதீசர், பிருகதம்பாள், சிவகங்கை நவக்கிரகங்களு மொரேசிலையிலுள்ளது. தஞ்சாவூர் பெரியகோவில் மாதிரி கோபுரம், லிங்கம், அம்மன், நந்தி, மிகப்பெரியது. கங்கைவரையில் ஜயித்த கங்கைகொண்ட சோழராஜன் பூஜித்தது. மாணிக்கவாசகர் எட்டாந்திருமுறையிலும் கரூர்த்தேவர் பதினோராம் திருமுறையிலும் பாடியுள்ள புராணஸ்தலம்.

101 காட்டுமன்னார் கோவில்:—உடையார் பாளயத்தின் கிழக்கு 12-மைலில உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஸ்ரீமந் நாதமுனிகள், ஆளவந்தார் அவதாரஸ்தலம். வீரராகவர், சீதாதேவி புராணஸ்தலம். இதின்மேற்கு 6-மைலில் குருகைக் காவலப்பன் கோவிலுமுண்டு. திருவஞ்சைக்களத்தி லவதரித்த மன்னன், குலசேகராழ்வாரின் ராமபக்திக்கு விஷ்ணு அனுக்கிரஹித்து, அவருடைய லக்ஷுமி அம்சமான பெண்ணையும், ஆண்டாளைக்கலியாணஞ் செய்து கொண்டதுபோல ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதரே கலியாணம் செய்துகொண்டார். மதுரகவியாழ்வாரும் அனேக ஸ்தலங்களில் பாடி அயோத்தியில் ராமபக்தி செய்துகொண்டிருக்கும்போது ஒரு ஜோதி தெற்குமுகமாகப் போவதைத்தெறிந்து தானுங்கூடச் சென்று ஜோதிதங்கின திருக்குறுங்குடியில் நம்மாழ்வாராகிய சடகோபரிடம் முத்திரையு முபதேசமும் பெற்று நற்கதியடைந்தார்.

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

# ஐந்தாம் அத்தியாயம்.



## நடுநாடு என்பது (தென் ஆற்காடு ஜில்லாவும், வட ஆற்காடு ஜில்லாவில் தென்பாகமும்.)

### தேஜஸ்தலம்.



1 திருவண்ணாமலை:— விழுப்புரத்தின் வடமேற்கு 40-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அருணாசலேசர், அபீதகுசாம்பாள், பிரும்மதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், சிவகங்கை. இந்திராதி அஷ்டதிக்குப் பாலகதீர்த்தங்களுண்டு. மகிழமரம், தேவிதவம் புரிந்து பூஜித்து இடதுபாகமடைந்தது, தேஜோலிங்கமானமலை. மலைப் பிரதக்ஷிணத்தால் அசுவம், யானை, புலி, நாய், பன்றிமுதலியவைகளும் முக்திபெற்றது. இதிலரசாண்ட வல்லாளராஜனுடைய பக்திக்காகச் சிவனே புத்திரனாகிக் கிரியைசெய்தார். மகாவிஷ்ணு, பிரும்மா, திக்குப் பாலகர்கள் அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. இரண்டாம் பிராகாரத்தில் விஷ்ணு புள்ளாங்குழலூதுகிறார். இதில் விஷ்ணு வராகமாகவும், பிரும்மா அன்னமாகவும் விசுவரூபியான சிவனுடைய அடிமுடியுங் காணாமல் முடியைக்கண்டதாகச் சொன்ன பிரும்மாவுக்கும் பொய்ச்சாக்ஷி சொன்ன தாழம்பூவுக்கும் பூஜையில்லாமல் சிவன் சாபமிட்டஸ்தலம். கிருதயுகத்தில் அக்நிமலையாயும், திரேதாயுகத்தில் சொர்ணமலையாயும் துவாபரயுகத்தில் தாமிரமலையாயும், இக்கலியுகத்தில் கல்மலையான லிங்கரூபமாயுமிருக்கிறது. ஜீவன் முக்திஸ்தலம். ஷெடிமலையின் குகைகளில் இக்காலத்திலுந் தபசிகளுமுண்டு. கார்த்திகைமாசங் கார்த்திகையில் மலையுச்சியில் தீப தரிசனம் முக்கியம். 5000-பிராமணர்கள் பூஜிக்கும் ஸ்தலம். திருப்புகழ்பாடிய அருணகிரிசுவாமி ஜனித்தஸ்தலம். திருவண்ணாமலை ரெயில்ஸ்டேஷன்.

2 ஷடி மலைமேலப்பிரதக்ஷிணத்தில் அணி, அண்ணாமலை அண்ணாமலைநாதர், உண்ணாமுலையாள், பிரும்மாபூஜித்த லிங்கம். திருஅண்ணாமலையின் 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், திருநாவுக்கரசுநாயனார் அருளிய திருநேரிசையிலுள்ள திருப்பதிகவைப்புஸ்தலம். விபூதி அணிதலாலும், அடியில்கண்டபடி ருத்திராக்ஷம் தரித்தலாலும், முக்தி கிடைக்குமென்று சிவன் உபதேசித்தார். ருத்திராக்ஷமணி மின்சாரசக்தியுள்ளதால் பிறமதஸ்தர்களும் ஐரோப்பியா, அமேரிக்காவிலும் தரிக்கிறார்கள். 1-முகம் சிவரூபம், ஹத்தி தோஷம் நீங்கும். 2-முகம், சிவசக்தி ரூபம் கோஹத்தி தோஷம் நீங்கும். 3-முகம், அக்நிரூபம். ஸ்திரீஹத்திதோஷம் நீங்கும். 4-முகம், பிரும்மரூபம். நரகபாதை நீங்கும். 5-முகம், காலருத்திரரூபம், தகாதபுணர்ச்சி, தகாதபுசிப்புத் தோஷங்கள் நீக்கும். 6-முகம், சுப்பிரமணியரூபம் புரூணஹத்திதோஷம் நீங்கும். 7-முகம், ஆதிசேஷரூபம் பஞ்சமாபாதகங்களும் நீங்கும். 8-முகம் விநாயகரூபம் அன்னமிடாத தோஷமும் பரான்னதோஷமும் துலாபார முதலான கோரதானங்கள் வாங்கும் பாபங்களும் நீங்கும். 9-முகம், பைரவரூபம் பாம்புகளை வதைத்தபாபங்கள் நீங்கும். 10-முகம், விஷ்ணுரூபம் நவக்கிரக, நக்ஷத்திர, பைசாச, பிரேத பிரும்மராக்ஷஸ பயங்கள் நீங்கும். 11-முகம், ஏகாதசருத்திரரூபம் ஆயிரம் அசுவமேதயாகபலனும் தானங்களுள் சிறந்த நூறாயிரம் கோதானஞ் செய்யும் பலனுமுண்டு. 12-முகம், துவாதசாதித்யரூபம் பசுமேதமும், சொர்ணதானமுஞ் செய்தபலனுமுண்டு. 13-முகம், சக்தி ரூபம். தாய், தந்தை, சகோதரர்களுக்குத் துரோகஞ்செய்த பாபங்கள் நீங்கும். 14-முகம், சிவசக்திரூபம் முக்தியைக்கொடுக்கும். சிகையில்-1, சிரசில்-36, கண்டத்தில்- 2, மார்பில்-50, கரங்களில்-16, மணிக்கட்டுகளில்-12 அயக்ஞோபவீதமாக-108 இந்தப்படிதரித்து, ஓரடி,

நடந்தால், அசுவமேதயாக பலனுண்டு. மரணகாலத்தில் ருத்திராக்ஷம் அணிந்திருந்தால் இயமன் பயமில்லாமல் சிவபதமடைவார்கள். வைப்புஸ்தலங்களின் தனிப்பதிகங்களை, சிதம்பரத்தில் சிதளரித்து விட்டன. 1-திருவண்ணாமலை ஸ்தலத்தில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-3. ஆக பதிகம்-5. சுந்தரர் வைப்புஸ்தலம்.

3 திருக்கோவலூர்:—திருவண்ணாமலையின் தெற்கு 14-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வீரட்டானேசர், சிவாநந்தவல்லி, தென்பெண்ணைநதி, அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது ஹிரண்யாக்ஷன் புத்திரன் அந்தகாசுரனைக் கொல்ல பிரும்மா இந்திராதிகள் பூஜித்துச் சிவனிடம் முறையிட்டதால் சிவன் கணங்களுடன் வந்து யுத்தஞ் செய்தும், அவனையு மவன் சேனைகளையுஞ் சஞ்சீவிமந்திரத்தால் பிழைப்பித்த குருவான சுக்கிராசாரியரைச் சிவன் விழுங்கியும், அந்தகாசுரனைக்கொன்றபின், சிவனது சுக்கிலபீஜத்திலிருந்து குதித்ததால் சுக்கிராசாரி யென்று பெயருண்டானது. அந்தகாந்தக மூர்த்தி அஷ்டவீரத்திலொன்று மெய்ப்பொருள் நாயனாரிதிலரசாண்டு தன்னுலகேகமுறை தோற்ற முத்தநாதனென்னு மயலரசன் சிவவேஷங்கொண்டு சடையில் மோசவெண்ணத்துடன்வந்து, நாயனாரின் வணங்கின தலையைவெட்டியும், நாயனார் தன் மந்திரியைக் கொண்டு முத்தநாதனுக்குத் தீங்கில்லாமலனுப்பியபின் சிவபதமடைந்தார். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2. சுந்தரர் வைப்புஸ்தலம். திருக்கோவலூர் ரெயில்ஸ்டேஷன்.

4 ஷடியூர் விஷ்ணுஸ்தலம். திருவிக்கிரமமூர்த்தி பூங்கோவல் நாச்சியார், கிருஷ்ண தீர்த்தம், மகாவிஷ்ணு அதிதியிடம் ஜனித்து வாமனவதாரமெடுத்து மகாபலிச் சக்கிரவர்த்தியின்

யாகசாலையில்மூன்றடியாசிக்க சுக்கிராசாரிதடுத்து மவர்கொடுத்ததால், திரிவிக்கிரமரூபத்துடன்பூலோகத்தைஓரடியும், மேலுலகங்களை ஓரடியுமாக அளந்து மூன்றாவதடி மகாபலியின் தலையில்வைத்துப் பாதாளத்தில் பக்திசெய்து கொண்டிருக்கும்படி அனுக்கிரகித்தவர், மிருகண்டுமுனிக்கும், ஜாம்புவந்தகும் பிரத்தியக்ஷம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

5 திருவரையணி நல்லூர்:—என்பது (அரைகண்ட நல்லூர்) திருக்கோவலூரின் வடக்கு ½-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அரையணி நாயகேசர், அருள்நாயகி அருச்சுன தீர்த்தம், ஆரணிய தீர்த்தம், பெண்ணை நதி, மலைமேலுள்ளது. இந்திரப் பிரஸ்தத்தில் நாரதருபதேசப்படி திரௌபதியைப் பாண்டவர்கள் ஆளுக்கொரு வருஷமாக அடைகிறதென்கிற நிபந்தனைப்படி, தருமராஜரும் ஏகாந்தமாய் திரௌபதியுடனிருக்கும் ராத்திரியில் திருடனுக்குப்பறிகொடுத்த வனவேதியன் சொத்தைக்காக்க, வில்லெடுக்கும்படி படுக்கையறைக்குள் அருச்சுனன் போக நேர்ந்ததால், முன் நியமனப்படி ஒருவருஷம் தீர்த்த யாத்திரை செய்யும்போது இதில் தரிசித்துப் பூஜித்தது. பிரசண்டரிஷி பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் சேர்க்கை வைப்புஸ்தலம்.

6 செஞ்சிக்கோட்டை:—திருவண்ணாமலையின் வடகிழக்கு 18-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ரங்கநாதர், ரங்கநாயகி, மலைக்கோட்டை.

7 வந்தவாசி:—செஞ்சிக்கோட்டையின் வடக்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சுவயம்புநாசர், பிருகந்நாயகி, செய்யாறு, புராணமுண்டு.

8 தேவகாபுரம்:—போளூரின் கிழக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வேதபுரீசர், பாலகுசாம்பாள், செய்யாறு புராணஸ்தலம்.

9 காஞ்சிக்கறையாடி:—திருவண்ணுமலையின் வடமேற்கு 16-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கறைக்கண்டேசர், பிருகந்நாயகி, இதிலுள்ள ஜவ்வாது மலையில் செய்யாறு உற்பத்தியாகிச் செங்கற்பட்டுக்குச் சமீபமாக பாலாற்றில் சங்கமம். திருநாவுக்கரசுநாயனூர் க்ஷேத்திரக்கோவையில் கறையூரென்று பாடிய வைப்புஸ்தலம்.

10 திருவிடையாறு:—திருக்கோவலூரின் தெற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், இடையாற்றீசுவரர், சிற்றிடைநாயகி, பெண்ணைநதி, சிற்றிடைத்தீர்த்தம், திருவெண்ணைநல்லூரின் மேற்கு 3-மைலில் உள்ளது. ஞானசித்தியடைவதற்கு சுகப்பிரும்ம ரிஷி பூஜித்த ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனூர் பதிகம்-1. யையாரென்று சுந்தரரின் பதிகத்திலுள்ளது.

11 திருவெண்ணைநல்லூர்:—திருக்கோவலூரின் தென்கிழக்கு 14-மைலில் உள்ளது சிவஸ்தலம், தடுத்தாள்க்கொண்டேசர், வேற்கண்ணம்மை, பெண்ணைநதி, கைலாஸகிரியில் நந்தனவனத்தில் சிவனுக்குப் பூவெடுத்த, கமலினி, அநிந்திதை, யென்னுமிருவரையுங்கண்டு, மையல் கொண்டதால் சிவவாக்கியப்படி இதினடுத்த (16) திருநாவலூரில் ஆதிசைவராகிய சடையனூருக்குப் புத்திரராய்ப் பிறந்த சுந்தரரது கலியாண சமயத்தில் விருத்தவேதியராய்ச் சிவனே சபையாருக்குச் சுந்தரனடிமையென்னு மோலையைக்காட்டி, இவரையழைத்து ஆட்க்கொண்ட ஸ்தலம்இது மாணிக்கவாசகர் பாடியது. சுந்தரமூர்த்திநாயனூர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனூர் வைப்பு ஸ்தலம்.

12 திருநெல்வெண்ணெ:—என்பது (நெய்வெணை) திருக்கோவலூரின் தெற்கு 18-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வெண்ணெயப்பேசர், நீலமலர்க்கண்ணி, பெண்ணைநதி, சனக சனந்தன, சநாதன, சனற்குமாரர்கள் பூஜித்து ஞானமடைந்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1. அப்பர்பாடிய வைப்புஸ்தலம்.

13 பண்ணுருட்டி:—திருக்கோவலூரின் தென்கிழக்கு 40-மைலில் உள்ளது. வையங்காத்தபெருமாள், ஸ்ரீதேவி, ஆண்டாள், புராணமுள்ளது. பண்ணுருட்டி ரெயில்ஸ்டேஷன்.

14 திருத்தலூர்:—என்பது (திருத்துறையூர்) பண்ணுருட்டியின் வடமேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பசுபதீசர், பைங்கோதை, பெண்ணைநதி, சுந்தரமூர்த்திநாயனருக்குத் திருவடி சூட்டியவர், அருணந்திசிவாச்சாரியர் முக்திஸ்தலம்.

15 ஷை கோவிலில் சிஷ்டகுருநாதர், சிவலோகநாயகி, சுந்தரமூர்த்திக்கு உபதேசித்தவர். சுந்தரமூர்த்திநாயனர் பதிகம்-1 அப்பர் வைப்புஸ்தலம்.

16 திருநாவலூர்.—பண்ணுருட்டியின் மேற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், நாவலீசுவரர், சுந்தரநாயகி, சிலகங்கை கெடிலநதி, நாவல்மரம், 11-ஸ்தலத்தில் சொன்ன சுந்தரமூர்த்தி இதில் ஆவணி உத்தரத்தில் இசைஞானி அம்மாளிடம் ஜனித்து, மணந்தவிர்ந்தபுத்தூரில் சிவனடிமைகொண்டார், சடையநாயனர், இசைஞானியார் முக்திஸ்தலம், சுந்தர மூர்த்திநாயனர் பதிகம்-1. அப்பரும் பாடியவைப்புஸ்தலம்.

17 எமப்பேரூர்:—பண்ணுருட்டியின் மேற்கு 12-மைலில் உள்ளது. சிவன், உமை, பெண்ணைநதி, திருநாவுக்கரசு நாயனர்க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

18 சித்ரவடம்:—பண்ணுருட்டியின் வடமேற்கு 2-மைலில் உள்ளது சிவஸ்தலம். சித்தேசர், உமை, திருநாவுக்கரசு நாயனார் கெடிலவடவீரட்டானப் பதிகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

19 திருவதிகை:—பண்ணுருட்டியின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வீரட்டானேசர், திருபுரசுந்தரி, கெடிலநதி, சூலைத்தீர்த்தம், சரக்கொன்றை, அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. சுந்தரமூர்த்தி நாயனாருக்குத் திருவடி சூட்டியவர். தாரகோஷ்டன், வித்யுன்மாலி, கமலாக்ஷனென்னும் திரிபுரர்கள் மூவர்களும் பறக்கும்படியான மூன்று பட்டிணங்கள்பெற்று இந்திராதிதேவர்களை உபத்திரவப்படுத்தியதால், விஷ்ணு பௌத்தாவதாரத்துடன் மூவர்களை வசப்படுத்திச் சிவனை விரோதிக்கச் செய்தபின், அவ்வரக்கர்களைக் கொல்ல வேதங்கள் அசுவமாயும், சூரியசந்திரர்கள் ரதசக்கரமாயும், பிரும்மாசாரதியாயும், மேருமலைவில்லாயும், விஷ்ணுபாணமாயுமுள்ளரதத்தில் சிவன் ஆரோகணஞ்செய்தபோது, ரதத்தின் அச்சுமுறிந்ததால், சிவன்சிரித்து, நெற்றிக்கண்ணிலுண்டாகியதீயால் மூன்றரக்கர்களையும், பட்டிணத்துடன் அழித்த திரிபுர சம்ஹாரமூர்த்தி, அஷ்டவீரத்திலொன்று. திருவாமூரில்வேளாள மரபிலுதித்த, திலகவதியம்மாளின் தம்பியாகிய திருநாவுக்கரசு சுவாமி, பாடலீபுரத்தில், சமணமத குருவானதைக்கண்டு, திலகவதியார் சோகமுற்று, இத்திருவதிகையில்வந்து, வீரட்டானேசரைப் பணிந்து, வேண்டியதால் சிவன், சூலையென்னும், வயிற்றுநோயை அப்பருக்கு உண்டாகும்படி செய்ய, அப்பர் சமணரைவிட்டுத் திருவதிகையில், தமக்கையுபதேசப்படி சூலைத்தீர்த்தத்தில், தினமுழுகிச் சிவனைத்தரிசித்துப் பதிகம்பாடியதால், சூலைநோய் நீங்கிற்று. இதைச்சமண சமயராஜனை, பாடலீபுரத் தரசனறிந்து வர

வழைத்துத் திருநாவுக்கரசு நாயனாரைச் சுண்ணாம்புக்காள வாயிலிட்டும், நஞ்சூட்டியும், யானையாலிடறச் செய்தும், நாயனார் பதிகங்கள்பாடிச் சாகாததால், பெரியகல்லைக்கட்டி யிவரைக்கடலின் நடுவில் தள்ளச்செய்தான். நமச்சிவாயப்பதிகம் அப்பொழுதும்பாடிய அப்பரை, வருணன்கல்லையே தெப்பமாகத்தாங்கித் திருப்பாதிரிப்புலியூரில் கரையேற்றியதால் அதில் பதிகம்பாடித் திருவதிகைக்குவந்தார். அதை ஷை பல்லவராஜனறிந்து, வந்து பணிந்து, சைவமதத்தில் தான் பிரவேசித்துச் சமணர்களையும், அவர்கள் கோவில்களையும், பாழிகளையுமழித்தான். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-16, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்1, ஆக பதிகம்-18.

20 ஷை யூரில் சிவஸ்தலம். குணதரேசுவரர், உமை, சமணராஜனால் சைவமதத்தில் வந்தபின் கட்டினது.

21 திருவாமாத்தூர்:—விழுப்புரத்தின் வடமேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அபிராமேசர், காமார்த்தேசர், முத்தாம்பாள், அழகியநாயகி, பம்பையாறு, பசுதீர்த்தம், வன்னிமரம், கோடிரிஷிகளும், காமதேநுவும், ஸ்ரீராமனும் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-5.

22 விழுப்புரம்:—பண்ணுருட்டியின் வடக்கு 12-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். நாராயணர், மகாலக்ஷுமி, விழுப்புரம் ஜங்ஷன் ரெயில்ஸ்டேஷன்.

23 திருப்புறவார் பனங்காட்டூர்:—என்பது (பனையபுரம்) விழுப்புரத்தின் வடக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பனங்காட்டீசர், திருபுராம்பாள், பதுமதீர்த்தம், அமிருததீர்த்

29 திருஅரசிலி:—என்பது (ஒழிந்தியாப்பட்டு) புதுச்சேரியின் வடமேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அரசிலிநாதர், பெரியநாயகி, அரசடிதீர்த்தம், வாமதேவரிஷி பூஜித்தது, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1.

30 இரும்பைமாகாளம்:—புதுச்சேரியின் வடமேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மகாகாளேசுவரர், குயில்மொழியம்மை, மகாகாளதீர்த்தம், சிவனுக்கும் மோகினிப்புருஷமெடுத்த விஷ்ணுவுக்கும், பிறந்த ஹரிஹரபுத்திரராகிய சாஸ்தாவும் அவர்பிரதமகணமான மகாகாளனும் பூஜித்தஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. 28, 29, 30 இம்மூன்றும் தொண்டைநாடு.

31 சங்கமங்கை:—சிவஸ்தலம், சங்கமங்கைநாதர், தேனோ காம்பாள், அற்புததீர்த்தம், சமணராகிய சாக்கியநாயனார், தினமொரு செங்கல்லை லிங்கத்தின் மேலெறிந்து வந்தவொருநாள், சிவனருளால் கல் கிடைக்காததால் தன் தலையை மோதியதாலவருக்கு முத்திகொடுத்த ஸ்தலம்.

32 திருமுண்டீசுவரம்:—என்பது (கெல்லிக்குப்பம்) பண்ணுருட்டியின் தென்மேற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மூண்டீசர், கானார்குழலி, முண்டகதீர்த்தம். கெல்லிக்குப்பம் ரெயில்ஸ்டேஷன்.

33 கேடிகோவில் (கண்டீசுவரம்) சிவஸ்தலம், நடனபாதேசுவரர், அஸ்தகராளாம்பாள், பெண்ணைநதி, கெடிலநதி, பிரமாவும், இந்திரனும் பூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. திருஞானசம்பந்தர் சேர்க்கை வைப்புஸ்தலம்.

34 கரையேறவிட்டநல்லூர்: என்பது (கூடலூர்) காசிநாதர், தரிசனாம்பிகை. அப்பர் கரையேறியது. கூடலூர் ரெயில்ஸ்டேஷன்.

35 திருப்பாதிரிப்புலியூர்: கூடலூரின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பாடலீசர், தோன்றாத்துணைநாதர்; தோகையம்பாள், பாதிரிமரம், கெடிலநதியும், பெண்ணையும், சமுத்திரசங்கமம் திருநாவுக்கரசரைக் கடலினின்றுங் கரையேற்றிக் காக்ஷிகொடுத்த ஸ்தலம். வியாக்கிரபாதர் பூஜித்தது சாபத்தால் முயலுருவடைந்த மதங்கரிஷியும் பூஜித்துச் சாபம் நீங்கியது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆக-2,

36 திருவயிந்திரபுரம்:—திருப்பாதிரிப்புலியூரின் மேற்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். தெய்வநாயகமூர்த்தி, வைகுண்டநாயகி, சேர்வைத்தீர்த்தம், கெடிலநதி, சேஷகிரி, ஆதிசேஷனுக்கும், கருடனுக்கும், சந்திரனுக்கும், பிரத்தியக்ஷம், திருமங்கையாழ்வார், மங்களாசாசநம்.

37 திருமாணிக்குழி;—திருப்பாதிரிப்புலியூரின் மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மாணிக்கவரதேசர், மாணிக்கவல்லி, மாணிக்கதீர்த்தம், பெண்ணைநதி, கொன்றை, வாமநாவதாரத்தில் விஷ்ணு பூஜித்தது. சையோகஸ்தாநமென்று பிரசன்னபடல மெப்போதும் போட்டு அதில் எழாவது பீமருத்திரரென்றவுருவ மெழுதியிருக்கிறது. ஷை படலத்திற்குச் சோட சோபசாரமும், அருச்சனையும் நடக்கிறது. அவர் காவலுமிருக்கிறார். திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

38 ஷை கோவில்லில் உதவிநாயகர், அம்பலக்கண்ணி, வழிநடந்தவணிகனுக்குத் திருட்டுப் போகாமல் காத்துதவி செய்தவர்.

39 தியாகவல்லி:—என்பது (திருச்சோபுரம்) திருப்பாதிரிப்புலியூரின் தெற்கு 7-மைலிலுள்ளது. சிவஸ்தலம். சோபுர

நாதர், சோபுரநாயகி, சமுத்திரம், மணல்மூடிருந்து கண்டெடுத்தஸ்தலம். அகஸ்தியர் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

40 திருத்தினைநகர்:--என்பது (தீர்த்தனநகரம்) திருச்சோபுரத்தின் தென்மேற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். திருந்தீசர், ஒப்பிலாம்பாள், வெள்ளாறு, சாம்பவதீர்த்தம், கொன்றை, தினையமுதீந்த பெரியானென்னும் பள்ளனுக்கும் அவன்மனைவிக்கும் காக்ஷிதந்தவர் சுந்தர மூர்த்தி நாயனார் பதிகம்-1.

41 பறங்கிப்பேட்டை:--திருச்சோபுரத்தின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சுவேதநாதர், உமை, சுவேதநதியாகிய வெள்ளாறு, சமுத்திரசங்கமம். பறங்கிப்பேட்டை ரெயில்ஸ்டேஷன்.

42 கிள்ளை:—பறங்கிபேட்டையின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, குஹதீர்த்தம், வருணனுக்கு ரோகநிவர்த்தியானது. கிள்ளை ரெயில் ஸ்டேஷன்.

43 ஸ்ரீ முஷ்ணம்:—கிள்ளையின் மேற்கு 22-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். ஆதிவராகமூர்த்தி, அம்புஜவல்லி, நித்யபுஷ்கரிணி, அசுவத்த நாராயணனுக்குப் பிரத்திபக்ஷம், இது அஷ்டசுவயம்புஸ்தலம். கோரைக்கிழங்கு லட்டு தினம் அம்சையுண்டு.

44 புவநகிரி:—சிதம்பரத்தின் வடமேற்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம். புவநகிரீசர், மீநாக்ஷி, வெள்ளாறு, மீநாக்ஷி கூபம், நாரதகூபம், இதில் ஹஸ்தியைச் செலுத்துங்காசி

பாக்கமென்னுங்கட்டமுண்டு. வேதங்கள் பூஜித்ததால், வேத கிரியென்றும், புவனேசனென்னுமரசன் ஆண்டதால், புவநகிரி யென்றும், ஒத்தூரென்றும்பெயர். குமரகோஷ்ட முண்டு. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் க்ஷேத்திரக் கோவையில் ஒத்தூரென்றும் திருநாவுக்கரசு நாயனார் தாண்டகத்தில், புவநநாதர், வெள்ளாறு என்றும் பாடியுள்ள வைப்புஸ்தலம்.

45 ஷை ஊர் (ஆதிவராகநத்தம்) விஷ்ணுஸ்தலம். ஆதிவ ராகமூர்த்தி, லக்ஷுமி ஆஞ்சநேயருமுண்டு.

46 திருக்கூடலையாற்றூர்:—சிதம்பரத்தின் மேற்கு 16-மை லில் உள்ளது. சிவஸ்தலம். நெறிகாட்டுநாதர், புரிகுழலாம் பிகை, சங்குதீர்த்தம், வெள்ளாறும் மணிமுக்தாநதியும், சங்க மம்வால்மீகர் பூஜித்தது, சிவன், பிராமணவடிவாய் சுந்தரமூர் த்திக்குத்தோன்றி விருத்தாசலத்துக்கு வழிகேட்ட அவரு க்கு இதுநான் வழியென்று இந்த கோவிலுக்குள் மறைந் தார். சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1.

47 திருவாமூர்:—திருவதிகையின் தென்மேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பசுபதீசர், திருபுரசுந்தரி, அப்ப ரோடை, பங்குனிமாசரோகிணியில்இதில், திருநாவுக்கரசுநாய னார் என்னும் அப்பர் அவதரித்து, திருவதிகையிலும், மற்ற ஸ்தலங்களிலும், உழவாரமெடுத்து, ஆலயங்களின் புல்லை வெட்டியும், பதிகங்கள்பாடியும், திருப்புகலூரில் லிங்கத்தில் ஐக்கியமானார் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் முனைப் பாடி யென்றுபாடியுள்ள வைப்புஸ்தலம்.

48 திருமுதுகுன்றம்.--என்பது (விருத்தாசலம்) சிதம்பரத் தின் மேற்கு 28-மைலிலுள்ளது. சிவஸ்தலம், விருத்தாசலே சர், பிருகந்நாயகி, மணிமுக்தாநதி, வன்னிமாம், மாற்றுரைத்த பிள்ளையார் முக்கியம். மாணிக்கவாசகர் பாடியது. ஊழிகாலங்

களுக்கு முன்னும் பின்னுமுள்ளதும், விருத்தகாசியாகிய இதினுயிர்விடும் பிராணிகள், பரமசிவனால், பஞ்சாட்சர உபதேசம் பெற்று நற்கதியடையும்பதி. அகஸ்தியர் வசிஷ்டர் இந்திராதிதேவர்கள் பூஜித்தது. 1000-பிராமணர்கள், தன்னாயிரத்தார் இதில்பூஜித்த முக்திஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனார் இந்த ஆலயத்துக்குள் சென்றபோது சிவனைக்காணாது தெக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் நம்பிரூபமாயிருக்கக்கண்டு பரவையாருக்குப் பணம்வேண்டுமென்று பதிகம் பாடிக்கேட்க செம்பொன்கொடுத்தும், மணிமுத்தாநதியிலதைப் போட்டும், திருவாரூரில் கமலாலயங் கீழத்துறையிலதை யெடுப்பித்தும், இதிலுள்ளமாற்றுரைத்த பிள்ளையாரைக்கொண்டு, நல்லமாற்றுங் காண்பித்தஸ்தலம். திருப்பூவாளூர்ப் புராணப்படி சிவகணமாயிருந்து, இதில் வணிகனாகப்பிறந்த மணிசூடனுக்குத் தவவேடத்துடன், விருத்தாசலேசர், பூவாளூருக்குப்போய்க்கலியாணஞ் செய்தழைத்துவந்து, முத்திகொடுத்த ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-7. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார்-3. ஆக பதிகம்-11. இங்கு வன்னியர் மடம் மிகவும் முக்கியம்.

49 திருவெருக்கத்தம்புலியூர்:---என்பது (ராஜேந்திர பட்டணம்) சிதம்பரத்தின் மேற்கு 27-மைலில் உள்ளது. சிவஸ்தலம். நீலகண்டேசர், நீலமலர்க்கண்ணி, வெள்ளாறு, நீலோத்பலதீர்த்தம், ராஜேந்திரன், நாகேந்திரன், நரேந்திரன், சாரங்கன் பூஜித்தது. வெள்ளெருக்கஞ் செடியில் சிவனாற் பலித்தார், திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் இதில் ஜனித்து, இதனிலும் இன்னமநேக ஸ்தலங்களிலுமுள்ள பதிகப்பாடல்களை யாழில் வாசித்து, மதுரைக்குச்சென்று, பக்தியுடன் யாழில்ப்பாடியதால், சுந்தரேசரால் பொற்பலகை கொடுக்கப்பெற்று, பத்தியுடன் திருஞானசம்பந்தர், நல்லூர்ப் பெருமணத்தில் ஐக்கியமானார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

50 தூங்கானைமாடம்:—என்பது (பெண்ணாகடம்) சிதம்பரத்துக்குமேற்கு 30-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சுடர்க்கொழுந்ீசர், பிரளயங்காத்தவர், கடந்தைநாயகி, வெள்ளாறு தேவகன்னியர், காமதேனு, வெள்ளானை, பூஜித்தது கலிக்கம்பநாயனார் இதில் ஜனித்துச்சிவனைத், தினம் பூஜித்து சிவனடியார்களின் பாதங்களைத் துலக்கி யன்னமிட்டும், அவர்க்கு வேண்டியவைதயிந்தும் வரும்போது, தன்னிடம் வேலைக்காரனாயிருந்து ஓடியவன் சிவவேடத்துடன் வந்ததால் இவர்பாரி, நீர் விடாமல்நின்றதால் அவள்கையைத் தறித்துத் தானே செம்பு நீரைவிட்டுக்கால்கழுவி, அவனுக்கும் வேண்டியதை யளித்துச் சிவபதமடைந்தார். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆக-2

51 மாரன்பாடி;—பெண்ணாகடத்தின் மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தாகநிவர்த்தனர், அன்னபூரணி, தேண் துளித்தீர்த்தம்.

52 திருநெல்வாயல்:—பெண்ணாகடத்தின் மேற்கு 4-மைலில் உள்ளது. சிவன், உமை, சிவபெருமான், அறத்துறையிலுத்தரவு செய்தபடி, மாரன்பாடியில் தங்கியிருந்த திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருக்கு, இந்த ஸ்தலத்துவேதியர்கள் முத்துச்சிவிகை யெடுத்துப்போய், அவரைச் சிவிகையிலேற்றிவைத்து, அறத்துறைக் கழைத்தது. சுந்தரமூர்த்தி நாயனார் நெல்வாயலறத்துறை யென்றுபாடியது.

53 திருவறத்துறை:—பெண்ணாகடத்தின் மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அறத்துறையப்பர், ஆநந்தநாயகி, வெள்ளாறு, சப்தரிஷிகளும் பூஜித்துத் தபசுசெய்தது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருக்கு முத்துச்சிவிகை கொடுத்தவர். இதன்மேற்கும் கிழக்கும் ஆறுமைலுக்குள்ப்பட்டிருக்கிற

அடியில்கண்ட எழுஸ்தலங்களிலும் சப்தரிஷிகள் தனித்தனியாய்ப் பூஜிப்பதற்கு வெள்ளாற்றை நீவாவென்றழைத்ததால் அதற்கு நீவா நதியென்றும்பெயர். வெள்ளாறுபச்சை மலையிலுற்பத்தியாகிறது. எழுதலங்களும் வெள்ளாற்றோரம் மாணிக்கவாசகரும், அருணகிரிநாதசுவாமியும் பாடியிருக்கிறார். மூர்த்திஸ்தலம், திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் பதிகம் 1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-3.

54 திருக்கைத்துறை:—ஆங்கீரசேசர், ஆங்கிரசரிஷிதபசுசெய்துபூஜித்தது.

55 திருவதிஷ்டத்துறை:—என்னும் (கோத்திட்ட குடி) வசிஷ்டேசர், வசிஷ்டரிஷி தபசுசெய்துபூஜித்தது. திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக்கோவையில் கோத்திட்டை யென்றுள்ள திருப்பதிகவைப்பு ஸ்தலம்.

56 திருவாடுதுறை:—காசியபேசர், காசியபரிஷிதபசுசெய்து பூஜித்தது.

57 திருமாந்துறை:—கௌதமேசர், கௌதமரிஷி தபசு செய்து பூஜித்தது.

58 திருவாலத்துறை:—புலஸ்தியேசர், புலஸ்தியரிஷி பூஜித்துத்தபசுசெய்தது.

59 காரியனூர்:—பார்க்கவேசர், பிருகுரிஷி, தபசுசெய்து பூஜித்தது.

60 திருஆதித்துறை:—ஆத்திரேயர், அத்திரிஷி தபசு செய்து பூஜித்தது 54-ஸ்தலமுதல் 60-ஸ்தலம் வரையில் எழுரென்று திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலங்கள்.

61 துருவம்:—திருவறத் துறையின் மேற்கு 10-மைலில் உள்ளது. சிவன், உமை, பெருமாளும் முக்கியம்,

62 ஆரள்ளூர்:—துருவத்தின் வடமேற்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சுந்தரேசர், மீனாக்ஷி, சிவகங்கை,

63 ஆத்தூர்:—ஆரள்ளூரின் வடக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தாலூகா சிதம்பரேசர், சிவகாமி, பச்சைநதி, இதில் விஷ்ணுவும் முக்கியம்.

64 சின்னச்சேலம்:—ஆத்தூரின் சமீபம் சிவஸ்தலம். சுகவநேசர், சுவர்ணாம்பிகை சுவர்ணபுஷ்கரிணி, விஷ்ணுகோவில் முக்கியம்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# ஆரும் அத்தியாயம்.

## தொண்டைநாடு என்பது (சித்தூர், செங்கற்பட்டு, சென்னைப் பட்டினம், வட ஆற்காடு ஜில்லாக்கள்.)

### வாயுலிங்கஸ்தலம்.

1 திருக்காளத்தி:—(என்பது காளஹஸ்தி) திருப்பதிக்குக் கிழக்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஸ்ரீ காளஹஸ்தீசுவரர், ஞானாம்பிகை, பொன்முகலியாறு, மலைமேல் கண்ணப்பருண்டு சிவராத்திரி முக்கியம். கைலாஸத்தின் கொடுமுடி தெக்ஷிண கைலாயமானஸம். வாயு, அகஸ்தியர், வசிஷ்டர் பூஜித்தது. கிருதயுகத்தில், சிலந்தியும், திரேதாயுகத்தில், பாம்பும், துவாபரயுகத்தில், யானையும், இக்கலியில், அருச்சுனனாகிய கண்ணப்ப நாயனாரும், பூஜித்தது அருச்சுநன் தபசுசெய்து, சிவன் வேடரூபத்துடன் தரிசனமளித்தபோது, அவரை அறியுமுன் காண்டீபத்தால், சிவனைத்தலையிலடித்ததால், மறுஜன்மத்தில்திண்ணனென்னும் வேடுவராகப்பிறந்து, காளத்தீசரிடம் தீவிரபக்தியால், திநமும் மாமிசத்தைமென்று ருசிபார்த்து ஊட்டியும், லிங்கத்தின் முடியிலிருந்த வில்வத்தைச் செருப்புக்காலால் நீக்கியும், வாயின்ஜலத்தை அபிஷேகஞ் செய்தும், தலைமயிரிலிருந்தபூவைச்சாத்தியும், ஐந்துநாள் தூங்காமல் சந்நிதியில் வில்லம்புடன் காத்துமிருப்பதைச் சிவகோசரியாருக்குச்சிவன் சுவப்பநத்தில்சொன்னபடியால், ஆறுவது நாளில் திநம் பூஜிக்குஞ்சிவகோசரியார், மறைந்திருந்து பார்க்கும்போது, திண்ணனூர் வழக்கப்படி ஒருகையில் மாமிசமும், ஒருகையிலம்பும், வில்லும் வாயில் ஜலமும், தலையில் பூவுமாக வந்தபோது, சிவலிங்கத்தின் கண்ணில் ரத்தம் பெருகுவதைக்கண்டு, பதைபதைத்து, அழுது அதன்கண்ணை

வில்லால்தோண்டிச்சிவன்கண்ணில் அப்ப, உதிரம்நின்றதால், கூத்தாடிச் சந்தோஷிக்கச் சிவனருளால், மற்றொருகண்ணிலும் இரத்தமுண்டாக, செருப்புக்காலே அவர்கண்ணில் வைத்துத் தன் கண்ணைநோண்ட, சிவன் கைபால்பிடித்துக் 'கண்ணப்பா நிற்க' வென்று காக்ஷிதந்து, முக்தியும் ஈந்தஸ்தலம். சிவகோசரியாருக்கும், முக்தி தந்தவர் பஞ்சபூதங்களில் வாயுஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-4. (காளஹஸ்தி) ரெயில்ஸ்டேஷன்.

2 திருப்பதிமலே:—ரேணு கொண்டாஜங்கஷனின் மேற்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். வெங்கடேச மூர்த்தி, ஸ்ரீநிவாஸர், அலமேலுமங்கை, பூதேவி, ஸ்வாமிபுஷ்கரிணி, பாபநாசதீர்த்தம், கபிலதீர்த்தம், கோனேரிதீர்த்தம், சேஷாசலம், புரட்டாசித் திருவோணத்தில் தேர்முக்கியம். இதில் க்ஷேத்திர பாலகரான, கந்தருக்கும், ஜனமேஜயராஜனுக்கும், தொண்டமான் சக்கிரவர்த்திக்கும், பிரத்தியக்ஷம், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருப்பாணாழ்வார், நம்மாழ்வார். ஆண்டாள், திருமங்கையாழ்வார், இவர்கள் மங்களாசாசநம், இது கந்தரின் குன்று தோராடவிலுமுண்டு.

3 திருப்பதி அடிவாரம்:—டவுன் ஸ்டேஷன் சிவஸ்தலம். விசுவநாதர், விசாலாக்ஷி, இது புராணஸ்தலம்.

4 திருப்பதி டவுன்:—விஷ்ணுஸ்தலம். கோவிந்த ராஜர் ருக்குமிணி, சத்தியபாமை, ஸ்ரீராமர், லக்ஷ்மணர், சீதை,

5 திருப்பதிடவுனில்:—விஷ்ணுஸ்தலம். யோகநரசிம்மர், மகாலக்ஷ்மி, நரசிம்மதீர்த்தம்.

6 அலமேலுமங்காபுரம்:—திருப்பதியின் தெற்கு 3-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம். ஸ்ரீநிவாஸர், அலமேலுமங்கை,

திருச்சானூரென்னுமிது புராணஸ்தலம். அலமேலுமங்கா புரம் ரெயில்ஸ்டேஷன்.

7 நகரிமலை:—திருப்பதியின் தென்கிழக்கு 25-மைலில் உள்ளது. சிவன், உமை, விஷ்ணுகோவிலு முண்டு. நகரிமலை ரெயில்ஸ்டேஷன்.

8 வேங்கடகிரி:—திருக்காளத்தியின் வடகிழக்கு 16-மைலில் உள்ளது. சிவஸ்தலம். காளத்தீசர். ஞானாம்பிகை, விஷ்ணு கோவில்களும் முக்கியம். மஹாராஜாவசிக்குமிடம். வேங்கடகிரி ரெயில்ஸ்டேஷன்.

9 திருமழிசை:—(மஹீஸார் க்ஷேத்திரம்) பூந்தமல்லியின் மேற்கு 3-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். ஜகத்பதி, ஸ்ரீதேவி, பூதேவி, புராணமுள்ள முக்கியஸ்தலம். திருமழிசையாழ்வார் ஜனித்தவிடம்.

10 திருத்தணிமலை:—ரேணுகொண்டாவின் தெற்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம், திருத்தணிநாதர், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சம்பூர்ணகிரி தீர்த்தம், வள்ளிக் கொடியிலிருந்து, வேடராஜனுக்குக் கிடைத்ததால், வள்ளியென்று பெயரிடப்பட்டு, வளர்ந்து, தினைக்கொல்லை காக்கும் பெண்ணைச் சுப்பிரமணியர், கிழப்பிராமணராய் வந்து, தன்னை மணம்புரியச்சொல்ல வள்ளி சுப்பிரமணியரையே நான், அடைவேனென்றதால், பாலரூபம்காட்டிக் கணபதியை யானையாக வள்ளியைத் துரத்தச்சொல்லிப், தன்னை வலிய கட்டிக்கொள்ளச் செய்து, சூரசம்ஹாரமாகி, யுத்தம், முடிந்தபின், வள்ளியைத் திருமணஞ்செய்து கொண்டஸ்தலம் தேவர்களும் ரிஷிகளும் பூஜித்ததாக புராணமுள்ளது. திருத்தணிமலை ரெயில்ஸ்டேஷன்.

12

11 திருக்கடிகை:—என்பது (சோளசிங்கபுரம்) மலைமேல் கோவில். அரக்கோணத்தின் தென்மேற்கு 8-மைலில், ரெயில் ஸ்டேஷன் உள்ளது. விஷ்ணுஸ்தலம். யோகநரசிம்மர், அமிருதவல்லி, அமிருத தீர்த்தம், ஹநுமார், தக்கான்குளம், சிறியதிருவடிக்கும், தெக்ஷனுக்கும், பிரத்தியக்ஷம். பேயாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

12 திருவிருஞ்சிபுரம்:—என்பது (கரபுரம்) அரக்கோணத்தின் தென்மேற்கு 11-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மார்க்கசகாயேசர், மரகதவல்லி, சக்திதீர்த்தம், பாலிநதி, விஷ்ணு, பிரும்மா, கானும்பூஜித்தது. மிளகு விற்கும், தனபாலசெட்டியென்னும் வணிகனுக்கு, வழிகாட்டியவர். அர்ச்சகர் குழந்தைக்குத் தீக்ஷானுக்கிரகஞ் செய்து, பூஜையைத் திருமுடிவளைத்து ஏற்றுக்கொண்டவர். திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம். திருவிரிஞ்சிபுரம் ரெயில்ஸ்டேஷன்.

13 திருவல்லம்:—அரக்கோணத்தின் தென்மேற்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வல்லநாயகேசர், வல்லாம்பிகை, சிவகங்கை, நீவாநதி, வாலாம்பேட்டைமலையில் கஞ்சாரனென்னும் அசுரனைக்கொன்றவர். நந்திகேசரும் சுவாமிபோலக்கிழக்கு முகமாயிருக்கிறார். நவக்கிரகங்களும் வல்லாளராஜனும் பூஜித்தஸ்தலம், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

14 திருமாற்பேறு:—என்பது (ஹரிசக்கரபுரம்) அரக்கோணத்தின் தெற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மால்வணங்கீசர், கருணாநாயகி, பாலாறு, ஹரிதீர்த்தம், விஷ்ணு பூஜித்து வரும்போது, தாமரைமலரொன்று சகஸ்திரநாமார்ச்சனைக்குக் குறைந்ததால், கண்ணைப்பிடுங்கி, அருச்சித்துச்சக்கரம் பெற்றார், சந்திரன் அகஸ்தியர் பூஜித்தது. திருஞானசம்

பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-4. ஆக பதிகம்-6.

15 ஷை திருமாற்பேறுர்:—திருமால் விஷ்ணுஸ்தலம். மகாலக்ஷ்மி, குபன் என்னுமரசன் பொருட்டு த்திருமால் ததீசிமுநிவருடன்போர் செய்ப, அவர்தேகத்தில் பட்டுசக்கரம்வாய் மடிந்துவிட்டதால், இதில்புதுசக்கரம் பெற்றுக் கும்பாசுரனை, வதைத்தார்.

16 திருவூறல்:—என்பது (தக்கோலம்) அரக்கோணத்தின் தென்கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். உமாபதீசர், உமாதேவி, நந்திதீர்த்தம், நுறைபாகிய கங்கை, நந்திவாயிலிருந்துண்டாகிறது, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், வைப்புஸ்தலம்.

17 ஷை கோவிலில்:—நீசலநாதேசர், சரீசுவாக்கண்ணி பார்வதி பூஜித்தது.

18 ஷை கோவிலில்:—கங்காதரேசர், மோகநவல்லி, சிவன் தலைக்கங்கை.

19 திருவாலங்காடு:—அரக்கோணத்தின் கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஊர்த்வதாண்டவேசர், வண்டார் குழலி, ஞானதீர்த்தம், முக்திதீர்த்தம், பலாமரம், ரத்நசபை, அகஸ்தியர், வசிஷ்டர், சுநந்தரிஷிபூஜித்தது. காளியும், சிவனும், நர்த்தநஞ்செய்யும்போது, ஆகாசம் பொத்தலாகும்படிகாலைத்தூக்கி ஊற்த்வ தாண்டவஞ் செய்தவர், தலையால் நடந்துவந்த காரைக்காலம்மைக்கு, முக்திகொடுத்தவர் ஒரு செட்டிப்பிள்ளைக்குக் கொடுத்தவாக்கைக் காப்பாற்றத்தங்கள் உயிரைக்கொடுத்தபழையனூர் வேளாளகுலத்தாரை, ஸ்தலப் பதிகத்தில் சிறப்பித்து பாடியுள்ளது. திருஞான சம்பந்தமூர்

த்தி நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனர் பதிகம்-2. சுந்தரமூர்த்தி நாயனர் பதிகம்-1. ஆக பதிகம்-4.

20 பழையனூர்:—திருவாலங்காட்டின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவன், உமை, சுந்தரமூர்த்தி நாயனர் பாடியுள்ள வைப்புஸ்தலம்.

21 திருவிலம்பியங்கோட்டூர்:—திருவாலங்காட்டின் தெற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சந்திரசேகரர், கதிர்முலையம்மை, சந்திரதீர்த்தம், சந்திரனும் ரம்பையும் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனரும் பாடிய வைப்புஸ்தலம்.

22 திருவள்ளூர்:—ரெயில் ஸ்டேஷன் திருவாலங்காட்டின் கிழக்கு 8-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், வீரராகவர், கனகவல்லி, ஹ்ருததாபநாசதீர்த்தம், வீக்ஷாரண்யம், புஜங்கசயனம், சாலிஹோத்திர ரிஷிக்குப்பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

23 திருவிற்கோலம்:—என்பது (கூவம்) திருவாலங்காட்டின் தென்கிழக்கு 5-மைலில் உள்ளது. திருபுராந்தகேசர், திருபுராந்தநாயகி, விருத்தக்ஷீரநதியென்பது கூவம். தேவர்கள்பூஜித்த தீண்டாத்திருமேனியப்பர், உத்தரவாகினியாகிய விருத்தக்ஷீரநதியின் மணலில் ஊற்றுண்டாகிச் சிவலிங்கத்துக்கு நாலுகால அபிஷேகம் நடக்கிறது. மழைபெய்வதாயிருந்தால் சுவாமிமேல் வெண்மைநிறமும், யுத்தம் நேரிடுமானல் சிவந்தவர்ணமும் படரும். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1.

24 திருப்பாசூர்:—திருவள்ளூரின் மேற்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பாசூரீசர், சுவயம்புவனியம்பாள், பாம்புதீர்த்தம், மூங்கிலடியில் சிவபெருமானுதித்ததாசப் புராண

முள்ளது. கரிக்காலச் சோழராஜனுக்குச் சமணர்கள் அனுப்பிய பாம்பை, பாம்பாட்டியாக ஆடல் காட்டி அருளியதாகத் திருநாவுக்கரசுநாயனார் பதிகத்தில் பாடியஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-2. ஆ௲ பதிகம்-3.

25 திருவெண்பாக்கம்:—என்பது (திருவிளம்புதூர்) திருவள்ளூரின் வடமேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வெணபாக்கநாதர், கனிவாய்மொழியம்பாள், வெண்பாக்கதீர்த்தம், திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரைப் பிரியேனென்று உறுதிகூறி மணந்துபிறகுபிரிந்ததால், கண் தெரியாமல் திகைத்தசுந்தரமூர்த்திக்கு ஊன்றுகோல்கொடுத்தஸ்தலம், சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1.

26 ௸ கோவிலுக்குத் தென்புறம் (வெண்பாக்கம்) கைகாட்டியநாதர், பரமேஸ்வரி புராணஸ்தலம்.

27 திருநின்றியூர்:—என்பது (தின்னனூர்) திருவள்ளூரின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மானஸலிங்கம், ஞானம்பாள், பூசலார்நாயனார், இதிலவதரித்துச் சிவாலயங்கட்ட எண்ணியும், சக்தியில்லாததால், மனதால் ஆலயங்கட்டிக்கும்பாபிஷேகமும், மானசிகமாகச்செய்து, காஞ்சீபுரத்தில் சிவன் சுவப்பனத்தில் சொன்னபடி, சோழராஜனு மிதில் வந்து தரிசித்தார். பூசலாருக்கு முக்தியும் தந்தவர். சுந்தரமூர்த்திநாயனாரும் திருநாவுக்கரசுநாயனாரும் வைப்புஸ்தலம். தின்னனூர் ரெயில் ஸ்டேஷன்.

28 ௸ திருநின்றியூர் விஷ்ணுஸ்தலம், பக்தவத்சலர், பத்தராவிப் பெருமாள், என்னைப்பெற்றதாயார், வருணபுஷ்கரிணி, விருத்தக்ஷீரநதி, வருணனுக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். இதின்மேற்கு மதுரமங்கலத்தில் எம்பார் அவதாரஸ்தலம்.

29 திருவேற்காடு:—தின்னனூரின் தென்கிழக்கு 4-மைலி லுள்ளது. சிவஸ்தலம், வேற்காட்டீசர், திருபுராசுந்தரி, வேற் கண்ணிதீர்த்தம், வேலாயுததீர்த்தம், அகஸ்தியர் பூஜித்தது மணக்கோலங் காட்டியவர் மூர்க்கநாயனரிதில் பிறந்து, சூதாடியதனத்தால் சிவனடியார்களுக்கு அன்னமிட்டுச்சிவபத மடைந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1.

30 திருவடமுல்லைவாசல்:—தின்னனூரின் வடகிழக்கு 3-மைலிலுள்ளது. சிவஸ்தலம், பாசுபதீசர், மாகிலாமணீசர், கொடியிடைநாயகி, விருத்தக்ஷீரநதி, சக்திதீர்த்தம், சுப்பிர மணியர் பிதாவைப் பூஜித்த ஸ்தலம், தொண்டைமான் சக் கரவர்த்தியின் வேட்டை தாக்கிச் சிவலிங்கம் வெளிப்பட்டுத் தரிசனங் கொடுத்தவர். சுந்தரமூர்த்திநாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனர் வைப்புஸ்தலம்.

31 திருவலிதாயம்;—என்பது (பாடி) தின்னனூரின்கிழக்கு 6-மைலிலுள்ளது. சிவஸ்தலம், வலிதாயநாதர், தாயாம்பிகை, வலிதாயதீர்த்தம், பாரத்துவாஜர், பிருகஸ்பதி, ஹநுமார், பூஜித்தது திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1.

32 திருக்கள்ளில்:—என்பது (திருக்கள்ளம்) திருவள்ளூரின் வடகிழக்கு 14-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவாநந்தே சர், ஆநந்தவல்லி, நந்திதீர்த்தம், குசஸ்தலைநதி, ஆநந்ததீர்த் தம், பிருகுரிஷிபூஜித்தது. திருஞானசம்பந்த மூர்த்திநாய னர் பதிகம்-1.

33 ஷெயூர். விஷ்ணுஸ்தலம் ஆதிவாராகமூர்த்தி, அஞ்சில வல்லி, நித்யபுஷ்கரிணி, அசுவத்த நாராயணனுக்குப் பிரத்தி யக்ஷம்.

34 பெரியபாளையம்:—திருக்கள்ளத்தின் மேற்கு 6-மைலி லுள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுகோவில்களும் முக்கியம்.

35 பொன்னேரி:—திருக்கள்ளத்தின் வடகிழக்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுகோவில்களும் முக்கியம். சுந்தரமூர்த்திநாயனார் திருநாட்டுத்தொகையில் பொன்னூரென்றுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம். சித்திரைமாசம், கருடசேர்வையும், விருஷபவாகன சந்திப்பு உற்சவம் பொன்னேரி ரெயில்ஸ்டேஷன்.

36 திருவொற்றியூர்:—மதராஸ்சென்றல் ஸ்டேஷனுக்கு வடக்கு5-மைலில்உள்ளது. சிவஸ்தலம், ஆதிபுரீசர் திருபுரசுந்தரி, கிருபாதீர்த்தம், பிரும்மதீர்த்தம், சமுத்திரம், மகிழமரம், பிரும்மா பூஜித்தது. (108) லிங்கங்களும், ஸஹஸ்ரலிங்கமொன்றும், ஏகபாதமூர்த்தியுமுண்டு. உன் மத்தநடனம், சுந்தரமூர்த்திநாயனாருக்குக் கோவிலில் பூகட்டுகிற, சங்கிலிநாச்சியாரை, முன்னிபந்தனைப்படி மணஞ்செய்து வைத்தஸ்தலம் கலியநாயனாரென்னும் செக்கார் தினம் சிவசந்நிதியில், அனேகதீபங்களேற்றிவந்தபோது; வறுமைவந்ததால். கூலிவேலைசெய்து, விளக்கேற்றிவரும்போது, ஒருநாள் கூலிகிடைக்காததால், பாரியைத் தெருவெல்லாம் விலை கூறியும், எவரும் வாங்காததால், சந்நிதியில் தன் கழுத்தையறுக்கச், சிவன் கையைப்பிடித்துக் காக்ஷிதந்து, இருவரும் சிவபதமடைந்தார்கள்- காவேரிபட்டிணத்திலுதித்து ஞானமடைந்த பட்டினத்துப் பிள்ளையார் முக்தியடைந்த சமாதியுள்ளது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-5, சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-2, ஆக பதிகம்-8. திருவொற்றியூர் ரெயில்ஸ்டேஷன்.

37 ஷையூர் சிவஸ்தலம், அகஸ்தியேசர், பார்வதி, அகஸ்தியரிஷி பூஜித்தஸ்தலம்.

38 விஷ்ணுஸ்தலம், ஷையூர் (காலாடிப்பேட்டை) விஜயமூர்த்தி, லக்ஷுமி.

39 சைதாப்பேட்டை:—எழும்பூருக்குத் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், காரணேசர், சொர்ணம்பிகை, அடையாறு, சொர்ணபஷ்கரிணி, புராணமுண்டு. சைதாப்பேட்டை ரெயில்ஸ்டேஷன்.

40 விஷ்ணுஸ்தலம், ஷை யூர் பிரசந்நவேங்கடேசநரசிம்மர், ஸ்ரீதேவி, பூதேவி, நரசிம்மதீர்த்தம்.

41 பூந்தமல்லி:—எழும்பூருக்கு மேற்கு 10-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஸ்ரீமூர்த்தி, பூவிருந்தவல்லி, திருக்கச்சிநம்பி அவதாரஸ்தலம், பேட்டையில் முதலியாண்டான் அவதாரஸ்தலம்.

42 புரிசைபாக்கம்:—எழும்பூருக்கு வடமேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கங்காதரேசர், பங்கஜவல்லியம்மை, சிவகங்கை குருந்தைமரம், பகீரதராஜன் தபசுசெய்து பூஜித்ததாக புராணமுள்ளது. விருத்தக்ஷீரநதியாகிய கூவம். இங்கு ஸ்ரீநிவாஸப்பெருமாள்கோவிலும், ஸ்ரீராமராலயமும், ஹநுமாரும், வரதராஜராலயமும் முக்கியம். சுந்தரமூர்த்திநாயனார் திருநாட்டுத்தொகையிலுள்ள வைப்புஸ்தலம்.

43 எழும்பூர்:—கிலமான கோவில். ரெயில்ஸ்டேஷனின்வடமேற்கு பூந்தமல்லிரோட்டின் தென்புறம் உள்ளது. சிவஸ்தலம், சப்தரிஷிநாதர், ஸ்ரீமதி, கூவம், திருநாவுக்கரசுநாயனார் திருப்பதிக வைப்புஸ்தலம். எழும்பூர் பெரியரெயில்ஸ்டேஷன்.

44 சென்னைப்பட்டினம்:—பூக்கடைத் தேரடித் தெருவு, சிவஸ்தலம், சென்னபுரீசர், பிரேமேசுவரி, சிவகங்கை.

45 ஷை கோவிலின் தென்புறம் விஷ்ணுஸ்தலம் சென்னமூர்த்தி, ஸ்ரீதேவி, பூதேவி.

46 ஷை தங்கசாலைத் தெருவு சிவஸ்தலம் ஏகாம்பரேசர், காமாக்ஷி, சொர்னபுஷ்கரிணி.

47 ஷை தெருவின் தெற்கு (கந்தசாமிகோவில்) சிவன், உமை, ஸ்கந்தர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர்முக்கியம்

48 ஷை தெருவின் மேற்கு (வாணியக் கந்தர்கோவில்,) சிவன், உமை, ஸ்கந்தர், வள்ளி, தெய்வானை இதின் கீழ்புறம் கிருஷ்ணர்கோவிலும் முக்கியம்.

49 ஷை அரமனைக்காரத்தெருவு சிவஸ்தலம், கச்சபேசர், சௌந்தராம்பாள், இதின் கிழக்கு தம்புசெட்டித் தெருவில், கிருஷ்ணன் கோவிலும், காளியம்மன் கோவிலும் முக்கியம்.

50 ஷை லிங்கசெட்டித் தெருவு சிவஸ்தலம் மல்லிகார்ச்சுனேசுவரர், பருவதநாயகி, புராணமுண்டு. இது மணலில் புதைத்திருந்து, எடுக்கப்பட்டஸ்தலம்.

51 திருவடீசுவரன் பேட்டை:—எழும்பூரின் தெற்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், திருவேட்டீசுவரர், சம்பகாம்பிகை, சம்பகாரண்யம், சம்பகதீர்த்தம், திருநாவுக்கரசு நாயனார், காப்புத் திருத்தாண்டகத்தி லுள்ள வைப்புஸ்தலம்.

52 திருவல்லிக்கேணி:—எழும்பூரின் தெற்கு 2-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், பார்த்தசாரதிப்பெருமாள், ருக்குமிணி, சத்தியபாமை, பலராமர், பிரத்தியும்நர், சாத்தகி, ரங்கநாதர், வேதவல்லி, தெள்ளிய நரசிம்மர், மகாலக்ஷுமி, ஸ்ரீராமர், சீதை, லக்ஷுமணர், பரதர், சத்திருக்நர், அநுமார் தேவப்பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவி, கருடாரூடர், கைரவணிசரஸு, சமுத்திரம், பிருகுரிஷிபால் கன்னிகாதானம் பெற்றவர். வியாசமகாரிஷிக்கும் ஆத்திரேயரிஷிக்கும், சுமதிராஜனுக்கும், அருச்சனனுக்கும், பிரத்தியக்ஷம். பிருந்தாரண்யம், அத்திரி, ஜாபாளி, சப்தரோமா, பிருகு, மரீசி, மார்க்கண்டேயர், மதுமான்ரிஷி, எழுவருந்தவஞ்செய்தது. பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

53 திருமயிலாப்பூர்:—எழும்பூருக்குத்தெற்கு 4-மைலிலுள்ளது சிவஸ்தலம், கபாலீசுவரர், கற்பகவல்லி, கபாலிதீர்த்தம் மணிகர்ணிகை, சமுத்திர அலைவாய்தீர்த்தம், புன்னாகமரம், வாயிலார்நாயனர் மானஸகபூஜை செய்து முத்தியடைந்தது. பார்வதி, மயிலுருவுடன் பதியைப் பூஜித்தஸ்தலம் திருஞான சம்பந்தமூர்த்திநாயனர் இதில் சிவநேசசெட்டியின் பெண், இறந்து தகனமாகிச சாம்பலும், எலும்புமாயிருந்தும், பூம்பாவை யென்னும் அப்பெண்ணைத் திருப்பதிகம் பாடியெழுப்பியது. பகவன், ஆதி, இவர்களிடத்தில், ஔவை, உப்பை, உறுவை, அதிகமான், கபிலர், வள்ளி யென்ற அறுவரும் கடைசியாகத் திருவள்ளுவரு முதித்தனர். ஞானத்தோடு பிறந்த திருவள்ளுவர் இதிலொரு வேளாளரிடம் வளர்ந்து, கற்புக்கரசியான வாசுகியம்மாளை மணர்ந்து, திருக்குறள்பாடி, ஞானமில்லாத பாடலுக்கு இடங்கொடாத மதுரைச்சங்கப் பலகையிலவர் ஏறியும், வேதாளத்தைக் கொன்றும், சிவபதமடைந்தார். இதில் பேயாழ்வார் அவதரித்த ஆதிகேசவர் சந்நிதியும், மாதவப்பெருமாளும் முக்கியம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1.

54 திருவான்மியூர்:—எழும்பூரின் தெற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மருந்தீசுவரர், திரிபுராம்பாள், சொக்கநாதர், வல்மீகிதீர்த்தம், சமுத்திரம், வால்மீகிரிஷி, முன்வேடராயிருந்து, அத்திரிரிஷிபால் மராமரமென்னும் உபதேசத்தைப்பெற்று, ஸ்ரீராமா வென்பதில், அஷ்டாக்ஷரத்தில் ஐந்தாவது (ரா) வும், பஞ்சாக்ஷரத்தில் இரண்டாவது (ம)வுமான ராமமந்திரத்தால் பிரும்மரிஷியாகிவிட்ட அவருக்கு இதில் சிவன் நடனதரிசனங் காட்டியவர். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-2, திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-1, ஆக பதிகம்-3.

55 நந்திவனம்:—எழும்பூரின் தெற்கு 23-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கூடுவாஞ்சேரிஸ்டேஷனின் சமீபம். அரைமைலி லுள்ளது. நந்தீசர், சௌந்தரநாயகி, நந்திதீர்த்தம், தருமதே வதையாகியநந்தி பூஜித்தது திருநாவுக்கரசுநாயனார் அடைவுத் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம்.

56 திருநீர்மலை:—எழும்பூரின் தெற்கு 10-மைலிலுள்ள பல் லாவரம் ரெயில்ஸ்டேஷனின் மேற்கு 3-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ரங்கநாதர், நீர்வண்ணர், நீலமுகில்வண்ணர், அணிமாமலர்மங்கை. மணிகர்ணிகை, மாணிக்கசயனம் தொ ண்டமான் சக்கரவர்த்தி, பிருகுரிஷி, மார்க்கண்டேயருக்கும் பிரத்தியக்ஷம பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களா சாசனம்.

57 சிங்கப்பெருமாள்கோவில்:—வண்டலூரின் தெற்கு 7-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம், நரசிம்மர், மகாலக்ஷ்மி, சிம்மபுஷ்கரிணி, சிம்மகிரியைக்குடைந்து ஒன்றாயுள்ளமூர்த்தி ஜாபாலிரிஷி பிரத்தியக்ஷம். இதே ரெயில்ஸ்டேஷன்.

58 கச்சூர்:—சிங்கப்பெருமாள் கோவிலின் வடமேற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அதிதிப்பிரியர், அஞ்சனாக்ஷி, கிருந்திட்ட தீர்த்தம், மகாவிஷ்ணு கூர்மாவதாரத்தில் பூஜித் தது சுந்தரமூர்த்திநாயனாருக்குத் திருவமுதும், தீர்த்தமும், கொடுத்தவர். சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்க ரசுநாயனார் வைப்புஸ்தலம்.

59 ஆலக்கோவில்:—என்பது (மலைக்கோவில்) கச்சூரின் மேற்கு அரைமைலிலுள்ளது, சிவஸ்தலம், ஔஷதேசுவரர், அந்தகாரநிவாரணி, ஔஷதகிரி, சுனை, தேவவைத்தியர்க ளான, அசுவினிதேவர்களிருவரும், பூஜித்து, மருந்துகள் தெ ரிந்து கொண்டது. திருநாவுக்கரசுநாயனார் அடைவுத்திருத் தாண்டக வைப்புஸ்தலம்.

60 செங்கல்பட்டு:—கச்சூரின் தெற்கு 5-மைலிலுள்ளது. சிவஸ்தலம் ஏகாம்பரர், காமாக்ஷி, பெரியவரி விஷ்ணுகோவில் களும் முக்கியம். இதின் வடக்கு பாலாறு, செய்யாறு வேகவதி சேரும் முக்கூடலில், விஷ்ணு பிரபலம். செங்கற்பட்டு பெரியஜங்ஷன் ஸ்டேஷன்.

61 திருஇடைச்சுரம்:—செங்கல்ப்பட்டின் வடகிழக்கு 5-மைலிலுள்ளது. சிவஸ்தலம், இடைச்சுரநாதர், இமயமடக்கொடிநாயகி, ஞானபுரீசர், கோவர்த்தநாம்பாள், மதுரதீர்த்தம், நந்திமலை சனற்குமார ரிஷிபூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனர் வைப்புஸ்தலம். நாலுபுறமும்மலை.

62 திருப்போரூர்.—செங்கற்பட்டின் வடகிழக்கு 12-மைலிலுள்ளது, சிவஸ்தலம், சிவன் உமை சுப்பிரமணியர் வள்ளி தெய்வானை. சுப்பிரமணியர் முக்கியஸ்தலம்.

63 திருக்கழுக்குன்றம்:—செங்கற்பட்டின் கிழக்கு 9.மைலில் உள்ளது. சிவஸ்தலம். வேதகிரீசர், திருபுராம்பாள், சங்கதீர்த்தம். நந்திதீர்த்தம், பக்ஷிதீர்த்தமாகிய சுனை கிருதயுகத்தில் விருத்தசிரவா முநியின்புத்திரர்களான சண்டன். பிரசண்டன் இரண்டுகழுகுகளும்பூஜித்துமுக்தியடைந்தன திரேதாயுகத்தில் சம்பாதி,சடாயு. பூஜித்துமுக்திபடைந்தன. துவாபரயுகத்தில், சம்புகுத்தன் மாகுத்தன், இரண்டுரிஷிகளும், அம்பிகையால் கழுகாகச்சாபமடைந்து இதில்பூஜித்துசாபம் நீங்கினது. இக்கலியுகத்தில் பூடா, விருக்தா, என்னும் முநிவர்கள் சிவன் சாபத்தால் சம்பு, ஆதி, இவ்விரண்டு கழுகுகளாகத் தவஞ் செய்துபூஜித்துவருகிறார்கள். மலையின்மேல்உச்சிகாலத்தில்இக்கழுகுகள், பாலும், நெய்ப்பொங்கலும், சாப்பிடுவதுண்டு. அநலன் அநிலன், ஆபச்சைவன்,சோமன், தரன், துருவன்,பிரத்தியூசன்.

பிரபாசனென்னும், எட்டுவசுக்கள் பூஜித்துக்காமதேனுவால் அடைந்தசாபத்தைநீக்கியஸ்தலம். நந்திதேவர், நான்குவேதங்கள் கோடிருத்திரர்கள் காமதேனு. இந்திரன் பிரும்மா, மகாவிஷ்ணு, சூரியர்கள், முநிகணங்கள்பூஜித்தது. மாணிக்கவாசகருக்குக் குருவாகத்தரிசனங்கொடுத்தவர் பட்டினத்தார்பாடியது. வேதகிரியாகிய இதில்கிரிப்பிரதக்ஷிணம், முக்கியம். திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1 சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. ஆ பதிகம்-3.

64 ஷை மலையின்மேல்புறம் சிவஸ்தலம். பக்தவத்சலேசுவரர் திருபுரசுந்தரி, நந்திதீர்த்தம், மகாபலிபுரத்திலரசாண்ட அசுரகுருவென்னும் அரசன் காட்டை யழித்துப் பட்டினமாக்கி, பூஜித்தது.

65 உருத்திரகோடி:—திருக்கழுக்குன்றத்தின்தெற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோடீசுவரர், கோடீசுவரி. கோடிதீர்த்தம், கோடி ருத்திரர்கள், காசியப முனியின் குமாரர்களாகியகோடி, அசுரர்களோடு யுத்தஞ்செய்து அவர்களைக்கொன்றதால் அப்பாவம் நீங்க இதில் பூஜித்தது திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக்கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

66 மகாபலிபுரம்:—செங்கற்பட்டின் தென்கிழக்கு 2-மைலிலுள்ளது. சிவஸ்தலம். சோமாஸ்கந்தர், மகிஷாசுரமர்த்தினி, சிவதீர்த்தமாகிய சமுத்திரம். திரேதாயுகமுடிந்து, துவாபரயுகம் ஆரம்பத்தில் நடந்ததாக, பாரதம் சாந்திபருவம் (141)-வது அத்தியாயப்படி துவாதசவருஷம் மழை யில்லாமல் பெரும்பஞ்சமுண்டானதால், விசுவாமித்திரரிஷி மிகப்பசியால் சேரிணியில் நுழைந்து, நாய்மாமிசத்தைத் திருடியெடுத்தவுடன், சண்டாளன் கண்டு அடிக்கவரும்போது, தான் விசுவாமித்திரரிஷி என்று சொன்னதால், சண்டாளன், "நாய்மாமி

சத்துண்டு, ஈனபதார்த்தம், உமக்குவேண்டாம்'' என்று தடுத்தும், கேளாமல், ஜலமும், கிடைக்காததால் எனக்கு மிகப்பசியென்று எடுத்துவந்து, பாரியோடு, சருவைத்துப் பக்குவப்படுத்தி, அக்நி, இந்திரன், பிதுரர்களுக்குத் திருப்பதியாகும்படி, வைசுவதேவஞ்செய்யும்போது, இந்திரனால் மழைபெய்ததால், கௌசிகமுநி, சந்தோஷித்துத்தானும், பாரியும்உண்ணமல், பாபம்நீங்க, இதில்தபசு செய்தார் சுந்தரமூர்த்திநாயனர் திருநாட்டுதொகையில்கடற்கரையென்றுபாடியவைப்புஸ்தலம்.

67 திருக்கடன்மல்லை:—யென்பது (மகாபலிபுரம்) விஷ்ணுஸ்தலம். தலசயநத்துறைவார், நிலமங்கைநாச்சியார், கருடதீர்த்தம். புஜங்கசயநம், புண்டரீகரிஷிக்குப் பிரத்திபக்ஷம். பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம் இதில் வாமநர், திருவிக்கிரமர்; வராகாவதாரர் ஏழுகோபுரம், ஏழுகல்த்தேரும் உள்ளது அருச்சுநன் பூஜித்தது. பூதத்தாழ்வார் ஜநநபூமி, அசுரகுருவென்னும் ராஜன் ஆண்டுபூஜித்தது. மகாபலிசக்கரவர்த்தி ஆண்ட, இதுமுதல்திருக்கோவலூர்வரையில் அவர், யாகசாலை. விஷ்ணு, வாமநராக ஜபம்செய்ய மூன்றடிதாநம்வாங்கி, உலகெலாம், திருவிக்கிரமராக, ஓரடியாக, அளந்து, மகாபலிக்கு அநுக்கிரசித்தார்.

68 கோவூர்:—எழும்பூருக்கு மேற்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சுந்தரேசர், மீநாக்ஷி, திருவையார் தியாகராஜய்யர், ராமபக்தராயினும், சிவன்பேரில்இதில் அநேகம், கர்னடகத்தெலுங்கு, கிருதிகள்பாடியுள்ளது.

69 மதுராந்தகம்:—செங்கற்பட்டின் தெற்கு 16-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். நாராயணர், ஸ்ரீதேவி, பூதேவி, சிவன்கோவிலும் முக்கியம். உடையவர், பெரியநம்பிகளிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்றஸ்தலம். மதுராந்தகம் ரெயில்ஸ்டேஷன்.

70 திருஅச்சிறுபாக்கம்:—மதுராந்தகத்தின் தெற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பார்க்கபுரேசர், சுந்தராம்பாள், சங்கதீர்த்தம், கொன்றைமரம், திருபுரதகனஞ்செய்யச் சிவன் ரதமேறும்போது, அச்சுமுறிந்து, விநாயகரருளால் அச்சுகூடியது, சிவன்வில்லாகத்தரித்த மேருமலையும், அதனுச்சியில் விநாயகராலயமும், வடபுறமுள்ளது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம். திருஅச்சிறுபாக்கம் ரெயில்ஸ்டேஷன்.

71 ஷை கோவிலில்:—ஆக்ஷீசர், பாலசுதாம்பாள், தேவதீர்த்தம், புராணமுண்டு.

72 செய்யூர்:—மதுராந்தகத்தின் தென்கிழக்கு 13-மைலில் உள்ளது. சிவஸ்தலம் வால்மீகநாதர், முக்தாம்பாள், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, பாலாறு, நவக்கிரகங்களும், ஸ்கந்தரும், பூஜித்தது. விஷ்ணுகோவிலும் முக்கியம். ஜமீனுள்ளது.

73 குன்றத்தூர்:—சிவஸ்தலம். சம்பகாரண்யர், குன்றுமுலைநாயகி, பாலவறுயபுஷ்கரிணி, இதிலுதித்த அருள்மொழித்தேவரென்னும். சேக்கிழார்சுவாமிகளாகிய வேளாளர், சிவபக்தியும், ஞானமுமடைந்து, அநபாயச்சோழ ராஜனிடம் மந்திரியாகி, ராசனையுஞ் சிவபக்தனுக்கித், திருத்தொண்டர் சரித்திரமென்னும் பெரியபுராணத்தை பாடலும் சரித்திரமுமாகச் செய்து, சிதம்பரத்தில் நடராஜர்சந்நிதியில், அரங்கேற்றிப் பிரசித்தப் படுத்தியபின், துறவறமடைந்து சிவபதமடைந்தார்.

74 திண்டிவனம்:—மதுராந்தகத்தின் தெற்கு 24-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கைலாஸநாதர். உமை, விஷ்ணுகோவிலும்முக்கியம். திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக்கோவை

யில், திண்டீசுவரமென்று சொல்லிய திருப்பதிகவைப்புஸ்தலம் திண்டிவநம் ரெயில்ஸ்டேஷன்.

75 மயூராசலம்:—(மைலம்) திண்டிவனத்தின் தெற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பரமேசுவரர், பார்வதி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, ஸ்கந்தர் முக்கியஸ்தலம். மயூராசலம் ரெயில்ஸ்டேஷன்.

76 வெண்குன்றம்:—என்பது (வெள்ளிமேடு) திண்டிவனத்தின் வடமேற்கு 10-மைலில் உள்ளது. சிவன், உமை, சுந்தரமூர்த்தி நாயனார் திருநாட்டுத்தொகையில் நாட்டுப்புரிசையென்றுபாடிய திருப்பதிக வைப்புஸ்தலம்.

77 திருக்கச்சிஏகம்பம்:—என்பது (காஞ்சீபுரம்) செங்கல்பட்டின் வடமேற்கு 22-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஏகாம்ரநாதர், காமாக்ஷி, கம்பாநதி, சிவகங்கை, மாமரம், கம்பாநதிக் கரையில் பார்வதிபூசை செய்யும்போது, சிவனருளால் வெள்ளம்பெருக, அம்மனும்சிவபூஜைக்குகுறைவில்லாமல், சிவலிங்கத்தை மார்புடன் தழுவினஸ்தலம் விஷ்ணு, பிரும்மா, சூரியன், அகஸ்தியர், வசிஷ்டர், பூஜித்தது மாணிக்கவாசகரும் பட்டினத்தாரும்பாடியது. துவாதசக்ஷேத்திரங்களிலும் சப்தபுரிகளிலுமொன்று. அநாதியான முக்திஸ்தலம். ஐபடிகள் காடவர்கோன்நாயனாரென்னும் சோழராஜன்இதிலரசாண்டு சிதம்பரமுதலிய அநேகஸ்தலங்களில் திருப்பணிகள்செய்து, க்ஷேத்திரவெண்பாப்பாடி முக்தியடைந்தார் 1-திருமயானம் 2-வாலீசுவரம், 3-வெள்ளைக்கம்பம், 4-கள்ளக்கம்பம், 5-நல்லகம்பம், 6-திருக்கச்சபாலயம், 7-பணாதரேசுவரம், 8-பாராசரீகம் 9-காயாரோகணம், 10-ஜுரஹரேசுவரம், 11-வீரட்டகாசம், 12-பாணீசுவரம், 13-ருத்திரகோடி, 14-மகாசாரதாநத்தம், 15-சத்தியபுரியென்று பெயருள்ளது. திருஞாந சம்பந்தமூர்த்தி

நாயனார் பதிகம்-4. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-7. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-12. யோக தக்ஷிணாமூர்த்தி.

78 திருக்கச்சி மேற்றளி:—77-பெரிய கோவிலின் தென்கிழக்கு ½-மைலிலுள்ள பிள்ளைப்பாளயத்தில் சிவஸ்தலம். மேற்றளிநாதர், விஷ்ணுதீர்த்தம், விஷ்ணு தவஞ்செய்து பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2. விஷ்ணுவுமிருக்கிறார்.

79 திருஓணகாந்தந்தளி:—77-பெரியகோவிலின் மேற்கு ½-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஓணேசர், காந்தீசர், ஜலந்தரேசர், சர்வதீர்த்தம், ஓணன், காந்தன், ஜலந்தரனென்னுமூன்று அசுரர்கள்பூஜித்தது. சுந்தரருக்குப் பொற்காசளித்தவர். சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. காஞ்சி டவுனிலுள்ள எல்லா லிங்கங்களுக்கும் பிரத்தியேக அம்மனில்லை. காமாக்ஷி ஒன்றே காமகோடி யந்திரமுள்ளது.

80 திருஅநேகதங்காவதம்:—காஞ்சி சர்வதீர்த்தத்துக்குத் தெற்கு வயலில் உள்ளது. சிவஸ்தலம். அநேகதங்காவதேசர், சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. பணாதரேசருமுண்டு

81 கச்சிநேறிக்காரைக்காடு:—என்பது (திருக்காலீசுவரன் கோவில்) ஆடிசம்பேட்டைத் தேரடியின்வடகிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கொல்லையில், காரைத்திருநாதர், இந்திரதீர்த்தம், இந்திரன்பூஜித்தது, திருஞானசம்பந்த மூர்த்திநாயனார்பதிகம்-1 கச்சபா ஆலயமும் காயாரோகணேசர் ஆலயமுமுண்டு.

82 காரைக்காடு:—கச்சிநெறிக்காரைகாடு சமீபம் சத்தியவிரதேசர், காணார்குழலி, சத்தியதீர்த்தம், திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக்கோவையில் கச்சிப்பலதளியென்றது.

83 கச்சிமயானம்:—காஞ்சிசர்வதீர்த்தக்கரையில் உள்ளது, சிவஸ்தலம். மயானேசர், திருநாவுக்கரசு நாயனார் திருவினைத் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிகவைப்புஸ்தலம்.

84 திருஆடிசம்பேட்டையில்:—சிவஸ்தலம். முக்தீசுவரர், திருக்குறிப்புத்தொண்ட நாயனாராகிய வண்ணார், சிவனால் கொடுக்கப்பட்டவஸ்திரத்தை, வெளுத்து, உலர்த்திக்கொடுக்க முடியாமல் மழைபெய்ததால், கல்லில்தன் தலையை மோதிக் கொள்ளச் சிவன்தன்கையால் பிடித்துக்காக்ஷியும் சிவபதவியு மளித்தார். திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக்கோவையில் கச்சிப்பலதளியென்ற வைப்புஸ்தலம்.

85 சின்னக்காஞ்சியில்:—சிவஸ்தலம். மணிகண்டேசர் திருநாவுக்கரசு நாயனார் கச்சிப்பலதளியென்ற வைப்புஸ்தலம்.

86 பெரியகாஞ்சியில்:—77-பெரியகோவிலின் தெற்கு ½-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஜ்வரஹரேசர், கச்சிப்பலதளியென்றது.

87 பெரியகாஞ்சியில் 77-பெரியகோவிலின் தெற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விவாதஸம்ஹாரர், கச்சிப்பலதளி, யென்றது.

88 காஞ்சி. சர்வதீர்த்தத்துக்குத் தெற்கு ½-மைலில் உள்ளது, சிவஸ்தலம். கைலாஸநாதர், கச்சிப்பலதளியென்றது.

89 காஞ்சி. சர்வதீர்த்த மேலக்கரையில் உள்ளது. சிவஸ்தலம். காசிவிசுவேசர், கச்சிப்பலதளியென்றது.

90 காஞ்சி. சர்வதீர்த்தம் வடகரையில் உள்ளது. சிவஸ்தலம். ராமநாதர், கச்சிபலதளியென்றது.

91 காஞ்சி டவுன்:—77-பெரியகோவிலின் தென்கிழக்கு ½-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பெரியகோவில் கச்சபேசர்,

காமாக்ஷி அம்மன், எல்லாலிங்கங்களுக்கும், இந்தக்காமாக்ஷி அம்மன் ஒன்று. சக்தியுள்ளவள் கச்சிப்பலதளியென்றது.

92 பெரியகாஞ்சியில்:—குமரகோஷ்டம், காமாக்ஷி கோவிலின் மேற்கு, சமீபம், சிவன், உமை, சுப்பிரமணியர் வள்ளி, தெய்வானை, குமாரசுவாமி முக்கியம். கச்சிப்பலதளியென்றது.

93 திருக்கச்சி:—(அத்திகிரி) சின்னக்காஞ்சியில் மேலோரம் பெரியகோவில் வரதராஜர், பெருந்தேவி, அநந்தசரசு, சேஷதீர்த்தம், வராகதீர்த்தம், பிரும்மதீர்த்தம், பிரும்மா, பிருகு, நாரதர், ஆதிசேஷன், கஜேந்திரனுக்கும், பிரத்தியக்ஷம், பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்.

94 ஷை கோவிலில் (வாரணகிரி) அழகியசிங்கர், அரித்திராதேவி, கம்பாநதியென்னும் வேகவதி பதுமதீர்த்தம், அக்நிதீர்த்தம், குசதீர்த்தம், பொய்கையாழ்வார்ஜநநபூமி, பிருகஸ்பதிக்குப்பிரத்தியக்ஷம். பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம் இதில்வேளுக்கை சிங்கப்பெருமாளுமுள்ளது.

95 அஷ்டபுயகரம்:—சின்னக்காஞ்சிக் கடைவீதிக்குவடக்கிலுள்ளது. விஷ்ணுஸ்தலம். ஆதிகேசவர், அலமேலுமங்கை, கஜேந்திர புஷ்கரிணி, கஜேந்திரனுக்குப் பிரத்தியக்ஷம், பேயாழ்வார், திருமங்கையாழ்வார். மங்களசாஸநம்.

96 திருத்தண்கா:—சின்னக் காஞ்சியில் உள்ளது விஷ்ணுஸ்தலம். திவ்யப்பிரகாசர், மரகதவல்லி, சரஸ்வதிதீர்த்தம், சரஸ்வதிக்குப் பிரத்தியக்ஷம், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம், வேதாந்ததேசிகர், அவதரித்தஸ்தலம்

97 வேளுக்கை:—சின்னக் காஞ்சியில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். முகுந்தமூர்த்தி, வேளுக்கைவல்லி, கநகசரசு, பிருகுரிஷிக்குப் பிரத்தியக்ஷம். பேயாழ்வார். திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம்,

98 பாடகம்:—பெரியகாஞ்சி ஏகாம்பரநாதர்கோவிலின்தென் மேற்கு ½-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். பாண்டவதூதர், ருக்குமிணி, சத்தியபாமை, மத்யதீர்த்தம், ஜநமேஜயராஜனுக்கும், ஹரீத ரிஷிக்கும்பிரத்தியக்ஷம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களா சாஸநம்.

99 கள்வனூர்:—பெரிய காஞ்சியில். விஷ்ணுஸ்தலம். ஸ்ரீராமர் லக்ஷ்மணர், சீதை, பரதர், சத்துருக்நர், கேசவர், அஞ்சிலைவல்லி, ஆதிவராகப்பெருமாள், அநுமார், புராணமுண்டு திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம் காமாட்சியம்மன் கோவிலுக்குள் ஈசானியமூலையிலுள்ளது.

100 நீரகம்:—பெரிய காஞ்சியில் கச்சபேசர் கோவிலின் தெற்கு ½-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஜகதீசமூர்த்தி, நிலமங்கைவல்லி, அக்ரூரதீர்த்தம், அக்ரூரருக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். இப்போது உலகளந்த பெருமாள் சந்நிதியிலிருக்கிறது.

101 நிலாத்திங்கட்டுண்டம்:—ஏகாம்பிரர் கோவிலுக்குள் வடபுறமுள்ளது. விஷ்ணுஸ்தலம், நிலாத்திங்கட்டுண்டமூர்த்தி, நேரொருவரில்லாவல்லி, சந்திரபுஷ்கரணி, சிவனுக்குப் பிரத்தியக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

102 ஊரகம்:—பெரிய காஞ்சியில், கச்சபேசர் கோவிலின் தெற்கு ½-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், உலகளந்த பெருமாள், அமிருதவல்லி, நாகதீர்த்தம், ஊரகமென்னும் ஆதிசேஷனுக்குப் பிரத்தியக்ஷம். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். இதில் 100, 102, 103, 105 நாலுதிவ்ய தேசங்களுள்ளது.

103 காரகம்:—பெரியகாஞ்சியில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், கருணாகரர், பத்மாமணி, அக்ராயதீர்த்தம், காருகரிஷிக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

104 திருவெஃகா:—திருவீதிக்குத் தெற்கு சின்னக்காஞ்சியில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், யதோக்தகாரிமூர்த்தி, கோமளவல்லி, பொய்கை, புஜங்கசயனம், பிரும்மாவுக்கும், சரஸ்வதிக்கும் கணிக்கண்ணருக்கும் பிரத்தியக்ஷம். பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். பொய்கையாழ்வார் அவதரித்த ஸ்தலம்.

105 கார்வானம்:—பெரிய காஞ்சியில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், கள்வமூர்த்தி, கமலவல்லி, கௌரிதீர்த்தம், கௌரிக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

106 பவளவண்ணம்:—பெரியகாஞ்சியில் காமாக்ஷி அம்மன் கோவிலின் வடக்கு ½-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், பவளவண்ணர், பவளவல்லி, சக்கரதீர்த்தம், அசுவினி தேவர்களுக்கும், பார்வதிக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். இதின் மேற்கு பச்சைவண்ணராலயமுள்ளது.

107 பரமேசுவரவிண்ணகரம்:—என்பது (வைகுண்டப் பெருமாள்கோவில்) பெரியகாஞ்சியிலுள்ளது விஷ்ணுஸ்தலம், பரமபதநாதமூர்த்தி, பவளவல்லி, வைகுண்டவல்லி, சக்கர தீர்த்தம், அயிரம தீர்த்தம், இதில் அரசாண்ட பல்லவராஜனுக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

108 திருப்புட்குழி:—பெரிய காஞ்சியின் மேற்கு 7-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், விஜயராகவமூர்த்தி, மரகதவல்லி, ஜடாயுதீர்த்தம், ஜடாயுவுக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கை

யாழ்வார் மங்களாசாஸனம். இதின் கிழக்கு கூரத்தாழ்வார் அவதரித்த (கூரம்) விஷ்ணுஸ்தலம் பிரபலம்.

109 இடவேந்தை:—மகாபலிபுரத்தின் வடக்கு 6-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், நித்யகல்யாணமூர்த்தி, கோமளவல்லி, கலியாண தீர்த்தம், மார்க்கண்டேயரிஷிக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

110 குரங்கணில்முட்டம்:—காஞ்சீபுரத்தின் தெற்கு 6-மைலில் உள்ளது சிவஸ்தலம், வாலீசுவரர், இறைபார்வளைநாயகி, வாலிதீர்த்தம், வாலி, குரங்கு, அணில், காக்கை பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்திநாயனார், வைப்புஸ்தலம்.

111 திருமாகரல்:—காஞ்சீபுரத்தின் தென் கிழக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அடைக்கலங்காத்தநாதேசர், திருபுவநநாயகி, செய்யாறு, அடைக்கல தீர்த்தம் இந்திரன் பூஜித்தது. புற்றுவளையிலிருந்து உதயமான லிங்கம் உடும்பு தழுவினது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

112 திருப்பனங்காட்டூர்:—காஞ்சீபுரத்தின் தென்மேற்கு 10-மைலில் உள்ளது, சிவஸ்தலம், பனங்காட்டீசர், அமிருதவல்லி, பாலாறு, சுந்தரதீர்த்தம், சந்நிதியில் பனைமரங்களுண்டு. பனம்பழம் தினம் நிவேதனமாகிறது. சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் சிவன் பிராமணவுருவுடன் கொடுத்த கட்டமுதைப் புசித்து, நீரெவ்வூரென்று கேட்க பனங்காட்டூர், வன்பாக்கம், இரண்டிலும்இருப்போமென்று, மறைந்தார். இரண்டிற்கும், சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

113 ஷை கோவிலிக்குள் தாளபுரீசர், ஸ்தூலகோமளபதாம்பாள், அகஸ்தியர் பூஜித்தது.

114 வன்பாக்கம்:—ஷெடியூர் இராமசுவாமீசர், பஞ்சின்மெல்லடியம்மை. கண்ணுவரிஷி பூஜித்தது.

115 கிருபாசாகரம்:—பனங்காட்டூரின் வடக்கு ½-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கிருபாநாயகர், கிருபாநாயகி, ஜடாகங்கை, புலஸ்தியரிஷி பூஜித்தது.

116 திருவோத்தூர்:—என்பது (அளகாவூர்) காஞ்சிபுரத்தின் தென்மேற்கு 20-மைலில் உள்ளது சிவஸ்தலம், வேதநாதர், இளமுலைநாயகி, வேததீர்த்தம், செய்யாறு, அகஸ்தியர், வசிஷ்டர், முதலிய அனேகரிஷிகளுக்குச்சிவன் வேதாந்தவுபதேசஞ்செய்தார், திருஞானசம்பந்தர் இதில் ஆண்பனையைப் பெண்பனையாக்கினர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1. ஆதிகேசவப்பெருமாள்சந்நிதியும் இதிலுண்டு.

117 ஸ்ரீபெரும்பூதூர்:—காஞ்சிபுரத்தின் வடகிழக்கு 15-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ஆதிகேசவப்பெருமாள், எதிராஜவல்லித்தாயார், ராமாநுஜபுஷ்கரணி, ஆதிகேசவாசாரியருக்கும் எதிராஜருக்கும் பிரத்திபக்ஷம். புராணமுள்ளது. ராமாநுஜர் அவதரித்தது. சிவன்கோவிலுமிதில் பழைமையான முக்கியஸ்தலம்.

118 நாராயணவனம்:—திருத்தணியின் வடக்கு 18-மைலிலுள்ளது விஷ்ணுஸ்தலம், நாராயணர், ஸ்ரீதேவி, பூதேவி, புராணஸ்தலம்.

119 கிருஷ்ணகிரி:—விஷ்ணுஸ்தலம், நாராயணர், ஸ்ரீதேவி, பூதேவி, புராணஸ்தலம். கிருஷ்ணகிரி ரெயில்ஸ்டேஷன்.

120 ஆரணிக்கோட்டை;—காஞ்சிபுரத்தின் தென்மேற்கு 20-மைலில் உள்ளது பெரியஜமீன், சிவஸ்தலம், அருணாசலேசர், உண்ணாமுலையம்மை, ராமர், லக்ஷ்மணர், சீதை, கிருஷ்ணர்கோவிலும் முக்கியம்.

121 ஆற்காடு:—காஞ்சீபுரத்தின் மேற்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஏகாம்பிரநாதர், காமாக்ஷி, விஷ்ணுவும் முக்கியம். ஆற்காடு ரெயில்ஸ்டேஷன்.

122 வேலூர்:—ஆற்காட்டின் சமீபம், சிவன், உமை, பாலாறு, விஷ்ணு கோவில்களும் முக்கியம். வேலூர் ரெயில்ஸ்டேஷன்.

123 வாலாஜாபேட்டை:—ஆற்காட்டின் வடக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணு கோவில்களும் முக்கியம்.

124 சித்தூர்:—ஆற்காட்டின் வடக்கு 30-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணு கோவில்களும் முக்கியம். சித்தூர் ரெயில்ஸ்டேஷன்,

125 சந்திரகிரி:—சித்தூரின் வடக்கு 23-மைலில் உள்ளது: சிவஸ்தலம், சந்திரசேகரர், காலசப்ஹரர், திருபுரசுந்தரி, மார்க்கண்டேயர் பூஜித்தது. விஷ்ணு கோவிலுமுண்டு. இதில் ஆண்ட ஸ்ரீரங்கநாயகர், 1639-ம் வரு ஆங்கிலேயருக்குச் சென்னையைக்கொடுத்தார். சந்திரகிரி ரெயில்ஸ்டேஷன்.

126 பாக்கர்லா:—சித்தூருக்கு வடக்கு சிவஸ்தலம், சந்திரசேகரர், கங்கை, சரஸ்வதி பூஜித்தது. பாக்காலா பெரிய ஜங்ஷன் ஸ்டேஷன்.

127 சோலார்ப்பேட்டை:—வேலூரின் மேற்கு பங்களூருக்குக் கிளையுள்ள ஜங்ஷன்ஸ்டேஷன். சிவஸ்தலம், சிவன், உமை, பெருமாளும் முக்கியம்.

128 திருப்புத்தூர்:—சோலார்ப்பேட்டையின் மேற்கு 5-மைலில் உள்ளது சிவஸ்தலம், புற்றீசர், ஞானம்பாள் விஷ்ணு கோவில்களுண்டு. திருப்புத்தூர் ரெயில்ஸ்டேஷன்.

129 வாணியம்பாடி:—சோலார்ப்பேட்டையின் கிழக்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம, சிவன், உமை, பாலாறு சுற்றிலும் ஓடுகிறது. வாணியம்பாடி ரெயில்ஸ்டேஷன்.

130 திருவெங்கவாசல்:—சிவஸ்தலம்சோமாஸ்கந்தர்,உமை' தக்ஷகன் பூஜித்தது. தெக்ஷிணாமூர்த்தி முக்கியம்.

131 திருநெடுங்குன்றம்:—விஷ்ணுஸ்தலம், ஸ்ரீதரர், ஸ்ரீதேவி, பூதேவி, சியவனரிஷி பூஜித்தபுராணமுள்ளஸ்தலம்.

132 திருநற்குன்றம்:—எழும்பூரின் மேற்கு 4-மைலில் உள்ளது, சிவஸ்தலம், சிவன், உமை, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

133 கோயம்பேடு:—எழும்பூருக்கு மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், குசலபுரீசர், அரம்வளர்த்தநாயகி, 'பெருமாளும் முக்கியம். உழக்கு போன்ற லிங்கம் உள்ளது.

திருவக்கரை, திருஅரசிலி, இடும்பைமாகாளம் (5) வது அத்தியாயம் நடுநாட்டு ஸ்தலங்களோடு சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது.

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

---

# ஏழாம் அத்தியாயம்.

## சோழநாடு வடபாகம்.

### ஆகாயஸ்தலம்.

1 சிதம்பரம்:—காவேரியின் வடக்கு சிவஸ்தலம், நடராஜர், சிவகாமி, கனகசபை, சிவகங்கை, சப்தசாகரம், திருப்பாற்கடல், ஆலமரம், துவாதசாந்தஸ்தலம், வீணாதர தக்ஷிணாமூர்த்தி, கிராதார்ச்சுனர், அடியில்கண்டபடி புராணமுண்டு. (1) அத்தியாயம். சிவன் கைலையில் நந்திதேவருக்கு உரைத்தபடி, சூதர் சௌநகாதிகளுக்குச் சிதம்பரமகிமையை யுரைத்தது. (2) தில்லைவனமென்றும், புண்டரீகபுரமென்றும் இதில் வசித்தால் கைலாஸத்தில் வசித்ததாகுமென்றது (3) சிவகங்கை எல்லாப் பாபங்களையும் போக்கி முக்தியளிக்குமென்றது. (4) ஆடிமாஸப்பிரவேசம், கிருஷ்ணாஷ்டமி, துலாமாசம் உத்திரம், மார்கழி திருவாதிரை, தைசங்கரமணம், தைப்பூசம், பங்குனி உத்தரம், சூரியசந்திர கிரகணங்கள், இவைகளில் சிவகங்கையில் முழுகுகிறவர்களுக்கு நற்கதியுண்டு (5) திருஸகஸ்ரமுநீசுவரர்களுடன் நாமும் ஒருவராகத் தில்லையில் வசிக்கிறோமென்று, சிவன் சொன்னது. (6) மாத்தியந்தினரிஷியை அவர்பிதாவான மத்தியந்தர் இதில் பூஜிக்கச்சொன்னது (7) இந்திரன் இதில் பூஜித்து, தன்னை ஜபித்துத் தேவலோகத்தை யாண்ட வால்கலியென்னும் அசுரனை ஜயித்துத் தேவலோகம் ஆண்டது. (8) வழிப்பறிசெய்த பாவியான புல்கஸனென்னும் நீசன், கோபுர தரிசனத்தாலும், ஸ்தலவாஸத்தாலும், பாவமநீங்கி நற்கதியடைந்தது. (9) மாத்தியந்தின முனிக்குத் திருமூலநாதர், பிரத்தியக்ஷமாகி, மரமேறி வில்வமெடுக்க அவர்கேட்டுக்கொண்டபடி, வியாக்ரபாதமும், கண்

ணும், கையுமுண்டானது. (10) வியாக்கிர பாதர், வசிஷ்டரிஷியின் தங்கையைமணந்து உபமன்னியுரிஷி, அவர்களிடம் பிறந்து, பாலுக்காகச் சிவன், திருப்பாற்கடலை வரவழைத்தது. (11) ஆதிசேஷன் தன்குருவும், பதியுமான திருமாலிடம், ஆநந்ததரிசனங்காண விஞவியது. (12,) (13,) (14)பரமேசுவரர்பிக்ஷாடனராகி விஷ்ணுமோகினியாகித்தேதவ தாருவனத்தில், பரமசிவனை வெறுத்த ரிஷிகளை மோகப்படுத்தி, ரிஷிபத்தினிகளுக்கு அநுக்கிரகித்துசிவன் ரிஷிகளாலேவிய புலியின் தோலையுரித்துப் போர்த்தியும், பாம்பையணிந்தும், பூதத்தின்மீது ஆனந்த நிர்த்தனமும் செய்தார். ரிஷிகளும் அக்ஞானம் நீங்கி ஸ்தோத்திரஞ்செய்தார்கள். (15) ஆதிசேஷன் இதில் பூஜித்துப் பதஞ்சலி யென்னும் பெயரடைந்ததும், திருமாலும், பிரும்மாவும் இதில் வந்தது. (16) பதஞ்சலி, வியாக்கிரபாதரிருவரும், இரண்டுலிங்கங்களை மைத்துப் பூஜித்தது. (17) நடராஜர் ஆனந்ததாண்டவ தரிசனங்காட்டியது. (18) பதஞ்சலி, வியாக்கிரபாதர், தரிசித்து இந்தப்படி எப்போதும், தரிசனங் கொடுத்து, தெரிசிப்பவர்களுக்கு முக்தியும் கொடுக்கும்படி வரம்கேட்டது. (19) அந்தர்வேதிக்கு பிரும்மாவின் யாகத்துக்குத் திருஸஹஸ்ர முனிவர்கள் போனது. (20) மனுவின் ஐந்தாவது பேரனை, கௌடதேசாதிபதி, சிம்மவருமன், சரித்திரம். (21) சிம்மவருமனிதில், வியாக்கிரபாதரைக்கண்டது. (22) சிம்மவருமன் சிவகங்கையில் முழுகிக் குஷ்டநோய்நீங்கி, ஹிரண்யவருமனானது (23) (24) (25) ஹிரண்யவருமன் சிதம்பரத்தில் வசித்துக் கௌடதேசத்தைத் தன் தம்பிக்கு முடிசூட்டி, தில்லைவனத்தைப் பட்டிணமாக்கி, யாகத்துக்குப்போன திருஸஹஸ்ர முனிவர்களை யழைத்து, மாளிகைகள் கட்டிக் கொடுத்துக் கோபுரங்கள் மதில்களுண்டுபண்ணி மாசோஸ்தவங்களும்,

தேரும் நடத்தினது. (26) வருணனுக்குப் பிரும்மஹத்தி நீங்கினதும், சந்நிதி சமுத்திரத்தில், மாகஸ்நானம் முக்கியமென்றதும், இதில் இரக்ஷதாண்டவராகிய நடராஜரை விஷ்ணு, பிரும்மா, அகஸ்தியர், வசிஷ்டர், சமஸ்ததேவர்களும் ரிஷிகளும் பூஜித்தது. எல்லாஸ்தல சிவகலைகளும் அர்த்தயாமத்தில் வந்தொடுங்கி பின்போகும் ஸ்தலம். கூற்றுவநாயனார்முக்திஸ்தலம். சிதம்பரம், தாலூகாரெயில்ஸ்டேஷன்.

2 நடராஜர் சபையின்வடபுறம் சிவஸ்தலம், ஸ்ரீமூலநாதர், உமாதேவி, சிற்சபை, பரமாநந்ததீர்த்தம், திருபுரகோசதீர்த்தம், புலிமடுவு, குய்யதீர்த்தம், மாணிக்கவாசகர் அநேகஸ்தலங்களைத் தரிசித்துப்பாடிக் கடைசியில், சிதம்பரமடைந்து, ஈழதேசராஜனையும், புத்தகுருவையும், வாதில் வென்று ஊமையான அரசன் பெண்ணைச் சைவசமயத்தைச் சிலாகித்துப் பேசச்செய்து, சமணர்களை விபூதி ருத்திராக்ஷம் தரிப்பித்துச் சைவர்களாக்கினார், நடராஜரே பிராமணராய்ச் மாணிக்கவாசகரிடம், தன்கையால் எழுதினதாவது:— அகவல் (4,) தமிழ்ப்பாடல் (600,) அகப்பொருள் கோவை (400,) இவை திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்தென்று, திருவாசகங்களுமெழுதி முடிந்தபின், தில்லை மூவாயிரவரும்காண, மாணிக்கவாசகர், சபாநாயகரிடம், ஐக்கியமான முக்திஸ்தலம். வலதுதிருவடியைமுயலகன்மீது ஊன்றியநடனம். ஆதனூரில் பிறந்த, நந்தனார், சிவபக்தியால் இதில் தரிசிக்க, நாளைப் போவேனென்ற பறையர், திருநாளைப்போவார் நாயனாராகி, தில்லைவந்து, அக்கினியில் சந்நிதியில் முழுகி, நடராஜரைத் தெரிசித்துச் சிவபதமடைந்தார். திருநீலகண்ட நாயனாரது, கற்பில் சிறந்த பாரியின் பிணக்கை, உலகறிய வெண்ணிய சிவன், தவசிவேஷத்துடன் ஒரு ஓட்டை, இக்குயவரிடம் வைத்து நான் கேட்கும்போது கொடுமென்றார். கொஞ்ச

நாள் கிரமித்துச் சிவன் தவசியாகவந்து, ஓட்டைக்கேட்க, வைத்தவிடத்தி லில்லாததால், மனைவியைக் கைப்பிடித்துக் குளத்திலிறங்கி, சத்தியஞ் செய்யச்சொல்லி, இருவருங் கழியைப்பிடித்துச் சொன்னதால், இருவரையும், இளமையாக்கி காக்ஷிதந்து சிவபதமடையச்செய்தார் உமாபதிசிவாசாரியர் முக்திஸ்தலம். அபயகுலசேகரச் சோழராஜன் காலத்தில், நம்பியாண்டார் நம்பியார் தேவாரப்பதிகங்கள் கண்டெடுத்த ஸ்தலம். பெரியகணபதி, சுப்பிரமணியர், தேவசபை, சித்சபை, ராஜசபை, கனகசபை, பரமாநந்த நடனம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-8, சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-11. பாக்கிப்பதிகங்களைச் சிதளரித்தன.

3 ஷை கோவிலுக்குள் சித்திரகூடம் விஷ்ணுஸ்தலம், நடராஜர் சந்நிதியில் கோவிந்தராஜர், புண்டரீகவல்லி, புண்டரீகசரஸு, போகசயநம். சிவன்முதலான மூவாயிரவருக்கும் கண்ணுவர், பிரும்மா, சரஸ்வதி இந்திராதிதேவர்களுக்கும் பிரத்தியக்ஷம். பிரும்மாலயமுண்டு. ஸமஸ்ததேவர்களும் கொலுவிருந்தது. குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாசனம். கம்பராமாயணம் சப்தகாண்டமும் கவிபாடி அரங்கேற்றியஸ்தலம். காளமேகன் கணபதியால் கைலைசேர்ந்த ஔவை, புகழேந்தி, ஒட்டக்கூத்தர், இராமலிங்கசாமிகள் முதலிய அநேகபுலவர்கள் பாடியஸ்தலம்.

4 திருநாகேசுவரம்:—மேலவீதியின் மேல்புறம் சிவஸ்தலம், அநந்தேசுவரர், சௌந்தரி, பதஞ்சலி ரிஷிபூஜித்தது.

5 திருப்புலீசுவரம்:—மேலவீதியின் மேல்புறம் சிவஸ்தலம், இளமைதருவார், பாலசுந்தரி, புலித்தீர்தம், வியாக்கிரபாதரிஷிபூஜித்துத் தபசுசெய்தது. திருநீலகண்ட நாயனாரு

க்கு இளமை தந்துசாக்ஷிதந்தவர். ருக்குவேஞரில ஜனித்த கணம்புல்லநாயஞரிதில், புல் அறுத்து விற்றுத் தினம் விளக்கேற்றி வருகையிலொருநாள், புல் விலையாகாததால், விளக்கில் புல்லையும், தன்சடையையும் எரிக்கும்போது, சிவன்சாக்ஷியளித்தது.

6 வடக்கு வீதிக்கு வடபுறம். சிவஸ்தலம், பிரம்மபுரீசர், சிங்காரவல்லி, பிரும்மதீர்த்தம், பிரும்மாபூஜித்தது. இதின் வடபுறம் தில்லை மகா காளி முக்கியம்.

7 திருவேட்களம்:—என்பது (மூங்கில்வனம்) சிதம்பரத்தின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பாசுபதேசர், நல்லநாயகி, சிவகங்கை, நாரதகீர்த்தம். அருச்சுனன் பாசுபதம்பெற்றது. திருஞானசம்பந்தமூர்த்திநாயஞர் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயஞர் பதிகம்-1. ஆக பதிகம்-2.

8 திருநெல்வாசல்:—என்பது (சிவபுரம்) சிதம்பரத்தின் தென்கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், உச்சிநாதர், கனகாம்பிகை, கிருபாசமுத்திரம், கனகதீர்த்தம், கண்ணுவர் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயஞர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயஞர் வைப்புஸ்தலம்.

9 திருக்கழிப்பாலை:—என்பது (காரைமேடு) சிதம்பரத்தின் தென்கிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பால்வண்ணேசர், பொற்பதவேதநாயகி, கொள்ளிடம், வால்மீகிரிஷிபூஜித்தது. இந்தஸ்தலம் கொள்ளிடத்தால்இடிந்ததால் (8) சிவபுரியில் அமைக்கப்பட்டது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயஞர் பதிகம்-2, திருநாவுக்கரசு நாயஞர் பதிகம்-5. சுந்தரமூர்த்தி நாயஞர் பதிகம்-1. ஆக பதிகம்-8

10 திருமயிலாடி:—கொள்ளிடம் ரெயில்ஸ்டேஷனுக்கு தெற்கு3-மைலிலுள்ளது. சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி தெய்வானைமயிலையாட்டியவர். கொள்ளிடம்ரெயில்ஸ்டேஷன்.

11 திருமயேந்திரப்பள்ளி:—என்பது (கோவிலடிப் பாளயம்) சிதம்பரத்தின் தென்கிழக்கு 6-மைலில் உள்ளது சிவஸ்தலம். திருமேநி அழகர், வடிவாம்பாள், கொள்ளிடம், மந்திரசரசு, பிரும்மா, சூரியன், சந்திரன், இந்திரன், மகாபலி பூஜித்தது. திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1.

12 திருநல்லூர்பெருமணம்:—மென்பது (ஆச்சாபுரம்) கொள்ளிடத்தின்கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிவலோகத்தியாகேசர், நங்கையுமையம்மை, பக்ஷிதீர்த்தம், பஞ்சாக்ஷரத்தீர்த்தம், கொள்ளிடம், திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனருடைய திருமணங் காணவந்த, திரு நீலகண்டத்து யாழ்ப்பாணர், முருகநாயனர், திருநீலநக்க நாயனர், மற்றுஞ்சில அடியார்களுடனும், பாரியுடனும், திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனர், சிவலிங்கஜோதியிலைக்கியமான முக்திஸ்தலம். திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1, கொள்ளிடம் ரெயில்ஸ்டேஷன்.

13 தென்திருமுல்லைவாசல்:—சீர்காழிக்குக்கிழக்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். முல்லைவநேசர், கோதையம்மாள், இந்திரதீர்த்தம், கொள்ளிடம், சமுத்திரத்தில், சங்கமம், இந்திரன், சுதர்மன், பூஜித்தது. திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனர். பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனர் வைப்புஸ்தலம்.

14 சீர்காழி (ஸ்ரீராமவிண்ணகரம்) சிதம்பரத்தின் தெற்கு 10-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். திரிவிக்கிரம மூர்த்தி. தாடாளன், மட்டவிழுங்குழலிநாச்சியார், சங்கதீர்த்தம், சக்கரதீர்த்தம். அஷ்டகோணரிஷிக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம், ஸ்ரீராமர் கோவிலுமுண்டு.

15 ஷைசீர்காழிகோவிலில். சிவஸ்தலம். பிரும்மபுரேசர்திருபுரசுந்தரி, பிரும்மதீர்த்தம். கழுமலநதி, சக்கரதீர்த்தம், 1-பிரு

ம்மபுரம், 2-தோணிபுரம், 3-வேணுபுரம், 4-திருப்புகலி, 5-வெங்குரு, 6-பூந்தரா, 7-சிவபுரம், 8-திருபுரவம், 9-ஷண்பை, 10-சீர்காழி, 11-கொச்சை, 12-கழுமலமென்னும் பெயருள்ளது. பிரளயகாலத்தில் பிரும்மா, மகாவிஷ்ணு முதலிய தேவர்களைத் தோணியாக ஏற்றியவர். பிரும்மா, விஷ்ணு, இந்திரன், அகஸ்தியர், வசிஷ்டர், பூஜித்தது. ஆவணித் திருவாதிரையில், ஆதிசைவப் பிராமணமரபில் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருதித்தது. (3) வயதில், சித்திரைசஷ்டியில் அம்மன் சந்நிதியில், பார்வதியால் கொடுத்த, ஞானமுலைப் பாலையுண்டு, இந்த ஸ்தலத்திலும், இன்னமனேகஸ்தலங்களிலும், பதிகம்பாடி (16) வயதில் திருப்பெருமண ஸ்தலத்தில் ஜோதியி லைக்கியமானார். கணநாதநாயனார் முக்திஸ்தலம். சூராதிகளுக்குப் பயந்து, இந்திரன், ஒளிந்து, இதில் பூஜித்து நந்தவனம் காய்த்ததால் விநாயகரைத் துதித்துக் குடகுமலையில் அகஸ்தியரிடமிருந்த காவேரிநதியைக் கணபதியால் கொண்டுவந்தது ஒளித்திருந்த இந்திராணியைச் சூரபத்மன் சகோதரியான அஜாமுகியெடுக்கக், காவலாயிருந்த மகாகாளரால், அஜாமுகியின்கை வெட்டுண்டது. (4000) பிராமணர்கள் பூஜிக்கும் ஸ்தலம். மாணிக்கவாசகர் பாடியுள்ளது. சங்கரனாதராகிய சுகாதினமூர்த்தியுமுண்டு. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-67, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-3 சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1, ஆக பதிகம்-71. சீர்காழி ரெயில்ஸ்டேஷன்.

16 சீர்காழி கோவிலில் தோணீசர், திருநிலைநாயகி, புதன் பூஜித்தது,

17 ஷை கோவிலில் சட்டநாதர், உமை.

18 ஷை கோவிலுக்கு மேல்புறம் தெருவில் சிவஸ்தலம் சோமேசர், உமை திருஞானசம்பந்தர் தகப்பனார் பூஜித்த லிங்கம்

19 நாகளேசுவரம்:—ஷை கோவிலின் வடமேற்கு சீர்காழி டவுனில், உள்ளது. சிவஸ்தலம். நாகேசர், மலைமங்கை, ராகு பூஜித்தது, திருநாவுகரசுனர் நாயதாண்டக வைப்புஸ்தலம்.

20 செம்பங்குடி:—சீர்காழியின் வடகிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். நாகேசர், கற்பூரவல்லி, கேதுபூஜித்தது. திருநாவுக்கரசுநாயனர் திருத்தாண்டகத்து வைப்புஸ்தலம்.

21 மணிக்கோவில்:—என்பது (மணிக்கிராமம்) சீர்காழியின்கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவன், உமை, ஆலக்கோவில், திருநாவுக்கரசு நாயனர், திருத்தாண்டகத்து வைப்புஸ்தலம்.

22 மாதாநம்:—சீர்காழியின் வடக்கு 4-மைலில் உள்ளது. சிவன், உமை, திருநாவுக்கரசு நாயனர் க்ஷேத்திரக்கோவை வைப்பு ஸ்தலம்.

23 கோண்டல்:—என்பது (வள்ளுவக்குடி) சீர்காழியின் மேற்கு 3½-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தாரகப்பரமேசர், உமை, முருகர், வள்ளி, தெய்வானை, சரவணசரஸ், முருகர் பிரும்மாவைப் பிரணவங்கேட்டுச் சிறையிலிட்டதால், பிரும்மாவைவிடுவிக்க, விஷ்ணுசிவனை வேண்டி, சிவன், முருகரைத் தாரகோபதேசங் கேட்டு, பிரும்மாவை விடுவித்தஸ்தலம். இதில் கொண்டல்வண்ணனுக, விஷ்ணுவுமிருக்கிறார். சுந்தரமூர்த்தி நாயனர் வைப்புஸ்தலம்.

24 திருக்கோலக்கா:—என்பது (தாளமுடையார்கோவில்) சீர்காழியின் தெற்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சப்தபுரீசர், ஓசைகொடுத்தநாயகி, ஆநந்ததீர்த்தம், சூரியதீர்த்தம் திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனருக்கு சுவாமி பொன்தாளமும், அம்மன் ஓசையுங் கொடுத்தார்கள், சூரியன்பூஜித்தது

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனர் பதிகம்-1. ஆக பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனர் வைப்புஸ்தலம்.

25 திருப்புள்ளிருக்கும்வேளூர்:—என்பது (வைத்தீசுவரன் கோவில்) சீர்காழியின் தெற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வைத்தியநாதர், தையலாம்பாள், சித்தாமிருதம், வேப்பமரம், முத்துக்குமாரதேவர் இதில் பூஜித்துச் சக்தி என்னும் வேலாயுதமடைந்தார். சடாயு சம்பாதிபூஜித்து, ரிஷிசாபம் நீங்கினது. அகஸ்தியர், வசிஷ்டர், வேதங்கள், சூரியன், ராமர், லக்ஷுமணர், தேவர்களும்பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-2, ஆகபதிகம்-3. வைத்தீசுரன்கோவில் ரெயில்ஸ்டேஷன்.

26 திருக்குருகாவூர்:—என்பது (திருக்கடாவூர்) சீர்காழியின் தென்கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், வெள்ளிடையீசர், காவியங்கண்ணி, வெள்ளிடைத்தீர்த்தம், சிவபெருமான், தைஅமாவாசையில் திருஞானசம்பந்தருக்குத் தாகசாந்தி செய்வித்த கூபம், சிவன் இதின்வடக்கு ஒருமைல் சென்று சுந்தரமூர்த்திக்குச் சித்திராபருவத்தில் கட்டமுது கொடுத்து ஆலயத்துக்குப் பிராமணரூபத்துடன் அழைத்து வந்து மறைந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1, சுந்தரமூர்த்திநாயனர் பதிகம்-1 ஆக பதிகம்-2. திருநாவுக்கரசுநாயனர் வைப்புஸ்தலம்.

27 திருக்கலிக்காமூர்—என்பது (அன்னப்பம்பேட்டை) சீர்காழியின் தென்கிழக்கு 5-மைலில்உள்ளது. சிவஸ்தலம், சுந்தரேசர், சுந்தரகுசாம்பாள், அம்புவித்தீர்த்தம்,பராசரதீர்த்தம் வசுராஜனுக்குப்பிறந்து, தாசராஜனிடம் வளர்ந்து, யமுநதியில் ஓடம்விட்ட, துற்நாற்றமுள்ள, மச்சகந்தியைப் பரி

மளகந்தியாக்கி, அவளுடன் நதிமத்தியில், திடலில் சேர்ந்து, வேதங்களையும், புராணங்களையும். சிக்கறுத்த வியாசரை உண்டுபண்ணின வசிஷ்டரது பௌத்திரரான, பராசரரிஷி பூஜித்தஸ்தலம். சந்திரன்பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் பதிகம்-1.

28 கஞ்சாறு என்பது (ஆநந்த தாண்டவபுரம்):—சீர்காழியின் தெற்கு 9-மைலிலுள்ளது. சிவஸ்தலம், பரத்துவாஜேசசர், கலியாணசுந்தரி, பாரிஜாதவனம், தினம் காலையில் சேதுஸ்நானமும், அர்த்தயாமத்தில் சிதம்பரத்தில் நடராஜர் தரிசனஞ் செய்துவந்த, ஆநந்த மகாமுனிவர் ஒருநாள் தரிசனத்துக்குச் செல்லுங்கால், பெருமழைபால் தடை நேர, வருந்தி உயிர்விடத் தொடங்குகையில், இந்த ஸ்தலத்தில் அவர் முகத்திற்குநேரே நடராஜர் திருவடியை நீட்டித் தாண்டவஞ் செய்து, காத்தருளிய முகமண்டல ஆநந்ததாண்டவசபேசர் முக்கியம். மாநக்கஞ்சாற நாயனுர் இதில அவதரித்துத்தம் குமாரி புண்ணியவர்த்தினியின் கூந்தலை மாவிருத வேடமாக வந்த சிவனுக்குப் பஞ்சவடிக்காக அவர் கேட்டபடி கொடுத்து முக்தியடைந்தார். அப்பெண்ணுக்குச் சிவனருளால் கூந்தலுண்டாகி, கலிக்காம நாயனுரிதில் விவாகமுஞ் செய்து கொண்டார், 12-அத்தியாயங்களுள்ள ஸ்தலபுராணமுண்டு. திருநாவுக்கரசு நாயனுர் க்ஷேத்திரக்கோவையிலுள்ள வைப்புஸ்தலம். ஆனைதாண்டவபுரம் ரெயில் ஸ்டேஷன்.

29 திருநின்றியூர்:—ஆநந்ததாண்டவபுரத்தின் வடகிழக்கு 2 மைலிலுள்ளது. சிவஸ்தலம், மகாலக்ஷுமீசர், உலகநாயகி, நீலமலர்ப்பொய்கை, லக்ஷுமீதீர்த்தம், மகாலக்ஷுமி பூஜித்தது, ஜலந்தராசுரன் பாரி பதிவிருதையான பிருந்தையுடன், அவள் புருஷனுகிய ஜலந்தராசுர வேஷத்துடன், பிருந்தை அறியாமல், அவளை ஏமாற்றிப் புணர்ந்து, ஜலந்தரனைச் சிவ

னைக் கொண்டு கொல்லுவித்த பாபம் நீங்க, மகாவிஷ்ணுவும் இதில் பூஜித்தார். திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தர மூர்த்தி நாயனார் பதிகம்-2. ஆ. பதிகம்-4.

30 திருக்கண்ணார்கோவில்:—என்பது (குருமாணக்குடி) ஆநதாண்டவபுரத்தின் வடகிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கண்ணாயிரேசர், முருகுவளர்கோதை, மணிகர்ணிகைநதி, இந்திரதீர்த்தம், கௌதமர்பத்நி அகலிகையுடன், மாறுவேஷத்துடன், இந்திரன்புணர்ந்ததால், கௌதமரிஷியால், தேகமெங்கும், ஆயிரம்யோநியாகும் படிசாபமடைந்து, இதில் சிவனைபூஜித்ததால், இந்திரன் அடைந்தசாபமும், பாபமும்நீங்கி, ஆயிரம்கண்ணாக அடைந்தான். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

31 திருக்கடைமுடி:—என்பது (கீழையூர்) ஆநதாண்டவபுரத்தின் தென்கிழக்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கடைமுடிநாதர், அபிராமவல்லி, கடைமுடிதீர்த்தம், கருணைதீர்த்தம், பிரும்மாபூஜித்தது, திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. அப்பரும் சுந்தரரும் வைப்புஸ்தலம்.

32 நாங்கூர்:—வைத்தீசுவரன்கோவிலின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். மதங்கேசுவரர், மையாடுகண்ணி பழங்காவேரிஎன்னும் மணிகர்ணிகை, மதங்கரிஷியாசிரமம், மதங்கரிஷி தவத்தையழிக்க மோகிநிரூபம்கொண்டு வந்த விஷ்ணுவும் இதிலிருக்கிறார். பட்டினத்தாரிடம் கணக்கராயிருந்தசேந்தனார் இதிலவதரித்து, திருவாதிரையில் களிநிவேதநஞ்செய்து, பாடி, சிதம்பரத்தில்முக்தியடைந்தார், கீழ்புறமும் மேல்புறமும்நந்தி சுந்தரமூர்த்திநாயனார் திருநாட்டுத்தொகை வைப்பு ஸ்தலம்.

33 ஷை நாங்கூர். (திருத்தேற்றியம்பலம்) என்று பாடியுள்ளது.) விஷ்ணுஸ்தலம். செங்கண்மால், செங்கமலவல்லி, சூரிய புஷ்கரிணி, புஜங்கசயநம், செங்கமலவல்லி நாச்சியாருக்கும் மதங்கரிஷிக்கும் அநந்தனுக்கும்பிரத்தியக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களாசாசநம், அடியில்கண்ட ஆறு விஷ்ணுஸ்தலங்களு மிதிலுண்டு.

34 மணிமாடக்கோவில்:—என்பதும் நாங்கூரில், விஷ்ணுஸ்தலம், நாராயணர், நந்தாவிளக்குப்பெருமாள், புண்டரீகவல்லி, இந்திரபுஷ்கரணி, ருத்திரபுஷ்கரணி, ஏகாதசருத்திரருக்கும், இந்திரனுக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

35 செம்பொன்செய் கோவில்:—என்பதும் நாங்கூரில் விஷ்ணுஸ்தலம், பேரருளாளப்பெருமாள், அல்லிமாமலர்நாச்சியார் கனகதீர்த்தம், நித்யபுஷ்கரணி, ருத்திரனுக்குப்பிரத்தியக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். பெ. 96. 4. 3.

36 அரிமேயவிண்ணகரம்:—ஷை நாங்கூரில் விஷ்ணுஸ்தலம், குடமாடுகூத்தப்பெருமாள், அமிருதகடவல்லி, கோடிதீர்த்தம் அமிருததீர்த்தம், உதங்கரிஷிக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

37 வைகுண்டவிண்ணகரம்:—விஷ்ணுஸ்தலம், நாங்கூரில் வைகுண்டநாதர், தாமரைக்கண்ணுடையபிரான், வைகுண்டவல்லி, லக்ஷ்மிபுஷ்கரணி, உதங்கபுஷ்கரணி, விரஜாநதி, உபரிசரவசுராஜனுக்கும் உதங்கரிஷிக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

38 வன்புருஷோத்தமம்:—என்பதும் நாங்கூரில் விஷ்ணுஸ்தலம், புருஷோத்தமப் பெருமாள், புருஷோத்தமநாயகி, திருப்பாற்கடல் தீர்த்தம் உபமந்யுரிஷிக்குப் பிரத்தியக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம், நாங்கூர் சிறுகிராமம். காஞ்சிபுரம்போல் விஷ்ணுஸ்தலமதிகம்.

39 திருமணிக்கூடம்:—நாங்கூரின் கிழக்கு 7-மைலில் உள்ளது, விஷ்ணுஸ்தலம், மணிகூடநாயகர், திருமாமகள் நாச்சியார், சந்திரபுஷ்கரணி, பெரியதிருவடிக்கும் சந்திரனுக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்.

40 திருத்தேவனார்தொகை:—என்பது (கீழச்சாலை) நாங்கூரின் வடக்கு 2-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், தெய்வநாயகப்பெருமாள், கடல்மகள்நாச்சியார், சோபனபுஷ்கரணி, தேவசபாபுஷ்கரணி, வசிஷ்டருக்குப்பிரத்தியக்ஷம் திருமங்கையாழ்வார்மங்களாசாஸனம்.

41 திருக்காவளம்பாடி:—நாங்கூரின் வடக்கு 1-மைலிலுள்ளது, விஷ்ணுஸ்தலம், கோபாலகிருஷ்ணர், மடவரல்மங்கை, செங்கமல நாச்சியார், தடவரப்பொய்கை, சேனைத்தலைவருக்கும் மித்திர தேவருக்கும் ருத்திரருக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

42 பார்த்தன்பள்ளி:—நாங்கூரின்தெற்கு 2-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம், தாமரையாள் கேள்வன், தாமரை நாயகி, நாராயண விமாநம், சங்கரஸரஸ், மேற்கே திருமுகம், நின்ற கோலம் பார்த்தனுக்கும் வருணனுக்கும் ருத்திரருக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

43 திருவேள்ளக்குளம்:—நாங்கூரின் வடமேற்கு 1-மைலில் உள்ளது, விஷ்ணு ஸ்தலம், கண்ணன் நாராயண மூர்த்தி, பூவார்திருமகள் நாச்சியார், வெள்ளக்குளத் தீர்த்தம், இக்ஷ்வாகுவம்ச ராஜனான சுவேத ராஜனுக்கும், ருத்திரருக்கும், காவேரிக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். 33-முதல் 43-வரையில் உள்ள ஸ்தலங்களும் திருவாலி திருநகரியான 77வதுலெக்கஸ்தலமும் சேர்ந்த 12-திவ்ய தேசங்களிலும் உற்சவம் முக்கியம்.

44 கீழத்திருக்காட்டுப்பள்ளி:—நாங்கூரின் தெற்கு 1-மைலி லுள்ளது. சிவஸ்தலம், ஆரண்யசுந்தரர், அகிலாண்ட நாயகி, அமிருதப் பொய்கை, காவேரியும், இந்திரனும், தேவர்களும் பூஜித்தது. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1.

45 திருவெண்காடு:—நாங்கூரின் தென்கிழக்கு 1-மைலிலுள் ளது. சிவஸ்தலம், சுவேதாரணியேசர் பிரும்ம வித்தியாம்பாள் மணிகர்ணிகாநதி, காவேரி, சூரியதீர்த்தம், சந்திரதீர்த்தம், அக்நிதீர்த்தமாகிய திருநேத்திரமுக்குளம், வடவாலமரம், கொன்றைமரம், காவேரி சமுத்திர ராஜனைக் கலியாணம் செய் திருவரும் பூஜித்தது. சுக்கிரன், இந்திரன், அகஸ்தியர், வசிஷ் டர் புதனிவர்கள் பூஜித்தது. அயோத்தியி லரசாண்ட சுவேத ராஜன் பூஜித்து, இயமதருமராஜனால் தான் பிடிபடும்போது, சிவனால்யமனுதைக்கப்பட்டு, பின்னவனையும் எமனையுமெழுப்பி அனுக்கிரகித்தஸ்தலம். திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-3. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. சுந்தர மூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆ பதிகம்-6.

46 ஷை கோவிலில். அகோரவீரபத்திரர், நர்த்தனஞ்செய் கிறார். எதிரில் காளியும் நர்த்தனஞ்செய்கிறாள். சிவனை யுதைக் காமலும் தாக்ஷாயணியை அவமதித்தும்செய்த, தக்ஷயாகத் தை யழித்து, தேவர்களை ரட்சித்துத் தக்ஷனைக் கொன்ற வீரபத்திரர். இதில் ஐராவதம்தபசுசெய்து பூஜித்து, தாரகா சுரன் ஒடித்த கொம்புகளைப் பெற்றது பட்டினத்தாரான திருவெண்காட்டடிகளென்னும் பக்தர் பக்தியாய்ப்பாடியது.

47 ஷை கோவில். அம்மன்சந்நிதியில் அக்ஷயவடலிங்கேசர் உமை, இதில் பித்ருதற்பணமும் தானமுஞ்செய்தால் அக்ஷய்ய பலனைத்தரும்.

48 திருச்சாய்க்காடு:—திருவெண்காட்டின் தெற்கு 1-மை லில் உள்ளது. சிவஸ்தலம். சாயாவனேசர், குயிலினும் நன்

மொழியம்பாள், சூரியபுஷ்கரிணி, காவேரி, சங்கமம், உபமன்னியுரிஷி பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. ஆக பதிகம்-4.

49 திருப்பல்லவனீசுவரம்:—என்பது (காவேரிப்பூம்பட்டிணம்) திருவெண்காட்டின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம் பல்லவனப்பூர்ணேசர், சௌந்தரநாயகி, காவேரிசமுத்திரசங்கமம், பட்டினத்தாரென்னும் ஞானவாணிகிலுதித்துத் தனக்கீல வாரிக்கொடுத்த, ஒருதனியுடன் வெளிப்பட்டு, அநேகஸ்தலங்களில் பாடித்திருவொற்றியூரில் சிவபதமடைந்தார். இயற்பகைநாயனாரிதில் தபசிகளுக்கு வேண்டியதை யளித்து வரும்போது, சிவன்தவவேஷம் பூண்டு, நாயனாரின் பாரியைக்கேட்க, சக்கேதாஷமாய்க் கொடுத்து, தடுத்தபக் துக்களையும் அடித்து, மடித்த, நாகேனதுணைபோனதால், சிவன்காக்ஷிதந்து, இருவருஞ் சிவபதமடைந்தார்கள். பல்லவராஜனும் அகஸ்தியரும் பூஜித்தஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2.

50 ஷை காவேரிப்பட்டிணம் சிவஸ்தலம், சங்கமுகேசர், சௌந்தராம்பாள், சாவேரிசமுத்திரத்தில் சேரு மிதில் ஸ்நானமும், பிதுருதர்ப்பணமும், தானமும் முக்கியம்.

51 நெய்தல்வாயல்:—திருவெண்காட்டின் வடக்கு 3-மைலிலுள்ளது. சிவஸ்தலம், முகிவாசகர், மதுரநன்மொழிநாயகி, மணிகர்ணிகை, சமுத்திரசங்கமம், திருநாவுக்கரசு நாயனார் அடைவுத் திருதாண்டகத்து வைப்புஸ்தலம்.

52 திருநீடூர்:—மாயூரத்தின் வடமேற்கு 2-மைலில் உள்ளது சிவஸ்தலம், அருட்சோமநாதர், வேயுறுதோளியம்மை, செங்கழுநீர்ஓடை, சிவதீர்த்தம், மகிழவரம், மகிழவனம் இந்திரன் பூஜித்தது. முனையடுவார் நாயனாரென்னும் வேளாளர் இதிலு

இத்துக் கூலிக்குவேலைசெய்து சிவனடியார்களுக்கு அமுதூட்டிச் சிவபதமடைந்தஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனர் பதிகம்-1· அப்பர் 54-வது இலக்கஸ்தலத்தில் சேர்த்துப்பாடியது. திருவீழூர் ரெயில் ஸ்டேஷன்.

53 திருவன்னியூர்:—என்பது (பொன்னூர்) மாயூரத்தின் வடமேற்கு 2-மைலில் உள்ளது, சிவஸ்தலம், ஆபத்சகாயர், பிருகந்நாயகி, சிவகங்கை, வருணன் பூஜிந்தது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-1. ஆக பதிகம்-2.

54 திருப்புன்கூர்.—வைத்தீசுரன்கோவிலின் மேற்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவலோகநாதர், சொக்கநாயகி, சிவகங்கை, ரிஷபதீர்த்தம், ஆதனூர்ப் புலையரான நந்தனர் இதில் தரிசிக்க. சிவன் நந்தியைச்விலகச்செய்து, தரிசனமளித்தார். நந்தனர் குளம்வெட்டப் பிள்ளையாரும், சிவகணங்களுங் கூலியாளாகி, வெட்டியஸ்தலம். ஏயர்கோன் கலிக்காமநாயனர், தியாகராஜரைக் கமலினியிடம் தூதுவிட்ட சுந்தாரிடம், கோபமாயிருப்பதைச் சமாதானஞ்செய்யக் கலிக்காமருக்குச் சூலைநோயைச் சிவன்ஏவ, நோயைநீர்க்கும்படி சுந்தரருக்குச் சிவன்சொல்லச் சுந்தரரின் வரவுதெரிந்த கலிக்காமன் வயிறைக்கீறி உயிர் விடவும், சுந்தரரும் இவரிடம் வந்துதானுமுயிர்விட எத்தனிக்க சிவன் இவரைப்பிழைப்பித்து, இருவரும் சிநேகமாகி, இதில் கலிக்காமர், அநேகத்திருப்பணிகள் செய்து சிவபதமடைந்தார். மழையின்றி வருந்தியகாலத்தில் கலிக்காமருக்காக, மழைபெய்வித்தார், திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-1, சுந்தரமூர்த்திநானர் பதிகம்-1. ஆக பதிகம்-3.

55 சாத்தங்குடி:—வைத்தீசுவரன் கோவிலின் மேற்கு 3½-மைலிலுள்ளது. சிவஸ்தலம், விசுவநாதர், விசாலாக்ஷி, சிவகங்

கை, தேவஸ்தானகிராமம், திருநாவுக்கரசு நாயனார் திருவாரூர்த் திருத்தாண்டகத்திலுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

56 திருவேள்விக்குடி:—குற்றாலத்தின் வடகிழக்கு 3-மைலிலுள்ளது. சிவஸ்தலம், கலியாண சுந்தரர், பரிமள சுகந்த நாயகி, மங்களநாயகி, மங்களதீர்த்தம், கலியாண தீர்த்தம், சோழராஜகுமாரனுக்குச் சிவன் கலியாணஞ் செய்து அநுக்கிரகித்தஸ் தலம், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்1 சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1 ஆக பதிகம்-2. அப்பர் வைப்புஸ்தலம்.

57 திருஎதிர்கொள்பாடி என்பது (மேலத்திருமணஞ்சேரி) வேள்விக்குடியின் கிழக்கு 1-மைலிலுள்ளது, சிவஸ்தலம், ஐராவதேசா, மலர்க்குழல்நன்மாது, சிவகங்கை, ஐராவத தீர்த்தம் ஐராவதம் பூஜித்தஸ் தலம், சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

58 திருக்கீழத்திருமணஞ்சேரி:—வேள்விக்குடியின் கிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அருள்வள்ளநாயகர் யாழின்மொழிநாயகி, மன்மததீர்த்தம், மன்மதன் தேகமடைந்து பூஜித்தஸ்தலம், ஆவை பூஜித்து, வைசியமாணிடனாகித் தான்கோறின பெண்ணை விவாகஞ்செய்தது. குலச்சிறைநாயனாரிதிலுதித்துச் சிவனைத் துதித்து மதுரைப் பாண்டியனிடம், மந்திரியாகி, திருஞானசம்பந்தரினருள் பெற்றுச் சிவபதமடைந்தார் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

59 திருக்கருப்பறியலூர்:—என்பது (தலைஞாயிறு) வைத்தீசுவரன்கோவிலின் மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். குற்றம்பொறுத்தீசர், கோல்வளையம்பாள், இந்திரதீர்த்தம், சிவகங்கை, இந்திரன் பூஜித்தது, கொகுடிக் கோவிலாகிய,

இதில் தேவாரத்தில், அந்தணர்களைச் சிறப்பித்துப்பாடியுள்ளது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

60 திருக்குறுக்கை:—வைத்தீசுவரன் கோவிலின் தென் மேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வீரட்டானேசர், ஞானாம்பிகை, சூலதீர்த்தம், சிவகங்கை, காமாங்கநாசனி சபை, அகஸ்தியர், வசிஷ்டர், மார்க்கண்டேயர் பூஜித்தது. சிவன்காமதகனஞ் செய்ததாகப் புராணமுள்ளது. அஷ்டவீரத்திலொன்று திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-2. சுந்தரர் வைப்புஸ்தலம்.

61 திருக்குரக்குக்காவில்:—வைத்தீசு வரன்கோவிலின் வட மேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கொந்களேசர், கொந்தளாம்பாள், வேம்பு, சுந்தரதீர்த்தம், அநுமத்தீர்த்தம், அநுமார்பூஜித்தது. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

62 திருவாட்கோளிபுத்தூர்:—என்பது (வாழப்பூர்) வைத்தீசுவரன் கோவிலின் மேற்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம் மாணிக்கவண்ணேசர், வண்டார்பூங்குழலி, பிருமதீர்த்தம், மாணிக்கதீர்த்தம், அரதநபுரம், மகாவிஷ்ணு மாணிக்கத்தை லிங்கமாகவைத்துப் பூஜித்தது. விஜயன்பூஜிக்க, சுவாமி அவன் கைவாளைஒளித்தார், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-3. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

63 திருமண்ணிப்படிக்கரை:— என்பது (இலுப்பைப் பட்டி) நீலகண்டேசர், அமிருதகரவல்லி, வைத்தீசுவரன் கோவிலின் மேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அமிருத தீர்த்தம், க்ஷீராப்தியில், அமிருதங் கடையும் போது, வாசுகி கக்கின விஷத்தைச் சிவன் புசித்ததும், அம்பிகை அமிருதக் கையால், கழுத்தைத்தொட்டதால், கழுத்தில்தங்கி நீலகண்ட

ரானர். சிவன் உதரத்தில், அனேக அண்டங்களிருப்பதைச் சக்திதெரிந்து, விஷத்தைசசிவனுட் புகாமல்தடுத்தாள் சுந்தரமூர்த்திநாயனர் பதிகம்-1. அப்பர் வைப்புஸ்தலம.

64 கானாட்டுமுள்ளூர்:—சீர்காழியின் வடமேற்கு 6-மைலி லுள்ளது. சிவஸ்தலம், பதஞ்சலிநாதர், கோல்வளைக்கையம் பாள், பதஞ்சலிபுஷ்கரணி, சிவதீர்த்தம், கொள்ளிடம், பதஞ் சலிமுனி பூஜித்தஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனர் பதிகம்-1.

65 திருநாரையூர்:—சீர்காழியின் வடமேற்கு 6-மைலில் உள் ளது. சிவஸ்தலம, சுந்தரேசர், திருபுரசுந்தரி, காருண்யதீர்த் தம், திருக்குளம், கொள்ளிடம், புன்னாகம், துர்வாசரால் நாரையாய் சாபமடைந்த கந்தருவன் இதில் பூஜித்துச் சாபம் நீங்கினது. நம்பியாண்டார் நம்பி, இதிலுள்ள கணபதியைப் பூஜித்துச் சிதம்பரத்தில் மறைந்திருந்த தேவாரங்களெழுதப் பட்ட ஏடுகளை கண்டெடுத்து ஞானமும், முக்திபுமடைந்தார். அதிலனேக ஏடுகளைக் கறையானரித்தன. திருஞானசம்பந்த மூர்த்திநாயனர் பதிகம்-3, திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-2. ஆக பதிகம்-5.

66 திருமேலக்கடம்பூர்:—சீர்காழியின் வடமேற்கு 11-மை லில் உள்ளது. சிவஸ்தலம், அமிருதககடேசர், சோதிமின்னம் மை, அமிருததீர்த்தம், கொள்ளிடநதி, இந்திரன் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1, திருநாவுக்கரசு நாயனர் பதிகம்-2. ஆக பதிகம்-3. சுந்தரமூர்த்திநாயனர் வைப்புஸ்தலம்.

67 கடம்பையிளங்கோவில்:—என்பது (கீழக்கடம்பூர்) சீர் காழியின் வடமேற்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, திருநாவுக்கரசுநாயனர் க்ஷேத்திரக்கோவையி லுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம்.

68 திருஓமாம்புலியூர்:—சீர்காழியின் வடமேற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், துயரம்தீர்த்தாசர், பூங்கொடிநாயகி, கொள்ளிடநதி, துரத்திவந்த புலிக்குப் பயந்து, வில்வமரத்தி

லேறிய வேடன், பயத்தால் தூங்காமல், இராத்திரிமுழுவதும் வில்வத்தைப்பறித்துப்போட, மரத்தடியிலிருந்த லிங்கத்தின் மீது, சிவராத்திரியாகிய அன்று அருச்சனையான பிரபாவத்தால், கண்விழித்த புலிக்கும், உபவாசத்துடன் கண் விழித்து, வில்வமுதிர்த்த வேடனுக்கும் காக்ஷிதந்து, சிவபதமளித்தார். அந்தணர்களின் பெருமையை யிருவருந்தேவாரத்தில் பாடியுளார். பதிகம்-2.

69 வடதளி:—ஓயாம்புலியூரின் கிழக்கு 1-மைலில் உள்ளது சிவஸ்தலம், வடதளிநாதர், வடதளிநாயகி, 68, 69 இரண்டுக்கும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1.

70 திருப்பந்தணநல்லூர்:—வைத்தீசுரன் கோவிலின் தென்மேற்கு 10-மைலில் உள்ளது. சிவஸதலம், பசுபதீசர், மணவாளநாயகி, காம்பனதோளி, பசுதீர்த்தம், கொன்றை, சிவன் மணவாளக்கோலத்துட னிருக்கிறார். காமதேநு பூஜித்தது. அம்பாள்சந்நிதி வடக்கு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1.

71 திருமங்கலக்குடி:—ஆடுதுறைக்குவடக்கு 2-மைலிலுள்ளது. பிராணவரதேசர், மங்களநாயகி, காவேரிநதி. மங்களதீர்த்தம், கோங்கிலவமரம், அகஸ்தியர், மகாகாளி, சூரியன், விஷ்ணு பிரமன் பூஜித்தது. அரசரின் வரிப்பணத்தால் திருப்பணிசெய்த சிவபக்தர், பயந்து உயிர்விடப் பதிவிரதையான அவர் மனைவியின் வேண்டுதலின்படி மங்களநாயகி அவருக்கு, உயிர்தந்த ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1, ஆக பதிகம்-2.

72 திருக்கஞ்சனூர்:—மங்கலக்குடியின் கிழக்கு 1-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அக்நீசர், கற்பகநாயகி, காவேரி அக்நிதீர்த்தம், புரசமரம், வைஷ்ணவராகிய அரதத்தாசாரியார், சிவன்பெரியவனென்று, அக்நியில்நின்று, சித்தாந்தம், செய்தஸ்தலம். அக்நி பிருமா, இந்திராதி தேவர்கள், வசிஷ்டர்,

அகஸ்தியர் பூஜித்தது. திருநாவுக்கரசுநாயனர் பதிகம்-1, சுந்தரமூர்த்திநாயனர் வைப்புஸ்தலம்.

73 ஷிகஞ்சனூர். விஷ்ணுஸ்தலம். சுந்தரராஜப்பெருமாள் ஸ்ரீதேவி, பூதேவி, காவேரிபூஜித்தது.

74 திருவாலங்காடு:—மங்கலக்குடியின் தென்கிழக்கு 2-மைலிலுள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, காவேரி, புராணமுண்டு.

75 திருக்கோடிக்காவல்:—மங்கலக்குடிக்கு கிழக்கு2-மைலிலுள்ளது. சிவஸ்தலம். கோடீசர், வடிவாம்பாள், காவேரி, அகஸ்தியதீர்த்தம். அகஸ்தியர், வசிஷ்டர், மூன்றுகோடிரிஷிகள் பூஜித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனர் பதிகம்-3. ஆக பதிகம்-4.

76 விளத்தோட்டி:—மங்கலக்குடியின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பிரும்மபுரீசர், இக்ஷுரஸநாயகி, பிரும்மதீர்த்தம். இந்திரன், பிரமன்பூஜித்தது, இக்காலத்து மிதில் பைத்தியம் முதலிய, கொடியரோகங்களும் நிவர்த்தியாகிறது. திருநாவுக்கரசுநாயனர் க்ஷேத்திரக்கோவையின்வைப்புஸ்தலம்

77 திருவாலிதிருநகரி:—இரண்டு ஸ்தலம். நாங்கூருக்கு வடக்கு 2-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். வயலாலிமணவாளன், நரசிம்மசுவாமி, அமிருதகடவல்லி, அலாதனிபுஷ்கரிணி, மேற்கேதிருமுகம். அலாதநிஜங்கம பிரஜாபதிக்கும் திருமங்கையாழ்வாருக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார்மங்களாசாஸனம். திருவாலியின் வடகிழக்கு 2-மைலில் திருநகரியும், அதில் மணவாளன்சந்நிதியும், திருமங்கையாழ்வார்சந்நிதியும், இருக்கின்றன. நாங்கூர் 12-ஸ்தலத்தில் இதுவுமொன்று, இதிலரசாண்ட திருமங்கையாழ்வார், நாங்கூர் 12-திவ்யதேசங்களும், இன்னுமனேகஸ்தலங்களும்பாடி, ஸ்ரீரங்கஸ்தலத்திலும், தான்களவுசெய்த பொன்னுலியற்றிய புத்தவிக்கிரகத்தை, அழித்துத்திருப்பணிகளுஞ்செய்தார்இதினடுத்த, குறையலூர், திருமங்கையாழ்வார் ஜனித்தஸ்தலம்.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# எட்டாம் அத்தியாயம்.

## சேரநாடு, மலைநாடு, கொங்குநாடுகள்.

### கந்தர்ஸ்தலம்.

1 திருஆவினன்குடி:—என்பது (பழனி) மலைபடிவாரம் திண்டுக்கல் ஸ்டேஷனுக்கு மேற்கு 33-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பசுபதீசர், பார்வதி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, வையாபுரிக்குளம், காமதேநு, சூரியன், இலக்ஷ்மி, இந்திரன் பூஜித்தது. மாம்பழம் கிடைக்காததால் சுப்பிரமணியர் கோபத்துடன் தங்கிய ஸ்தலம். திண்டுகல்லிலிருந்து மோட்டார் ஸர்விஸ் இருக்கிறது.

2 பழனிமலைமேல் சிவஸ்தலம், சிவன், உமை, தண்டாயுதபாணி, சூராதிகளைக்கொன்றபின் இந்திராதிதேவர்களுக்கும் அகஸ்தியருக்கும், பிரத்தியக்ஷம். மேற்குசந்நிதியானதால், மலையாளம், பாலக்காடு, மிகச்செழிப்புள்ளது.

3 பழனிப்பட்டிணம் சிவஸ்தலம், பரமேசர், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, ஷண்முகநதி சத்திரங்களுண்டு.

4 கலயம்புத்தூர்:—பழனியின் மேற்கு 2-மைலில் உள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, பெரிய அக்கிரகாரம்.

5 கணையூர்:—என்பது (கொழுமம்) பழனியின் மேற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சோமேசர், பிருகதம்பாள், கிருஷ்ணய்யரால் ஏற்பட்டது பிரும்மோற்சவமும நடக்கிறது. இப்பவும் ஷைவார் புத்திரர்கள் வித்துவான்களுக்குப் பரிசளிக்கும் தருமசீலர்கள்.

6 உடுமலைப்பேட்டை:—பழனியின் மேற்கு 2-மைலில் உள்ளது. சிவன், உமை, பெருமாளும் முக்கியம்.

7 குழந்தைவேலர்மலை:—பழனியின் கிழக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கிரீசர், அம்பிகை, குழந்தைவேலராகிய சுப்பிமரணியர் முக்கியம்.

8 பொல்லாச்சி:—உடுமலைப்பேட்டையின் மேற்கு 16-மைலில் உள்ளது. சிவன், உமை, பெருமாளும் முக்கியம்.

9 கல்ப்பாத்தி:—பொல்லாச்சியின் மேற்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விசுவநாதர், விசாலாக்ஷி, பகவதி முக்கியம்.

10 பாலக்காட்டு அக்கிரகாரம்:—பொல்லாச்சியின் மேற்கு 17-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கௌரீசர், கௌரி, பகவதியும் பெருமாளும்முக்கியம். அக்கிரகாரங்கள் ஜாஸ்தி. பாலக்காடு ரெயில்ஸ்டேஷன்.

11 கோடக்கானல்மலை:—என்பது (யானைமலை) பழனியின் தென்மேற்கு 28-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, அருவி

12 அகஸ்தியர்மலை:—கொல்லத்தின் கிழக்கு 30-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அகஸ்தியேசர், பார்வதி, பொதியமாமலை, மலயமலை, திருகூடமலை. மகேந்திரபருவதம், அகஸ்தியர் ஆசிரமம். திருநாவுக்கரசுநாயனர் திருப்பதிக வைப்புஸ்தலம்.

13 திருவநந்தபுரம்:—கொல்லத்தின் தெற்கு 40-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், அநந்தபத்மநாபமூர்த்தி, ஹரிலெக்ஷுமிகாச்சியார், மத்ஸ்யதீர்த்தம், சமுத்திரம், ஹேமகூடவிமானம், கிழக்கேதிருமுகம். கையில் சிவலிங்கத்துடன் புஜங்கசயனம். நாபியில் பிரும்மாவையுடைய பெரியமூர்த்தி, மூன்றுசந்நிதி, ருத்திரருக்கும், சந்திரனுக்கும், இந்திரனுக்கும், பரசுராமருக்கும், பிரத்தியக்ஷம். நம்மாழ்வார், பெரியாழ்வார், மங்களாசாஸனம், ஸ்வயதருமராஜாங்கம் ஒற்றைக்கால் மண்டபமும், கிருஷ்ணன்கோவிலும், ஹிரண்யனைக் கொன்ற நரசிம்மர் கோவிலும, பிரபலம். தாம்ரவர்ணிநதி பூஜித்தது. திரேதாயுகத்தில், கௌண்டியநியரிஷியும் அவர்

பத்திநி சுசீலையும், அநந்த விருதமிருந்து, பத்மநாபரை இதில்பூஜித்து இஷ்டசித்தியும், முக்தியுமடைந்தனர். சகாராஜன் திலீபசக்கரவர்த்தி, பரதன், ஹரிச்சந்திரன், ஜநகன், இவ் விருதமிருந்து ஞானமடைந்தார்கள். இக்கலியில் ஸ்ரீவாங்கனென்னும், பிராமணசந்நியாசி, பூஜைசெய்யும்போது, பாலகிருஷ்ணனாக வந்து மடிமேலேறிய குழந்தையைப் புறங்கையால் தள்ளின பாபம்நீங்க, இந்தஸ்தலத்தில் தபசிருந்து பூஜித்து முக்தியடைந்தார். திருவநந்தபுரம் ரெயில்ஸ்டேஷன்.

14 ஷை டவுனில் சிவஸ்தலம், நீலகண்டர், உமாதேவி, அநந்ததீர்த்தம், அக்நிதீர்த்தம், சங்கமுகதீர்த்தம், சக்கர தீர்த்தம்.

15 திருக்காட்கரை:—எரணு குளத்தின் வடக்கி லுள்ள இடைப்பள்ளி ஸ்டேஷனின் கிழக்கு 2-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். காட்கரையப்பமூர்த்தி, பெருஞ்செல்வநாயகி, கபிலை தீர்த்தம், கபிலமுநிக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

16 திருவண்பரிசாரம்:—நாகர்கோவிலின் வடக்கு ஒரு-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். திருவாழ்மார்பர், திருக்குறளப்பர், கமலவல்லி, லெக்ஷ்மிதீர்த்தம், விநதைக்கும், காரிக்கும், உடையநங்கைக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசநம்.

17 ஜநார்த்தநம்:—திருவநந்தபுரத்தின் வடக்கு 23-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பாலபுரீசர், பாலசுந்தரி, சமுத்திரம், இதில் விசுவாமித்திரர் பூஜித்துப் பிரும்மரிஷியானர்.

18 ஷை ஜநார்த்தநம். விஷ்ணுஸ்தலம். ஜநார்த்தநர், ஸ்ரீதேவி பூதேவி. தெக்ஷிணகயை, சக்கரபாணி தீர்த்தம் முதலிய பதின்மூன்று உள்ளது. ராவணவதமானபின், ராமருக்காக பிரும்மா இதில்யாகஞ்செய்ய, ராமர் வராமல் பரதனுக்

காக அயோத்திக்குப் போனதாலும், ராமபட்டாபிஷேகத்துக்கு, சமஸ்த ரிஷிகள், தேவர்கள், பிரஜைகள், அயோத்திக்குப்போய்விட்டதாலும், காமதேநுவால் நிருமித்த அந்நசாகங்கள்பருவதமாக இருந்ததை ஜநார்த்தநரே பாலராய்ப் புசித்து, பிரும்மாவுக்குக் காக்ஷிதந்தவர். அக்நி,பாகீரதி,பூஜித்தது. மாநிடஜன்மமடைந்த நவப்பிரும்மாக்கள் பூஜித்து சாபம்நீங்கியது. சுப்பிரயசஸ் என்னும், அரசன்பூஜித்துப் பிரும்மஹத்திநீங்கி, சமுத்திர அலையில்விஷ்ணு, பாலராய்அவனுக்குக்காக்ஷிகொடுத்தவர்.

19 திருமூழிக்களம்:—எரணுகுளத்தின் வடகிழக்குள்ள அங்கமாலிக்கு 4-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம். மூழிக்களமூர்த்தி,மதுரவேணிநாச்சியார், பெருங்குளம்,ஹரீதமுநிக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசநம்.

20 திருச்சேங்குன்றூர்:—என்பது (செங்கநூர்) அம்பலப்பிழையின் கிழக்கு 18-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். இமையவரப்பமூர்த்தி, செங்கமலவல்லி, சிற்றாறு, சங்கதீர்த்தம். பஸ்மாசுரனைக்கொல்ல வேண்டின சிவனுக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசநம்.

21 திருப்புலியூர்:—(குட்டநாடு) அம்பலப்பிழையின் கிழக்கு 14-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். மாயபிரான், பொற்கொடிநாச்சியார், பூஞ்சுனைத்தீர்த்தம், சப்தரிஷிகளுக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசநம்.

22 திருவல்லவாழ்:—என்பது (திருவல்லாய்) திருவண்வண்டூரின் வடக்கு 4-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். கோலப்பிரான், செல்வத்திருக்கொழுந்து நாச்சியார், கண்டாகர்ண தீர்த்தம். மணிமலையாறு, கண்டாகர்ணருக்குப் பிரத்தியக்ஷம் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசநம்.

23 திருவண்வண்டூர்:—என்பது (திருவமுண்டூர்) திருப்புலியூரின் வடக்கு 2-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். பாம்

பணியப்பர், கமலவல்லி, பாபநாசதீர்த்தம், கல்லாறு, மார்க்கண்டேயருக்கும் நாரதருக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசநம்.

24 கொல்லம்:—ஜநார்த்தனத்தின் வடகிழக்கு 17-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பார்வதி, பரமேசர், பெருமாளும் முக்கியம். கொல்லம் ரெயில் ஸ்டேஷன்.

25 அம்பலப்பிழை:—கொல்லத்தின் வடக்கு 35-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சிதம்பரரேசர், உமை, இதில்கிருஷ்ணன் கோவிலும், பாயசநிவேதநமும், அந்நதாநமுமுண்டு.

26 ஹரிபர்த்:—கொல்லத்தின் வடகிழக்கு 36-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விசுவநாதர், விசாலாக்ஷி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, இதில் மூன்று உற்சவமுண்டு.

27 ஆலப்பிழை —கொல்லத்தின் வடக்கு 46-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வடமூலர், உமை, பெருமாளும், முல்லக்கல் பகவதியுமுண்டு.

28 வக்கம்:—ஆலப்பிழையின் வடமேற்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அந்நதாநமகாதேவமூர்த்தி, பார்வதி, சமுத்திரத்தீரம், கைலாசத்திலிருந்து, கரன்கொண்டுவந்து பூஜித்தலிங்கம். கார்த்திகைமாசம், காளாஷ்டமி உற்சவமுக்கியம். வக்கத்தப்பனுகிய கிருஷ்ணனும், இதின்சமீபம் செங்கண்ணூரிலும், பகவதிகோவில்முக்கியம். மதுரை, திருநெல்வேலி, ஜில்லாக்களிலும், வக்கத்தஷ்டமி திநத்தில் சமாராதனை செய்கிறார்கள்.

29 எத்துவானூர்:—வக்கத்தின் வடக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பரமேசர், பார்வதி, இதுவும் கரன் பூஜித்தது இதின்மேற்கு 5-மைலிலுள்ள குமாரநல்லூரில் பகவதிகோவிலும் உற்சவமும் முக்கியம்.

30 கடேந்திருத்தி:—வக்கத்தின் வடமேற்கு 15-மைலில் உள்ளது. சிவன், உமை, இதுவும்கான் பூஜித்தலிங்கம்.

31 உதயநாதபுரம்:—வக்கத்தின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, கார்த்திகை உற்சவம்முக்கியம்.

32 கோச்சி:—எரணுகுளத்தின் தெற்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கங்காதரர், பருவதாம்பாள், சமுத்திரம், கிருஷ்ணன் கோவிலும் உற்சவங்களும் முக்கியம்.

33 எரணுகுளம்:—ரெயில்ஸ்டேஷன். கொசசியின் வடக்கு 2-மைலில் உள்ளது. சிவன், உமை, பெருமாளும் முக்கியம்.

34 காலடி:—ஆலுவாயின் கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சந்திரமௌளீசர், சுவயம்புலிங்கேசர், பூர்ணவாகினி. உமை, பெரியாறு, ஆதிசங்கராசாரியார் சிவகுருவுக்கும், ஆரியாம்பாளுக்கும், அவதரித்தார். இடபாசலம் காலடி ஸ்தலத்தில் அவதரித்த ஆதிசங்கராசாரியார், பரமசிவாம்சமானதால், காஷ்மீரம் வரையில் சென்று ஜயித்து, சாரதாம்பாளையும், காஞ்சீபுரத்தில் ஸ்தாபித்து, வேதங்களுக்கு வியாக்கியானங்களைத் தன் சிஷர்களுக் குபதேசித்து, அத்வைதத்தை வளரச்செய்து, அனேக வேதாந்த கிரந்தங்களையும் செய்து, ஞானமாறகத்தை விவரித்தார். காலடியில் விஷ்ணு கோவிலு முண்டு.

35 ஆலுவாய்:—எரணுகுளத்தின் வடக்கு 10-மைலில் உள்ளது. சிவன், உமை, சிவராத்திரி முக்கியம். ஆலுவாய் ரெயில் ஸ்டேஷன்.

36 திருஅஞ்சைக்களம்:— சோரனூரி லிருந்து தெற்கு போகும் லயனில், இருஞாலக்கோட்டை ரெயில் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அஞ்சைக்களாதீசர், உமையம்பாள், சிவகங்கை, பாதிரிமரம், பாசுராமர் பூஜித்தது குலசேகராழ்வார் அவதரித்த ஸ்தலம், இதின்

வடக்குள்ள கொடுங்களூரில், சித்திரைரேவதியி லுதித்த, கழற்றறிவாரென்னுஞ் சேரமான்பெருமாள் நாயனார், அரசாண்டு சிவபக்திமிகுந்து, மதுரையிலிருந்து சுந்தரேசரால் பாணனுக்குப் பொன்னளிக்குப்படி அனுப்பிய திருமுகத்தைக் கண்டு வியந்து, ஆநந்தபாஷ்ப மேலிட்டு, பாணனுக்கு வேண்டியதைக்கொடுத்து, சுந்தரமூர்த்தி நாயனாரைச் சோழநாட்டில் போய்த்தரிசித்தபின், சிதம்பரம், திருவாரூர், மதுரை முதலிய அநேகஸ்தலங்களைத் தரிசித்துப்பாடி, இதில்சுந்தரமூர்த்தியை அழைத்துவந்து, அவர் வெள்ளானையின் மீது இந்த ஸ்தலத்திலிருந்து கைலாஸத்துக்குப் போகும்போது சேரராஜனாகிய சேரமான் பெருமாள்நாயனாரும் தன்குதிரையிலேறி, அவருடன் சிவனருளால் ஆடிசுவாதியில், கைலாஸமேகிச் சிவகணத்தலைவரானார். சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் வைப்புஸ்தலம்.

37 கொடுங்களூர்:—அஞ்சைக்களத்தின் வடக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிதம்பரேசர், சிவகாமி, சமுத்திரம் சேரமான் பெருமாள்நாயனார் ஜனித்துப் பூஜித்தஸ்தலம், தினமும் நாயனாருக்குச் சிலம்பொலி காட்டியவர். பகவதி துர்காதேவியும் முக்கியம். இடங்கழிநாயனார் முக்திஸ்தலம். திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக்கோவையில் பாடிய திருப்பதிகவைப்புஸ்தலம்.

38 திருநாவாய்:—கள்ளிக்கோட்டையின்தெற்கு இடக்குளம் ரெயில்ஸ்டேஷனுக்கு 1-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், நாராயணமூர்த்தி, மலர்மங்கை நாச்சியார், செங்கமலசரசு, லக்ஷ்மிக்கும், கஜேந்திரனுக்கும், பிரத்தியக்ஷம். நம்மாழ்வார், பொய்கையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். இருஞாலக்கோட்டை ஸ்டேஷனுக்கு மேற்கு 5-மைலி லுள்ள கூடல்மாணிக்கத்தில் ஸ்ரீராமாலயமும் முக்கியம்.

ஜனார்த்தனத்தின் கிழக்கே 7-மைலில் (நாவய்குளந்தை) ஸ்தலம் இருக்கிறது.

39 திருவட்டாறு:--திருவநந்தபுரத்தின் தென்கிழக்கு 26-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். ஆதிகேசவமூர்த்தி, மாகதவல்லி, கடல், புஜங்கசயநம், பரசுராமருக்கும், சந்திரனுக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசநம். நாகர்கோவின் சமீபம்.

40 வித்துவக்கோடு:—இடப்பள்ளியின் தென்கிழக்கு 10-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். உய்யவந்தபெருமாள், வித்துவக்கோட்டுவல்லி, சக்கரதீர்த்தம், புஜங்கசயநம், அம்பரீஷனுக்குப் பிரத்தியக்ஷம். குலசேகராழ்வார் மங்களாசாசநம்.

41 திருக்கடித்தாணம்:—திருவல்லவாழின் வடக்கு 3-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். அற்புதநாராயணர், கற்பகவல்லி, பூமிதீர்த்தம், ஏகாதசிவிருதமிருந்து மோகினியின் பிடிவாதச்சொல்லுக்காக, பதினாறு வயதுள்ள தருமாங்கத இளவரசனையும் கொல்லத்துணிந்த தருமசீலரான ருக்குமாங்கத ராஜனுக்குப்பிரத்தியக்ஷம், விஷ்ணுபிரசந்நராய் இளவரசைப் பிழைப்பித்தார். நம்மாழ்வார் மங்களாசாசநம்.

42 திருவாறன்விளை:—திருச்செங்குன்றூரின் கிழக்கு 4-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம். திருக்குறளப்பமூர்த்தி, பத்மாஸந நாச்சியார், வியாசசரஸ், பிரும்மாவுக்கும், வியாசமாகமுநிக்கும், பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம்.

43 திருச்சூர்:—சோரனூருக்குத் தென்மெற்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வடக்குநாதர், உமை, சிவனுக்கு நெய் சாத்துவதுண்டு. விஷ்ணுவும் பகவதியும் முக்கியம். வடமேற்கு நாலுமைலிலுள்ள பொங்கணத்தில் ராமராலயம் முக்கியம். பொங்கணத்தில் ராமசந்திரய்யர் பாடசாலை முக்கியம்.

திருச்சூருக்குமேற்கு 15-மைலிலுள்ள பொறையாற்றில் ராமராலயமுண்டு.

44 குருவாயூர்:—திருச்சூருக்கு வடக்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம். வடக்குநாதர், உமை, சமுத்திரம், கிருஷ்ணன் முக்கியம். சித்திரைபூரத்தில் 48-யானையுடன் திருநாள் வெகுமுக்கியம்.

45 திருனாமலை:—குருவாயூரின் வடக்கு 4-மைலில் உள்ளது, விஷ்ணுஸ்தலம். மலைமேல் ராமர், லெக்ஷுமணர், சீதை, கண்ணுடிப்பிழை, பரதர், சத்துருக்கர், ஹநுமார்.

46 கீழூர்:—குருவாயூரின் வடக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பாதுகாத்தவர், பார்வதி, கார்த்திகைக்கடைசியில் திருநாள்முக்கியம்.

47 பேப்பூர்:—சோரனூருக்கு வடமேற்கு 20-மைலில் உள்ளது. சிவன், உமை, விஷ்ணுவும் முக்கியம்.

48 கள்ளிக்கோட்டை:—என்பது (கோழிக்கோடு) சோரனூருக்கு வடமேற்கு 30-மைலில் உள்ளது, சிவன், உமை, விஷ்ணுவும் பகவதிகோவிலும் முக்கியம். கள்ளிக்கோட்டை ரெயில் ஸ்டேஷன்.

49 வடகரை:—கள்ளிக்கோட்டையின் வடக்கு 17-மைலில் உள்ளது. சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை.

50 தலைச்சேரி.—வடகரையின் வடக்கு 13-மைலில் உள்ளது. சிவஸ்தலம். திருவங்காட்டில் பரமேசர், பார்வதி, சிவதீர்த்தம், ஸ்ரீராமராலயமும் முக்கியம்.

51 இடைக்காடு:—தலைச்சேரியின் வடக்கு 6-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். நாராயணர், ஸ்ரீதேவி, பூதேவி.

52 தளிப்பறம்பு:—தலைச்சேரியின் வடகிழக்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம். தளிப்பறம்புத் தம்பிரான், அந்நபூர்

ணேசுவரி, அடுத்த திருச்சம்பரத்து கிருஷ்ணன் கோவிலில், விரை இல்லாமகிழமரமும், பால் அபிஷேகமும், நெல் பொரி, நிவேதநமும் முக்கியம். மாசிமாசக்கடைசியில் திருநாள்.

53 காஞ்சிரங்காடு:—தளிப்பறம்பின் வடகிழக்கு 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம். காஞ்சிரங்காட்டப்பராகிய வைத்யநாதர் பார்வதி, இதில்குஷ்டரோக நிவர்த்தி.

54 மழூர்:—தளிப்பறம்பின் வடக்கு 3-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். கிருஷ்ணர், ருக்குமிணி, சத்தியபாமை, பலராமர்.

55 சிறுகுன்னம்:—தளிப்பறம்பின் வடமேற்கு 4-மைலில் சிவஸ்தலம். விசுவேசர், அந்நபூர்ணேசுவரி, சமுத்திரம்.

56 பையனூர்:—தளிப்பறம்பின் வடக்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம். உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை.

57 கண்ணனூர்:—தலைச்சேரியின் வடக்கு 20-மைலிலுள்ளது. சிவஸ்தலம், பரமேசர், பார்வதி, கிருஷ்ணன். கண்ணனூர் ரெயில்ஸ்டேஷன்.

58 கோட்டியூர்:—தலைச்சேரியின் வடக்கு 40-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கோட்டியூர்அப்பன், உமை, சித்திரைமாச அசுவதிமுதல் ஒருமாசமட்டும் பூஜையுண்டு. பரசுராமர் யாகஞ் செய்ததஸ்லம்.

59 மங்களூர்:—தலைச்சேரியின் வடக்கு 60-மைலில் உள்ளது, சிவஸ்தலம், மங்களேசர், மங்களநாயகி, ராமரும் முக்கியம். மங்களூர் ரெயில்ஸ்டேஷன்.

60 உடுப்பி:—மங்களூரின் வடக்கு 30-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம், அநந்தர், லக்ஷ்மி, கிருஷ்ணன், ருக்குமிணி சத்தியபாமை, சமுத்திரம், மத்வமதஸ்தர்களின் முக்கியஸ்தலம். மத்யகேஹபட்டரென்னும் வேதியருக்கு வாயுவின் அம்சமாய்ப் பூர்ணபோதரென்னும் பகவத்பாதாசாரியர் அவரித்து சந்நியாசியாய்ச் சீடர்களுடன், இமயகிரியில், பதரிகாசிர

மத்தில் தபசு செய்யும் வியாசரைத் தரிசித்து, இதில் வந்து கீதாபாஷ்யம், சூத்திரபாஷ்யம், பிருகதாரண்ய பாஷியமுதலிய 40-பாஷியங்களைச் செய்து இக்கலியிலிதில் தபசு செய்து 109-வயதில் மாகசுக்கிலநவமியில் இமயமலைக்கு மருபடியும் வியாசரிடம் சென்றார்.

61 ஷை உடுப்பி சிவஸ்தலம், அநந்தேசர், அநந்தநாயகி' கர்த்தமப்பிரஜாபதி, பாராசரரிஷி, பாண்டுராஜன் இக்கலியில் மத்யகேஹபட்டர் இவர்கள் பலையாவிருகமிருந்து பூஜித்த ஸ்தலம். உடுப்பியின் தெற்கு 8-மைலிலுள்ள முத்பித்ரி, டவுனில் ஜைனர்கள் தேவாலயம் ஆயிரங்கால் மண்டபத்தோடு பிரபலமானது. கார்க்காலிலும் 45-அடி உயரமுள்ளபுத்தர் விக்கிரகமுண்டு.

62 மூகாம்பி:—உடுப்பியின் வடக்கு 18-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சங்கரர், உமை, நாராயணர், லக்ஷுமி, பிரும்மா, சரஸ்வதி, திருமூர்த்திஸ்தலம், சரஸ்வதிக்கு நவராத்திரியில் முக்கிய உற்சவம். கோவிலின் நாலுபுறமும் ஜலமும், மூர்த்திகளுமுண்டு.

63 குந்தாபுரம்:—உடுப்பியின் வடக்கு 23-மைலில் உள்ளது சிவஸ்தலம், உமாகாந்தர், உமை, சமுத்திரம், விஷ்ணுவும் முக்கியம்.

64 திருக்கோகர்ணம்:—உடுப்பியின் வடக்கு 55-மைலிலுள்ளது. சிவஸ்தலம், மகாபலநாதர், கோகர்ணநாயகி, கோகர்ண தீர்த்தம், சமுத்திரம், காயத்திரிநதி, துவாதசஜோதிர்லிங்க க்ஷேத்திரம். ராவணன் தபசுசெய்து கைலாசத்திலிருந்து கொண்டுவந்த லிங்கத்தைக் கணபதி அவனை ஏமாற்றி இதில் அமைத்தது. பகீரதன் கங்கையைத் தாங்கும்படி சிவனை நோக்கித் தபசுசெய்தது, குருவாகிய வசிஷ்டரின் சாபத்தால் ராக்ஷதனானகல்மாஷபாதனுக்கும் இதில், ரிஷிகளைக்கொன்ற

பழிநீங்கினது பச்சிமகாசி பசுவின் காதைப்போன்ற லிங்கம். சிவராத்திரி முக்கியம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2.

65 தருமஸ்தலம்:—உடுப்பியின் தென்கிழக்கு 30-மைலில் உள்ளது. சிவன் உமை, பகவதியும் முக்கியம்.

66 சுப்பிரமணியம்:—உடுப்பியின் தென்கிழக்கு 55-மைலில் உள்ளது. பரமசிவன், பார்வதி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியசுவாமியும் சமாராதனையும்முக்கியம்.

67 தலைக்காவேரி:—என்பது(சையபருவதம்) சுப்பிரமணியத்தின் தென்கிழக்கு 40-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பிரும்மகிரீசர், பரமேசுவரி, காவேரியின் உற்பத்தி, இந்திரன்கேட்டுக்கொண்டபடி விநாயகர், காகமாய், அகஸ்தியர்கடத்திலிருந்து தள்ளியதால், காவேரி சையமலையில் நின்றுவிழுந்து அநேகஸ்தலங்களின்வழியாய் சீர்காழிக்கு வந்தது. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

68 குடகுமலை:—என்பது (கொங்கணம்) தலைக்காவேரியின் கிழக்கு 4-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கிரீசர், உமை, தத்தாத்திரேயர், இலக்ஷுமி, பிரும்மா, சரஸ்வதி, இதுபாக மண்டலம். பிரும்மகிரி, காவேரி, திருநாவுக்கரசு நயானார் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

69 கஜாரண்யம்:—தலைக்காவேரின் கிழக்கு 30-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கஜாரண்யேசர், பார்வதி, காவேரி.

70 மைசூர:—தலைக்காவேரியின் கிழக்கு 8-மைலில் உள்ளது. சிவன், உமை, விஷ்ணுகோவில்கள், அநேகமுள்ள சுவயராஜ்யம். பெரியவுடன்.

71 சாமுண்டேசுவரிமலை:—மைசூரின் தெற்கு 3-மைலில் உள்ளது. சிவன், சாமுண்டேசுவரி முக்கியம்.

72 ஸ்ரீரங்கபட்டினம்:—மைசூரின் தென்கிழக்கு 8-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். ஸ்ரீரங்கநாதர், ஸ்ரீரங்கநாயகி,

காவேரி இரண்டுபக்கங்களிலும் உள்ளது. ஆதிரங்கம், அநேக ரஷிகளும், தேவர்களும், பூஜித்து, தபசுசெய்தஸ்தலம். டிப்பு சுல்தானுண்ட பூர்வீக நகரம்.

73 பங்களூர்:—மைசூரின் வடகிழக்கு 60-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பரமேசர். பார்வதி, விஷ்ணுகோவில்களுமுள்ள பெரியடவுன். பங்களூர் ரெயில் ஸ்டேஷன்.

74 துமுக்கூர்:—பங்களூரின் வடமேற்கு 30-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுவுமுண்டு. துமுக்கூர் ரெயில் ஸ்டேஷன்.

75 நந்திதுர்க்கம்:—துமுக்கூரின் வடமேற்கு 30-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, நந்திமலை பெரிதானதால், முகத்திலிருந்து வடபெண்ணைநதியும், மடியிலிருந்து பாலாறும், பின்பக்கமிருந்து தென்பெண்ணையும் உற்பத்தி.

76 சிவசமுத்திரம்:—மைசூரின் கிழக்கு 50-மைலில உள்ளது. சிவஸ்தலம், சிவன், சக்திரங்கநாதர், இலக்ஷுமி, காவேரிமலையினின்று விழுமிடம். மத்தியரங்கம். மைசூர் ராஜன் அணைக்கட்டி யிருக்குமிடம்.

77 நஞ்சுண்டகோடு:—மைசூரின் தென்கிழக்கு 15-மைலில் உள்ளது சிவஸ்தலம், நஞ்சுண்டேசர், பார்வதி, கபிலநதி.

78 ஸ்ரீகண்டம்:—சிவசமுத்திரத்தின் சமீபம் சிவஸ்தலம். ஸ்ரீகண்டேசர், உமை, காவேரி, புராணஸ்தலம்.

79 திருவக்கோடு:—சிவசமுத்திரத்தின்சமீபம், சிவஸ்தலம், பிரும்மேசர், கபிலாம்பாள், அசுவத்தமரம், பிரும்மா பூஜித்தது. கபிலாநதி காவேரியில் சங்கமம்.

80 சென்னிமலை;—சிவஸ்தலம், சென்னிமலைநாதர், உமை, கந்தர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர், முக்கிய ஸ்தலம்.

81 வெண்ணைமலை.—சிவஸ்தலம், கிரீசர், உமை, கந்தர், வள்ளி, தெய்வானை சுப்பிரமணியஸ்தலம்.

82 வெள்ளிமலை:—சிவஸ்தலம், பஞ்சபூதேசர், உமை, கந்தர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியஸ்தலம்.

83 சிவமலை:—சிவஸ்தலம், சிவகிரிநாதர். பார்வதி, கந்தர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியஸ்தலம்.

84 மருதமலை —சிவஸ்தலம், மருதாசலபதி, உமை, கந்தர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியஸ்தலம் 80-முதல் 84-லக்கம் வரையில் சிவசமுத்திரத்தின் கிழக்கிலுள்ளன.

85 சேலம்:—சிவஸ்தலம். சுகவனேசர், சுவர்ணாம்பிகை, விசுவதீர்த்தம், வச்சிரமுனிபூஜித்தது. விஷ்ணு கோவில்களுமுண்டு சேலம் ஜில்லா ரெயில்ஸ்டேஷன்.

86 பாபநாசமலை;—சேலத்தின் மேற்கு 1-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம், நரசிம்மமூர்த்தி, லக்ஷ்மி, பாபநாச தீர்த்தம், சிம்மகிரி முக்கியம்.

87 நீலகிரிமலை;—போதனூரின் வடமேற்கு சிவஸ்தலம், நீலாசலேசர், நீலாம்பிகை, நாகதீர்த்தம், நீலமலை, நாகராஜர்கள் பூஜித்தஸ்தலம். திருநாவுக்கரசுநாயனார் அடைவுத் திருத்தாண்டகத்தி லுள்ள திருப்பதிக வைப்புஸ்தலம். கூனூர் ரெயில் ஸ்டேஷன்.

88 அவனி:—மதராசிலிருந்து பங்களூர் போகும் லயனில் 176-வது மைலிலுள்ள பௌரிங்பேட் ஸ்டேஷனிலிருந்து 22-மைலில் உள்ளது விஷ்ணுஸ்தலம், ஸ்ரீராமர், லக்ஷ்மணர், சீதை, ராமர் பூஜித்தராமநாத லிங்கமுமுண்டு. வால்மீகிரிஷி, யாசிரமம். சீதையைக் காட்டில் காத்த இடம்.

89 கரையமதை;—மதிராசின் தென்மேற்கு லயனில் 328-வது மைலில் உள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, இது கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ளது.

90 கோயம்புத்தூர்;—சிவஸ்தலம், சம்வர்த்தனேசர், பார்வதி விஷ்ணுவுமுண்டு, கோயம்புத்தூர் ரெயில் ஸ்டேஷன்.

91 திருஅவிநாசி;—திருப்பூரின் வடமேற்கு 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அவிநாசீசுவரர், பெருங்கருணைநாயகி, முத

லைத் தீர்த்தம், பாதிரிமரம், அகஸ்தியதீர்த்தம், சுந்தரமூர்த்திநாயனார் பாடி மூன்றுவருஷத்துக்குமுன் முதலையா விழுங்கப்பட்ட பிராமணச்சிறுவனை, முதலை வாயினின்று எடுத்துப் பெற்றோரிடங் கொடுத்து, உபநயனம் செய்தார். பிரும்மா, அகஸ்தியர், பூஜித்தது. சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1.

92 ஷை ஸ்தலம் (புக்கொளியூர் ஏரிகரை) சிவஸ்தலம், சுந்தரேசர், உமை, சுந்தரமூர்த்திநாயனாரிடம் முதலை, பிள்ளையைக்கொடுத்த, இடம்.

93 திருப்பூர்;—அவிநாசியின் தென்கிழக்கு 9-மைலில் உள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுவுமுண்டு. திருப்பூர் ரெயில் ஸ்டேஷன்.

94 திருமுருகன்பூண்டி;—திருப்பூரின் வடமேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம், முருகேசர், ஆவிடைநாயகி, ஆவிடைத் தீர்த்தம், முருகதீர்த்தம், மாமகதீர்த்தம், மாதவிவநம் சிவபெருமான் பூதங்களை வேடராயனுப்பி, சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பொருள்களைப்பறித்து, மறுபடியும் கொடுத்துக் காக்ஷிதந்து, பதிகம் பெற்ற ஸ்தலம். சுப்பிரமணியர், காசியப ரிஷியின் புத்ரர்கள், அகோரதபம் இயற்றி பரமசிவனிடம் வரம்பெற்று (1008) அண்டங்களை யரசாண்ட சூரபத்மன், சிங்கமுகன், தாரகன்முதலிய அசுரர்களை வம்சத்தோடு அழித்த பாவம் நீங்க, இந்தஸ்தலத்தில் லிங்கப்பிரதிஷ்டை செய்து பூஜித்ததாகப் புராணமுள்ளது. இதில் சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானையும் முக்கியம். சுந்தரமூர்த்திநாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசுநாயனார் வைப்புஸ்தலம்.

95 பேரூர்:—கோயம்புத்தூரின் மேற்கு 2-மைலில் உள்ளது சிவஸ்தலம். பட்டீசர், பச்சைநாயகி, மேலச்சிதம்பரம், காஞ்சிநதி என்னும் நொய்யலாறு, பிரும்மதீர்த்தம், பிரும்மா பூஜித்தது, திருநாவும் சுந்தரரும் பாடிய வைப்புஸ்தலம்.

96 சங்ககிரிதுருக்கம்:—திருச்செங்கோட்டின் மேற்கு 5-மைலில் உள்ளது. சிவன், உமை, காவேரி. சங்ககிரிதுர்க்கம், ரெயில் ஸ்டேஷன்.

97 திருச்செங்குன்றூர்;—என்பது (திருச்செங்கோடு) சங்ககிரியின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். அர்த்தநாரீசுவரர், அர்த்தநாரீசுவரி, சங்கதீர்த்தம், அமிருதசரசு, சூரிய தீர்த்தம், காவேரி, சாமுண்டி பிரத்தியாங்கிரரும், சுப்பிரமணியரும், பூஜித்து சர்ப்பரூபம்நீங்கினது. நாகாசலம். மலைமேல்கோவில், மேனிவிபூதிநிறம், இதில்சுப்பிரமணியர் வள்ளி தெய்வானையும் முக்கியம், ஆதிகேசவருமுண்டு, பிருமா, காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதிபூஜித்தது. பிருங்கிரிஷிக்காக அர்த்தநாரீசரானது. திருவடியின்கீழ், கங்கையாகியசங்க தீர்த்தம். திருஞான சம்பந்தர்பாடி, நளிர்ஜ்வரத்தை அகலச்செய்தார் விறன்முண்டநாயனாரிதில் ஜநித்துச் சிவனைப் பூஜித்து சிவபதமடைந்தார். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனார் வைப்புஸ்தலம்.

98 ஈரோடு:—சிவன், உமை, விஷ்ணுகோவிலும் சத்திரமுமுண்டு. ஈரோடு ஜங்கஷன் ஸ்டேஷன்.

99 திருநணா:—என்பது (பவாநிக்கூடல்) ஈரோட்டின் வடமேற்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சங்கமுகேசர், வேதமங்கை, சுவரதேவர், பவாநியும்காவேரியும் சங்கமம் சூரிய தீர்த்தம். அமிருதசரசு, இலந்தைமரம், பிரும்மா. காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி, குபேரன், கௌசிகமுநி, பராசரமுநி, பரசுராமரும், பூஜித்ததாகப் புராணமுள்ளது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1.

100 ஷை கோவிலில். விஷ்ணுஸ்தலம். ஆதிகேசவமூர்த்தி, ஸ்ரீதேவி, பூதேவி. பிரும்மா, திருமூர்த்திகளுமுள்ள முக்கிய ஸ்தலம்.

101 பவானி:—சந்திரசேகரமூர்த்தி, பவாநிபம்மன், காவேரி நதி, பவாநிநதி அநேகவிஷ்ணு கோவில்களும் சத்திரங்களுமுள்ள தாலூகாடவுன். இது கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ளது.

102 திருப்பாண்டிக்கொடிமுடி:—ஈரோட்டின் தென் கிழக்கு 13-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கொடிமுடிநாதர், பண

மொழிநாயகி, வன்னிமரம். காவேரியில் நொய்யலாகிய காஞ்சி நதி சங்கமம். இதின்தெற்கு (30) மைலிலுள்ள பழனிமலைக்குத் தினம் காவேரியில் திருமஞ்சனமெடுத்துக் காவடிகட்டிக் கொண்டுபோய் தண்டாயுதபாணிக்கு அபிஷேகம் செய்கிறார்கள் இக்கோவிலுக்குள் வீரநாராயணப்பெருமாளும் பிரும்மாவும் முக்கியம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகம்-1, திருநாவுக்கரசுநாயனார் பதிகம்-1, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1, ஆக பதிகம்-3. கொடிமுடி ரெயில் ஸ்டேஷன்.

103 திருக்கரூர்,—என்பது (திருவாநிலை) கொடிமுடியின் தென்கிழக்கு 15-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பசுபதீசர், கிருபாநாயகி, காவேரியில், அமராவதி நதிசங்கமம், கெர்ப்பபுரி, இதில் எறிபக்தநாயனார், சிவகாமியாண்டார் பூக்குடலையைப்பிடுங்கிக் கீழேயெறிந்த இதிலாண்ட புகழ்ச்சோழநாயனாரது யானையையும், பாகனையும், வெட்டியதால் ராஜன் யானையின் சிவாபராதத்துக்கு, என்னையும் வெட்டவேணுமென்றுக் கேட்ட எறிபக்த நாயனார், தாமே வெட்டிக் கொள்ளக் கழுத்தில் கத்தியை வைத்ததை ராஜன் தடுக்கும்போது சிவனருளால் யானையும், பாசனும், பிழைத்து இதில் பூஜித்து சிவபதமடைந்தார்கள். இந்தஸ்தலம் சோழநாட்டின் மேலக்கடைசிஎல்லை பெருமாள் கோவிலுமிதில் முக்கியம். திருவிசைப்பாப்பாடிய கருவூர்த்தேவர் இதிலவதரித்து சிதம்பரம், தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரம், சாட்டியக்குடி திருமுகத்தலை, திருக்களந்தை, ஆதித்யேசுவரம், கீழக்கோட்டூர், மணிஅம்பலம், த்ரைலோக்யசுந்தரம் முதலியதைப் பாடி சிவபதமடைந்தார். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, உறையூரிலாண்ட புகழ்ச்சோழரிவர். கரூர் ரெயில் ஸ்டேஷன்

104 நெரூர் —கருவூரின் சமீபமுள்ளது. சிவஸ்தலம் பரமேசுவரர், பாரவதி, காவேரி. பெருமாள் கோவிலுமுண்டு இதில் அக்கிரகாரமத்தியில், நதி ஓடுகிறது.

105 வல்லிபுரம்:—கருவூரின் வடக்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சங்கரநாராயணர், நாமகிரியம்மை.

106 நாமக்கல்:—விஷ்ணுஸ்தலம். உக்கிரநரசிம்மர், வாமநர், திருவிக்கிரமர், ஸ்ரீதேவி, நாமகிரித்தாயார், ராமர், லெக்ஷ்மணர், சீதை, பெரியஅநுமார், அநுமத்தீர்த்தம், இதுவல்லிபுரசமீபம் அநுமார்பூஜித்த புராணஸ்தலம்.

107 புஞ்சைப்புகளூர்:—கருவூரின் மேற்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சுந்தரேசர், மீநாக்ஷி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, மலைமேல்கோவில் புராணமுண்டு.

108 மோகனூர்:—கருவூரின் வடக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சந்திரசேகரர், திருவேணி அம்மன், இதுகாவேரியின்வடகரையில் உள்ளது.

109 தாராபுரம் :—கருவூரின் தென்மேற்கு 16-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சோமாஸ்கந்தர், பார்வதி, சோபனதீர்த்தம், பெருமாளும் முக்கியம்.

110 திருவெஞ்சமாக்கூடல்:—கருவூரின் தெற்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விகிருதேசுவரர், விகிருதேசுவரி, வேகநதி, விகிருததீர்த்தம், பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசமாகிய பஞ்சபூதங்களும், வந்தடங்கியதாகப் புராணமுள்ளஸ்தலம். வெஞ்சனென்னும் அசுரன்பூஜித்தது. சுந்தரமூர்த்திநாயனூர் பதிகம்-1. திருநாவுக்கரசு நாயனூர் வைப்புஸ்தலம்

111 திருநாராயணபுரம்:—மைசூரின் வடகிழக்கு 25-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். பிரஞ்சுராக் சமீபம். நாராயணமூர்த்தி, எதுகிரிநாச்சியார், யாதவதீர்த்தம், யாதவகிரி. கருடனுக்குப்பிரத்தியக்ஷம். நஞ்சியர் அவதாரஸ்தலம். உடையவராகிய ஸ்ரீ ராமாநுஜாசாரியார், பூஜித்தது. இதின் சமீபம் உள்ள தொண்டனூர் நம்பி அவதரித்தஸ்தலம் மிதுனசாலக்கிராமத்தில், நரசிம்மரும், உண்டு.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# ஒன்பதாம் அத்தியாயம்.



## வடநாடுகள்.

1 திருஅயோத்தி:—காசியின் வடமேற்கு 128-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். இராமர், சீதை ஸரயூநதி, சத்யபுஷ்கரிணி, சப்தபுரியிலொன்று.

பிரும்மாதி தேவர்களின் பிரார்த்தனையின்படி, இதில் ஆண்ட தசரதசக்கரவர்த்தியின் புத்திரகாமேஷ்டி யாகத்தில் கிடைத்தபாயசத்தைப் புசித்தகௌசல்யா தேவியிடம் ஸ்ரீராமரும், கைகேயியிடம் பரதரும், சுமித்திரையிடம் லெக்ஷுமணர், சத்துருக்கினருமாக, மகாவிஷ்ணு அவதரித்தார், ஸ்ரீராமரும், லெக்ஷுமணரும், விசுவாமித்திர ரிஷியுடன்போய் மந்திரபலம்பெற்றுத் தாடகையைக்கொன்று, அவர் யாகத்தைக்காத்து, சுபாகுவை வதஞ்செய்து, மாரீசனைக்கடலில் தள்ளி, விசுவாமித்திருடன் மிதிலைபோகும்வழியில், கங்கையில் முழுகி, கௌதமபத்நி அகலி, கல்லாயிருந்ததை நீக்கிப் பெண்ணாக்கி, மிதிலைக்குவந்து, ஜநகராஜன்நிபந்தனைப்படிசிவன் வில்லைமுறித்துத் தசரதர் வந்தபின் ஸ்ரீராமர் சீதையைவிவாகஞ்செய்துகொண்டார். பூமியில்கிடைத்த சீதையை ஸ்ரீராமருக்கும், ஜநகரதுபெண் ஊர்மிளையை லெக்ஷுமணருக்கும், ஜநகர் தம்பி குசத்துவஜனுடையபெண்களில் மாண்டவியைப் பரதருக்கும், சுருதகீர்த்தியைச் சத்துருக்நருக்கும், ஒரே முகூர்த்தத்தில் விவாகஞ்செய்து, சகலரும் அயோத்திக்குச் செல்லும்வழியில் ஸ்ரீராமர் பரசுராமரைஜயித்து, வில்லை வாங்கிக்கொண்டு, அயோத்திக்குப்போய்வாழ்ந்து வருகையில் பரதரும் சத்துருக்நரும் கேகய ராஜனிடம் போனார்கள். தசரதரும் ஸ்ரீராமருக்கு யுவராஜபட்டாபிஷேகஞ் செய்வதாக நிச்சயித்தமுதல் நாளிரவில், கூனிபால்கலைக்கப்பட்ட கைகேயி, தசரதரிடம் முன்தனக்குக் கொடுக்கவேண்டிய

இரண்டுவரங்களைக்கேட்டாள், தசரதரும் ஒப்புக்கொண்டபின் ஸ்ரீராமர் வனம்போகவும், பரதன்நாடாளவும், கேட்டு தசரதரை ஒப்புக்கொள்ளச்செய்து, ராமரை வனம்போகச்சொன்னதால், ஸ்ரீராமரும் சீதையும் லெக்ஷுமணரும் மரவுரிதரித்து வனம்போக கங்கைக்கரையில், குகன்நட்புஅடைந்து, கங்கையைத்தாண்டி, பரத்துவாஜரைத்தரிசித்துச், சித்திரகூடத்தில் தங்கினூர்கள். ஸ்ரீராமர்வனமேகிய துக்கத்தால் தசரதர் உயிர்விட, வசிஷ்டரும் பரதரைவரவழைத்துக் கிரியைசெய்யச்சொல்ல பரதரும் தாயைத்தூஷித்து, பித்ருக்கடன்களை முடித்து, குரு, மந்திரிகள், தாய்மார்கள், சேனைகள், சகிதமாய்பரத்துவா ஜசாசிரமத்தில் விருந்துண்டு, சித்திரகூடத்தில் ஸ்ரீராமரைவணங்கி, பித்ருகடன்முடித்தபின், ராமரை அயோத்தியையாளும்படி வேண்டியும், பித்ருவாக்கியப்படி பதினுன்கு வருஷம்காட்டில் வசித்துவருவேன் என்று உறுதியாய்சொன்னூர். பிறகுஸ்ரீராமரது பாதுகைகளைப் பரதன்தலையில்தாங்கி, நான்நாடாளேன். இப்பாதுகை யாளட்டும் என்று திரும்பி அயோத்திக் குப்போகாமல், நந்திக்கிராமத்தில் தானும் மரவுரிதரித்துப், பாதுகைக்குப் பட்டாபிஷேகஞ்செய்து, ராமபக்திசெய்து கொண்டிருந்தார். ஸ்ரீராமர், லெக்ஷுமணர், சீதை, மூவரும்தண்டகாரண்யம் வரும்வழியில் சீதையைத்தூக்கின விராதனைவதைத்து. அத்திரிரிஷி, சரபங்கர், சுதீக்ஷணர், அகஸ்தியர், இவர்களாசிரமங்களில் வசித்து, சுதீக்ஷணருக்கும், சரபங்கருக்கும், முக்திகொடுத்துப், பஞ்சவடியில்வசித்தார்கள். அதில்ராவணன்தங்கை சூர்ப்பநகி சீதையைத்தூக்க எத்தனித்ததால், அவளைமூக்கறுத்து, அவள் சொற்படியெதிர்த்த கரன், தூஷணன், திருசிரன், முதலிய பதினாலாயிரம் தானவர்களை ஒரேமுகூர்த்தத்தில் கொன்று, நற்கதியளித்து, வசிக்கும்நாளில், சூர்ப்பநகி சொல்லால்புத்தி, மயங்கிய இராவணன் ஏவலால், மாரீசன்பொன்மானுயும், ராவ

ணனே சந்நியாசியாயும்வர, மானைச் சீதைசொற்படி ராமர் துரத்த, மான் இறக்கும்போது, லெக்ஷ்மணா, சீதா, வென்று உரக்கக்கூவியதால், சீதை லெக்ஷ்மணரையும் நிர்ப்பந்தித்துத் துரத்த, ராவணசந்நியாசி சீதையையெடுத்துத் தேரிலேற்றி, இலங்கைக்குப்போகும் வழியில், சடாயுதடுத்தும் அவனைக் கொன்றும், ராவணன்சீதையை இலங்கையில் அசோகவனத்தில் சிறையிட்டான். ஸ்ரீராமரும் சீதையில்லாததால் துக்கித்துச்சடாயுவாலறிந்து, சடாயுவுக்கும் கிரியைசெய்து, கவந்தனைக்கொன்று, பம்பாசரசுவந்து, சபரிக்குமுக்தி கொடுத்து, அநுமாரைக்கண்டு, சுக்கிரீவனிடம் சிநேகித்து, அவன் தமையனை வாலியைக்கொன்று, சுக்கிரீவனுக்குக் கிஷ்கிந்தையில் முடிசூட்டி, வானரர்களைத் தூது அனுப்ப, அநுமார்தூதராகி நூறு யோஜனையிலுள்ள இலங்கைக்குக் கடலைத்தாண்டிச் சென்று, இலங்கணியைக்கொன்று, சீதையைக்கண்டு, ராமர் கொடுத்திருந்த முத்திரை மோதிரத்தைக்கொடுத்து, தேற்றிச்சூடாமணியும் பெற்று, ராக்ஷதர்களைக்கொன்று, ராவணனையேசி, அவன்வாலில் இட்டதீயால் இலங்கையைக்கொளுத்தி, திரும்பி ராமரிடம் சீதையைக்கண்டேன் என்று சூடாமணியைக்கொடுக்க, 72-வெள்ளம் வானரப்படைகளுடன் ஸ்ரீராமரும் தர்ப்பசயநஞ்செய்து, அணைகட்டவருணனை அழைத்தார். தன்சொற் கேளாத ராவணனை விட்டுப்பிரிந்து வந்த அவன்தம்பி விபீஷணாழ்வாருக்கு ராமர், அபயங்கொடுத்து, அணைகட்டி, இலங்கைசென்று, இராவணன், கும்பகர்ணன், இந்திரசித், மந்திரிகள், சேனைகள், முதலியயாவரையுங் கொன்று, விபீஷணருக்குமுடிசூட்டிச் சீதையை, அநலில் பாயச்சொல்ல, அவள் பதிவிருதாக்கினியை அக்நிதாங்கமுடியாமல் பிரார்த்திக்க, சிவபிரும்மேந்திராதி தேவர்களும், தசரதரும், வேண்டினதால், சீதையுடன்ராமேசுவரத்தில் சிவலிங்கம் அமைத்து, பூஜித்து, புஷ்பவிமானமேறி, யாவரும்

அயோத்திவந்து, பரதனைத்தேற்றி, பட்டாபிஷேகம்பெற்று 11110-வருஷம் ஆண்டஸ்தலம்.

பரதன், தேவர்கள், முனிவர்களுக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாஸநம். இது பிரயாகையின் வடக்கு 98-மைலில்உள்ளது. அயோத்தி, வேதத்தில் பூலோகவைகுண்டமென்று சொல்லப்பட்டு இருக்கிறது. வைகுண்டத்தினின்று சுவாயம்புவமநு கொண்டு வந்து ஸ்தாபித்ததென்றும், சரயூதென்கரைமுதல் தமஸாநதிவரையில், அகன்று, மச்சாகாரமாய், சாகேதம், சத்திவிமலை, யென்னும் பெயரோடுகூடியதெனவும், சப்தபுண்யபுரிகளாகிய அவந்தியைத் திருவடியாகவும், காஞ்சியையிடையாகவும், துவாரகையை உந்தியாகவு; மாயாபுரியென்னும ஹரித்துவாரத்தை மர்மமாகவும், மதுரைகைக்கண்டமாகவும், காசியை நாசியாகவுங், கொண்ட ஸ்ரீமன்நாராயணனுக்கு இவ்வயோத்தி முகம். ஸ்ரீராமர்ஜநித்த கர்ப்பஸ்தானமும், அயோத்தியா பீடமுமுண்டு கீழவாசலில் ஆஞ்சநேயரும் முக்கியம். அநுமக்குண்டம், சீதாகூபம், நாராயணகுண்டம், வால்மீகிதீர்த்தம், ஹரிகுண்டம், சரயூ, வசிஷ்ட ராமகங்கை, விஷ்ணுபதி, ஸஹஸ்ரதாரை, சுவர்க்கதாரை, யென்னும் தீர்த்தமுள்ளஸ்தலம் வாயுவும், அநுமானும், ருத்திராம்சமென்றும், ஸ்ரீராமர்திருமூர்த்தியும், பார்வதியுஞ் சேர்ந்த அம்சமென்றும், வராகபுராணம், சாதுர்மாஸ்ய மாகாத்மியம் 14-வது அத்தியாயத்திலும், ஆநந்தராமாயணத்திலும் சொல்லப்படுகிறது.

2 கணேசஸ்தாநம்:—அயோத்தியில் சிவஸ்தலம். ராமநாதர், பருவதபுத்திரி, கணேசர், இதில் ஸ்ரீராமனர 9000-பிராமணர்கள்பூஜித்ததாகத் திருச்செந்தூர் க்ஷேத்திரமாகாத்மியம் சொல்லுகிறது.

3 நந்திக்கிராமம்:—அயோத்திக்கு கிழக்கு 20-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம். ராமர், சீதை, லெக்ஷுமணர், பரதர், சத்துருக்கினர், பரதர்பாதுகாபட்டாபிஷேகஞ் செய்து பூஜித்தஸ்தலம். சரயூநதி இதின் அடுத்தகாடுகளில், பழைய அயோத்திப் பட்டினத்திலிருந்த அரண்மனைகள் இடிந்து மரங்களால் மூடப்பட்டிருக்கின்றன.

4 பத்ட்ராஸ்:—அயோத்தியின் தெற்கு 12-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம், ராமர், சீதை, லக்ஷுமணர், பரதர், சத்ருக்னர், ஸ்ரீராமர் பரதனை சந்தித்தவிடம் மகாநதி, தமஸாநதி, இதில் ஸ்ரீராமநவமி உற்சவம் பிரபலம்.

5 ஸ்ரீ காசி:—அயோத்தியின் தென்கிழக்கில் 128-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விசுவேசர், அந்நபூர்ணி, விசாலாக்ஷி, கருணேசர், சிங்காரகௌரி, சௌபாக்கியகௌரி, சப்தபுரிகளிலொன்று கங்கை ஞானவாபி, முக்திமண்டபம், வடவால விருக்ஷம், விஷ்ணு, பிரும்மா, தேவர்கள், ரிஷிகள், இதில் பூஜித்தும், தவமியற்றியும், அடியில்கண்டலிங்கங்களை ஸ்தாபித்தும் இஷ்டசித்திபெற்றார்கள். அடியில்கண்ட (24) யாத்திரைகள் இதில் ஏற்பட்டுள்ளன. (1) நித்தியயாத்திரை, (2) அந்தர்க்கிரகயாத்திரை, (3) நவகௌரீதரிசந யாத்திரை, (4) சப்தாவரண விநாயகர்யாத்திரை, (5) சப்தரிஷிஸ்தலயாத்திரை, (6) சப்தப்பிராகார விநாயகர்யாத்திரை, (7) துவாதசாதித்திய யாத்திரை, (8) அஷ்டபைரவயாத்திரை, (9) நவதுர்க்காயாத்திரை, (10) அயோத்தியாதிசப்தபுரிஸ்தல யாத்திரை, (11) ஏகாதசருத்திரயாத்திரை, (12) ஓங்காரேசர்முதலிய 14-ஸ்தலயாத்திரை, (13) அமிருதேசர்முதலிய, 14-ஸ்தலயாத்திரை, (14) சைலேசர்முதலிய, 14-ஸ்தலயாத்திரை, (15) அஷ்டமகாலிங்கயாத்திரை, (16) யோகினிகள், அறுபத்துநான்கையும் தரிசிக்கிறயாத்திரை,(17)பஞ்சதீர்த்த கட்டயாத்

திரை (18) மூன்றுநாள் செய்யவேண்டிய பஞ்சக்குரோசயாத்திரை, (19) மாசம்மாசம் புண்ணியதிதிகளில் செய்யும் யாத்திரை, (20) திதிவாரயோகங்களில் செய்யும்யாத்திரை, (21) வாரயாத்திரை, (22) யோகயாத்திரை, (23) வடதிக்கில்செய்யும்யாத்திரை (24) தென்திக்கில் செய்யும்யாத்திரை.

இக்கலியிலும், மகமதியராய்ப் பிறந்து வளர்ந்த, கபீர்தாசரும், அநுமாரை இதில்தரிசித்த துளசிதாசரும், அஷ்டபதிகள்விசுவேசர் பேரிலும் விஷ்ணுவின்பேரிலுஞ் செய்தஜயதேவரும், இன்னும் அனேகபக்தர்கள் முக்திபெற்றஸ்தலம். இந்தடவனில் வடபுறம் வருணையும், தென்புறம் அசியும், கங்கையில் சேருவதால் இதற்கு வாரணசியென்றுபெயர். சோமவாரம் முச்சியம். அடியில்கண்ட (108) முக்கிய சிவஸ்தலங்களுண்டு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், திருநாவுக்கரசு நாயனாரும் வாரணாசியென்று பாடிய வைப்புஸ்தலம்.

6 வருணைசங்கமகட்டம்:—சங்கமேசர், வேதேசர், வாசிஷ்டேசர், கௌதமேசர், நக்ஷத்திரேசர், ஞானமாதவர், ஆதிகேசவர், சர்வவிநாயகர், கேசவாதித்யர், சுவேதத்வீபதீர்த்தம் (காசி பிந்துமாதவஸ்தலமென்றும், அவர் சிவனுக்கு அளித்ததென்றும் நாரதீயபுராணம் கூறுகிறது.)

7 அசிசங்கமகட்டம்:—சங்கமேசர், அமரேசர், ஜநகேசர், அசிமாதவர், திருவிக்கிரமர், துர்க்கை, துர்க்காவிநாயகர், மாயாபுரி தீர்த்தம்.

8 ஞானவாபியைச்சுற்றிலும் உள்ளது:—அவிமுக்தேசர், மோக்ஷத்துவாரேசர், பாதந்திரேசர், பரதர்ப்பேசர், பிரதிகிரீசர், நிஷ்களங்கேசர், மார்க்கண்டேசர், மகேசர், மோக்ஷேசர், மகாகாலேசர், கங்கேசர், தாரகேசர், அக்ஷரேசர், அபயப்பிரதேசர், வீரபத்திரேசர், சுமுகவிநாயகர், மோதகவிநாயகர், பிரமோதவிநாயகர், துர்முகவிநாயகர், கணநாதர், தண்டபாணி, நந்தி.

9 துண்டிராஜராலயம்:—யக்ஷேசர், துண்டிராஜகணபதி, யக்ஷகணபதி, நைமிசதீர்த்தம்.

10 அக்ஷயவடம்:—சுருலேசர், துரோபதேசர், திருயூதித்யர், ஆதித்தியர்.

11 அந்நபூர்ணிசந்நிதி:—விசுவேசர், வீரபத்திரேசர், அந்நபூர்ணி, கணபதி, பவாநிகௌளரி, பவாநிதீர்த்தம், அஷ்டாங்காஸ்யை.

12 மணிகர்ணிகா கட்டம்:—மணிகர்ணிகேசர், மகேசர், மணிகர்ணிகவிநாயகர், சித்திவிநாயகர், விஷ்ணு, சக்கரதீர்த்தம், பகீரதன் கங்கையைக் கொண்டுவருமுன், விஷ்ணு தன் சக்கரத்தால்கிறி, மடுவுண்டாக்கி தபசு செய்வதைக்கண்டு விசுவேசர் மகிழ்ந்து நருத்தனஞ்செய்தமையால், காதிலிருந்து குண்டலத்தின் ரத்நினம் விழுந்த இடமாகிய மணிகர்ணிகை இதிலும் 6-7-13-14 லக்கமுள்ள ஐந்து கட்டங்களிலுப்கங்கையில் ஸ்நானஞ்செய்தால் இஷ்டசித்தியும் முக்தியுமுண்டு. ஸ்மசாநம் முக்கியம். சனிக்கிழமை விசேஷம் பிந்துமாதவருமுண்டு.

13 தசாசுவமேத கட்டம்:—அசுவமேதேசர், அமிருதேசர், சூலடங்கேசர், ஆதிவராகேசர், பிரயாகைமாதவர், வந்திதேவி, அபயவிநாயகர், மயூஷாதித்யர், பிரயாகை தீர்த்தம், கங்கை யமுனை சரஸ்வதியுஞ் சேர்ந்த திருவேணி, பிரயாகேசர், ருத்திரர், சீதளையம்மை, பிரும்மா பத்து அசுவமேத யாகஞ்செய்தவிடம்.

14 பஞ்சகங்கா கட்டம்;—கபர்த்தீசர், மங்களகௌளரி, பிந்துமாதவர், பிந்து தீர்த்தம், காஞ்சிபரதீர்த்தம், ஞாநவிநாயகர், துவார விநாயகர், அபிமுக்த விநாயகர், மித்திர விநாயகர், மங்கள விநாயகர், மயூஷாதித்யர், கங்கை, யமுனை, சரஸ்வதி, தருமநதி, சூரியகிரணை இந்த ஐந்தும் சேர்ந்ததால் பஞ்சகங்கை காசிஸ்தலங்களில் இறக்கும் ஜீவர்களுக்கு, விசுவேசர் ராமதாரகோபதேசஞ் செய்வதால், முக்தி.

15 கேதார கட்டம்:—கேதாரேசர், காமாக்ஷி, பிரும்மோற் சவம் பிரபலம். கோவிலும் பெரிது. இது தவிர மற்ற லிங்கங் களை யாரும் பூசிக்கலாம்.

16 அநுமந்த கட்டம்:—அநுமந்தேசர், விசுவகர்மேசர், நகு லேசர், ராமேசர், சுமதேசர், ரிபுபைரவர், ராமர், அநுமார்.

17 துர்க்கா கட்டம்:—துர்க்காகுண்டத்தில் திலவர்ணேசர், குக்குடேசர், துவாரேசர், பிரும்மசாரி துர்க்கை, சண்டபைர வர், நரசிம்மர், ராமர்.

18 காகராமகல்லி:—ஜோதிரூபேசர், கமலாஸ்ப தேசர், வேங்கடேசர்.

19 சங்கடா கட்டம்:—வாகீசர், பருப்பதேசர், வீரேசர், கருணேசர், வாசிஷ்டேசர், வாமதேவேசர், சேநாவிநாயகர், லம்போதாவிநாயகர், சிந்தாமணி விநாயகர், சீமாவிநாயகர்.

20 அரிச்சந்திர கட்டம்:—அரிச்சந்திரேசர், அரிச்சந்திர ராஜன் வீரபாகுவிடம் அடிமையாகிக் காத்த ஸ்மசாநம்.

21 லலிதா கட்டம்:—கங்கேசர், கருணேசர், திருசந்தி ரேசர், காசிதேவி, லலிதாதேவி, கங்காதித்யர், காசிபுரதீர்த் தம், லலிதாதீர்த்தம், துவாதசி முக்கியம்.

22 மீர்கட்டம்:—தருமேசர், விசுவபாகுகர், ஜராசந்தேசர், விசாலாக்ஷி, கௌரி, ஆசாவிநாயகர், விசாலாக்ஷி தீர்த்தம், விருத்தாதித்யர்.

23 மான்மந்திர கட்டம்:—சோமேசர், தால்ப்யேசர், வரா கேசர், பாரதி, ராமேசர், லக்ஷ்மீவிநாயகர், ஸ்தூலதந்த விநா யகர், லக்ஷ்மீ நாராயணர்.

24 பாலமுகுந்த சவுட்டா:—பிரும்மேசர்.

25 அகஸ்திய குண்டம்:—அகஸ்தியேசர்.

26 சங்கம்வாடி:—துவாரபுரீசர், காசியபேசர், ஆங்கீர ஸேசர், மகாகௌரி, துர்க்கா, சங்கடையம்மை, சங்கத்து

வாரை, ஹரிகேசவர், கிருஷ்ணர், ருக்குமிணி, விமலாதித்யர், துவாரகா தீர்த்தம்.

27 கோதயீசவுக்கு:—கோகர்ணேசர், ஆடகேசர், கீசகேசர், பாரபூதேசர், வைத்திநாதர், அஸ்திக்ஷேபதடாகம்.

28 துருவேசுவரம்:—துருவேசர், சதுர்த்தந்த விநாயகர்.

29 மச்சரஹட் கட்டம்:—சித்திரகுப்தேசர்.

30 சந்துநாகுகீகல்லி:—சித்திரகண்டேசர், துர்க்கை, சாந்தணியில் சித்திரகண்ட கணபதி.

31 சாக்ஷிவிநயாகர் சந்நிதி:—மகப்பிரகாமேசர், பிரீதிகேசர் கலிப்பிரிய விநாயகர், சாக்ஷி விநாயகர்.

32 கோத்தவாலிடோலா:—ஈசாகேசர், கஜகர்ணவிநாயகர்.

33 காளிகாகல்லி கட்டம்:—சுக்கிரேசர், சண்டி சண்டேசர், மததக்தேசர், காளராத்திரி துர்க்கா, சிருஷ்டி விநாயகர், சுக்கிரவாரம் முக்கியம்.

34 சுத்தகூபத்தில்:—பவாநிசங்கரர், சுத்தகூபம்,

35 யவவிநாயகர் சந்நிதி:—ராஜராஜேசர், யவவிநாயகர்.

36 கோவா பஜாரில்:—லாங்கூலேசுவரர்.

37 பிபீலிகா கட்டம்:—கங்கேசர்.

38 பசுபதீசுவரம்:—பசுபதீசர்.

39 சீதளாகல்லி கட்டம்:—பிதாமகேசர், கலசேசர், கலியுகேசர், சீதளையம்மை.

40 சித்தேசுவரம்:—சந்திரேசர், வித்யேசர், சித்தேசுவரி, சந்திரகூபம், அமாவாஸை இதில் முக்கியம்.

41 நீமவாலிபிரபுரி:—வித்தியேசர்.

42 அக்கிநீச கட்டம்:—அக்கிநீசர், உபசாந்தேசர்.

43 கோசல கட்டம்:—நாகேசர், நாகேசவிநாயகர், பிருகுகேசவர்.

44 சயா கட்டம்:—கோப்பிரேக்ஷேசர், முக நிர்மாலிகா கௌரி, நரநாராயணர், கோப்பிரேக்ஷ தீர்த்தம்.

45 சகராகந்தகல்லி:—சதுர்வேதேசர், பிரும்மேசர்.

46 பூதபைரவர் சந்நிதி:—நிவாஸேசர், வியாக்கிரேசர், ஜேஷ்டேசர், ஜேஷ்டகௌரி, ஜேஷ்ட விநாயகர், ஜேஷ்ட வாபி, பூதபைரவர், பீஷணபைரவர்.

47 லக்ஷ்மீ குண்டம்:—லக்ஷ்மீசர், லக்ஷ்மீகௌரி, லக்ஷ்மீதீர்த்தம், மயூரியை, க்ஷணிதாக்ஷ விநாயகர்.

48 பிரம்மேசுவர கட்டம்:—பிருமேசர், சிங்கதுண்டவிநாயகர், கிரிஜாநதி.

49 பித்ரு குண்டம்:—பிதாமகேசர், பிதுரேசர், க்ஷிப்ரப்பிரசாத விநாயகர்.

50 பாரபூதேசுவரம்:—பாரபூதேசர், ராஜவிநாயகர்.

51 ராமகட்டம்:—ராமேசர், குசேசர், லவேசர், காலவிநாயகர், ராமதீர்த்தம்.

52 ராஜுமகல்:—என்பது (பிரும்மன் ஹால்) பிரும்மேசர், வக்ரதுண்ட விநாயகர், கோபாலர். 64-யோகினிகளின் விபரம்—1. 22-ஆவது ஸ்தலத்திலுள்ள விசாலாக்ஷி. 2. 23-இல் உள்ள பாரதி, 3. 47-இல் உள்ள மயூரி. 4. 11-இல் உள்ள அஷ்டாங்காளிகா. 5. 98-இல் உள்ள காமாக்ஷி. 6-சுக்யை, டவுடிராவில். மற்ற 58-ம் ராஜுமகலில் உள்ளன. 7-சிங்கமுகி, 8-கஜாநனை, 9-கிருத்திராக்ஷி, 10-உஷ்டிரக்ரீவை, 11-சர்ப்பாநனை, 12-உலூகி, 13-சிவபலி, 14-விகடாநநீ, 15-அஷ்டவக்ரா, 16-கோடராக்ஷி, 17-குஞாயி, 18-விகடலோசநீ, 19-சுகோதரி, 20-லலசித்தை, 21-சிவதந்திருஷ்டை, 22-வாநராநனை, 23-ரிஷியை, 24-கேகராக்ஷி, 25-பிருகத்துண்டை, 26-கபாலஹஸ்தை, 27-ரக்தாக்ஷி, 28-சேநாயை,

29-கபோதிகை, 30-பாசஹஸ்தை, 31-தண்டஹஸ்தை, 32-பிரசண்டி, 33-சண்டவிக்கிரமி, 34-சிசுக்நி, 35-பாவயக்ஞை, 36-காலாயை, 37-நிதிர்பாயின்யை, 38-வசாதயாக்ஷே, 39-கர்ப்ப பஜா, 40-சவஹஸ்தை, 41-ஆந்திரமாலிநி, 42-ஸ்தூலகேசி, 43-பிருஹதகுக்ஷி, 44-சர்ப்பாஸ்யை, 45-பிரேதவாகநி, 46-தண்டசூத்ரி, 47-கிரோஞ்சிரி, 48-சுகசிர்ஷை, 49-விருக்ஷாநனை, 50-வியாதாசியை, 51-தூமநிசுவாசி, 52-வியோமைகசுணே, 53-ஊர்த்ததடஸ்யி 54-தாபிநீ, 55-சோஷண்யை, 56-கோடரீ, 57-ஸ்தூலநாசிகை, 58-வித்யுத்பிரபை, 59-வலாகாஸ்யை, 60-மார்ஜாலியை, 61-கடபூதநி, 62-பிராம்மி, 63-வைஷ்ணவி, 64-ருத்திரை யோகிநிகளே யெல்லாம் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியில் தரிசித்தல் வெகு முக்கியம்.

52 வங்காளிடோலா:—பாதாளேசர், சர்வேசர், கருணேசர், வசுர்தவிநாயகர்.

54 சிவகிரி:—சிவகிரீசர், திருமுகவிநாயகர்.

55 வடகணேசர் கட்டம்:—ஆதிவிசுவேசர், ஜம்புகேசர், தந்தஹஸ்த விநாயகர், வக்ரதண்ட விநாயகர், வட கணேசர்.

56 திருலோசந கட்டம்:—திருலோசநேசர், ஹிரண்யகர்ப்பேசர், உத்தண்டமுண்ட விநாயகர், பிரணவ விநாயகர், சம்ஹாரபைரவர், அருணாதித்யர், நருமதாநதி.

57 ஆதிமகாதேவர் சந்நிதி:—ஆதிமகாதேவர், ஆதிவிசுவேசர், பார்வதீசர், நருமதேசர்.

58 பிரகலாத கட்டம்:—பிரகலாதேசர், சர்ப்பேசர், பிரசண்ட விநாயகர், பிபீலிகா தீர்த்தம்.

59 கிருமி குண்டம்:—கணேசர், கூடதந்த விநாயகர்.

60 மகேசுவர கட்டம்:—மகேசர், சாலகடங்கட விநாயகர்.

61 பிசாச விமோசநம்:—பஞ்சாக்ஷரேசர், பஞ்சாஸ்யவிநாயகர், வரம்ப விநாயகர், லோலார்க்கர்.

62 சித்திரகூடதலாபா:—சித்திரேசர், விக்கிராஜவிநாயகர்

63 ராஜகாட் தெருவில்:—பாரபூதேசர், ஸ்வரலீலேசர், ராஜபுத்திர விநாயகர், வரத விநாயகர், விஷ்ணு, விஷ்ணு தீர்த்தம்.

64 பதயநியில்;—அர்க்கேசர், அர்க்க விநாயகர், லோலார்க்கர், ஞாயிறில் முக்கியம்.

65 பஞ்சக்குரோச வழி;—விஷ்வக்நேசர், தெகலிவிநாயகர், சோடச விநாயகர், கருடாரூடர்.

66 கர்த்தமேசுவரம்;—பஞ்சக்குரோசயாத்திரையில் முதல் நாள் தங்குமிடம். கர்த்தமேசர், சோமநாதர், கர்த்தம தீர்த்தம்.

67 ஷை ஸ்தலத்துக்கு எதிரில்;—விரூபாக்ஷர், நீலகண்டர், நாகநாதர், சாமுண்டி.

68 ஷை எதிர்த்தோட்டத்தில்;—மோக்ஷேசர், கருணேசர், வீரபத்திரர், காளகண்டர், கணர், நீலகண்டர், காளகூடர், மகாதேவர், துர்க்கை, விகடாக்ஷர், விமல துர்க்கை, உன்மத்த பைரவர், நந்திகேசர், பிருங்கி.

69 கௌராகாவு;—விமலேசா, யக்ஞேசர், மோக்ஷதர், ஞாநேசர், அமிருதேசர், மகாதேவர், விருபாக்ஷர்.

70 பீமசண்டி;—பஞ்சக்குரோச யாத்திரையில் இரண்டாம் நாள் தங்குமிடம். சோமேசர், பூதநாதர், ஏகபாதர், நாகார்ணவதாரக சிவன். பீமசண்டி விநாயகர், உன்மத்தபைரவர், ரக்தாக்ஷகந்தருவர், பீமசண்டிதேவி, கந்தருவசாகரம்.

71 ஷை தீர்த்தக் கரையில்;—மகா பீமேசர், பைரவர் பைரவி.

72 சிந்துசாகரத்தில்;—காலநாதர்.

73 பீம சண்டிக்கு எதிரில்;—கபர்த் தேசர், காமேசர், கணேசர்.

74 பீமசண்டிசவுக்கண்டியில்:—கணநாதர், சாருமுகேசர், வீரபத்திரர்.

75 ஷ்டி புடலித் தோட்டம்:—உத்கலேசர், ருத்திராணி, உத்தண்ட விநாயகர், தபோபூமி.

76 இராமேசுவரம்:—பஞ்சக்குரோச யாத்திரையில் மூன்றாம்நாள் தங்குமிடம். சோமேசர், இராமேசர், பரதேசர், லக்ஷ்மணேசர், சத்துருக்நேசர், குகேசர், தியாவாபூமீசுவரர், உத்தண்ட விநாயகர், அயோத்தியாபுரி தீர்த்தம். வருணைநதி.

77 ஷ்டி வருணைகட்டம்:—அசங்கியாதலிங்கம், அசங்கியாத தீர்த்தம்.

78 கமோஜவில்:—தேவசங்கேசுவரர்.

79 லயநில்:—சண்டேசர், பாசபாணி விநாயகர்.

80 கசூரியில்:—பிருதிவீசர், சுவர்க்கபூமி.

81 திநதயாலாவில்:—யூபசரேசர்.

82 சுவர்க்கதாரை:—புலஸ்தியேசர், சுவர்க்கத்துவாரேசர்.

83 கோகர்ணத்தின்மேற்கு:—அத்திரீசுவரர்.

84 நாககூபத்தில்:—மார்க்கண்டேசர், மரீசேசர், வாசுகிசர் கார்க்கோடேசர், லோகிதாக்ஷனைச் சர்ப்பம் தீண்டியஸ்தலம்.

85 பாடேகட்டம்;—ஸர்வேசுவரர்.

86 கபிலதாரை;—பஞ்சக்குரோச யாத்திரையில், நான்காம்நாள் தங்குமிடம். ரிஷபத்துவஜேசர், சுவாலா நரசிம்மர்.

87 மந்தாகினியில்;—மத்தமேசர்.

88 கோரகடில்லாவில்;—விருக்ஷேசர்.

89 லாகௌரிடோலாவில்;—ஞாநேசர்.

90 மசோச்திரிக்குவடபுறம்;—ஓங்காரேசர் பிரசவேசர்.

91 மச்சோதிரிக்குத்தென்பறம்;—காமேசர்.

92 சிகராகாடிலாவில்;—திருபுராந்தகேசர்.

93 கௌசாநகஞ்சநஙதநவநத்தில்;....ஊர்வசீசுவரர்.

94 ஈசுவரகங்கியில்.—ஆக்நீத்திரேசர், ஆக்நீத்ரகுண்டம்.

95 நகிகட்டத்தில் :—மதுரேசர், சித்ர தர துர்க்கா, மதுரா தீர்த்தம்.

96 விருத்தகாலத்தில்:—விருத்தகாலேசர், தக்ஷேசர், சதீசர், ரத்நேசர், கிருத்திவாசேசர், அசிதாங்கபைரவர், அவந்திதீர்த்தம்.

97 லாட்டபைரவத்தில்:—பைரவேசர், கபாலபைரவர்.

98 காமாக்ஷிபுரத்தில்:—காமேசுவரர். காமாக்ஷி, குரோத பைரவர்.

99 மட்டியாகட்டம்:—சைலேசர், சைலபுத்திரி துர்க்கா, ஆசா விநாயகர், தருமகூபம்.

100 வாகீசுவரம்:—வாகீசர், வாகீசுவரி, கந்தமாதா துர்க்கா, சித்தேசர், குகை, கங்கை.

101 வீரேசுவரம்:—அங்காரகேசர், வீரேசர், காத்தியாயநி துர்க்கா, மங்களவாரம் முக்கியம்.

102 இமயகட்டம்:—இயமகிரீசர், இமபாதித்யர்.

103 காமேசுவரம்:—காமேசர், ககோலாதித்யர்.

104 சூரியகுண்டம்:—சூரியேசர், சாம்பாதித்யர்.

105 அகலிகாகட்டம்:—கௌதமேசர், ஜேஷ்டேசர், அசாட்யேசர், உத்தரார்க்கர்.

106 சதுர்ப்பஜார்:—சர்வேசர், பாசபாணி விநாயகர்.

107 தூபசண்டியில்:—விகடேசர், விகடவிநாயகர்.

108 புல்வரியாதோட்டம்:—கூச்மாண்டேசர், கூச்மாண்ட விநாயகர்.

109 சங்கடையம்மை சந்நிதி:—கிருஷ்ணேசுவரர், யாக்ஞவல்க்யேசர், விருத்தேசர், புதனும் வியாழனும் முக்கியம்.

110 கங்கைக்கரையில் (யமகட்டம்)-யமேசர், யமதீர்த்தம்.

111 காடகீகவேலி:—பாபபக்ஷேசர், ஆமர்த்த விநாயகர், சாலமாதவர்.

112 குரு க்ஷேத்திர கட்டம்:—ஸ்தாநேசர், கிருஷ்ணர், ராஜஸ்தம்பம் 5-முதல் 112-லக்கம் வரையில் உள்ள 108-ஸ்தலங்களும் காசிபுராணத்தில் 108-அத்தியாயங்களில் உள்ள சுமார் 500-லிங்கங்களும், 64-யோகினி சத்திகளும், 64-விநாயகரும், 12-ஆதித்யரும், நவ கௌரி, நவ துர்க்கா, அஷ்டபைரவர், பிந்து மாதவாதி அநேக விஷ்ணு மூர்த்தங்களும், அயோத்தியாதி சப்தபுரி தீர்த்தங்களும் இக்கலியுகத்திலும் பக்தர்கள் ஸ்தாபித்துப் பூஜித்த இதில் எழுதாத அநேக லிங்கங்களும், அடங்கியுள்ள முக்திஸ்தலம். டவுன் நாலு சதுரமைலுள்ளது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், திருநாவுக்கரசுநாயனாரும் வாரணாசி என்று பாடியிருப்பதால், வருணைநதிக்கும், அசிநதிக்கும் உள்பட்ட எல்லாலிங்கங்களும், ஸ்தலங்களும் உள்பட பாடினதாகத் தெரிகிறது.

113 வியாஸகாசி:—கங்கையின் கீழ்கரையிலுள்ளது. சிவஸ்தலம். விசுவேசர், கிரிஜாதேவி, ராமநகரம், வியாசகூபம், வியாஸர் பூஜித்தது. காசிராஜனது பழைய அரண்மனையும் உண்டு.

114 சர்னாத்:—காசியின் வடகிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விசுவேசர். இதில் பௌத்தர்கள் வெகு பிரபலம்

115 பாங்கிப்பூர்:—என்பது (சோனேபூர்) சிவஸ்தலம். கல்கத்தாவின் வடமேற்கு லயனில் 344-வது மைலில் ஜங்ஷன் ரெயில்ஸ்டேஷன். கயைக்குப்பிரிவு. சங்கமுகேசர், உமை, ஆதிமூலமூர்த்தி, கஜேந்திரமோக்ஷ ஸ்தலம். வடக்கிலிருந்து கண்டகிநதி கங்கையில் சேருகிறது. விசுவாமித்திரர் ராம

லெக்ஷமணரை அழைத்து வரும்போது தங்கியது. கார்த்தி கைமாசம் திருநாள் முக்கியம்.

116 சீதார்மஹி:—விஷ்ணுஸ்தலம் சோனேப்பூரின் மேற்கு 13-மைலில் உள்ளது. ரெயில்ஸ்டேஷன். ராமர், சீதை. ஜநக ராஜன் உழும்போது சீதை இதில் வெளிப்பட்டாள். இதில் ஸ்ரீராமநவமி உற்சவம் முக்கியம்.

117 ஷை சீதாமர்ஹி:—சிவஸ்தலம். விசுவேசர், கங்கை, இதில் ஒன்பது பிரசித்திபெற்ற ஆலயங்களுண்டு.

118 மிதிலாபுரி:—விஷ்ணுஸ்தலம். ராமர், லெக்ஷுமணர், சீதை. ராமர் சிவன் வில்லைமுறித்துச் சீதையைக் கல்யாணஞ் செய்தஸ்தலம். யாக்ஞவல்கியரிடம் ஞானோபதேசம் பெற்ற ஜநகர் ஞானவானாகி சுகப்பிரும்மரிஷிக்கும், தான் உபதேசஞ் செய்து, மிதிலை நெருப்பு பிடித்ததையும்லெக்ஷியஞ்செய்யாமல் விரக்தி யடைந்தவர்.

119 தனுர்ப் பங்கம்:—என்பது (தர்ப்பங்கா) சிவஸ்தலம். ஞானேசர், ஞானேசுவரி, ராமரால் முறிபட்ட வில்லும் இதிலுண்டு.

120 கேயா:—காசியின் தென்கிழக்கு 130-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ரெயில்டேஷன். பிதாமகேசர், உமை, பல்குநதி, கயாசுரன் கோலாகலகிரியில் தவஞ்செய்து தானும் பிரஜைகளும் சாகாவரம்பெற்று, யமலோகம் பாழானதால் யமன் பிரும்மனிடமும், பிரும்மன் விஷ்ணுவினிடமும், முறையிட, விஷ்ணு பிரும்மாவை அவன் உடலில் யாகஞ்செய்யச் சொல்லி, அவன் கேட்டுக்கொண்டபடி, இதில் பிண்டம்வைத்தால், பித்ருக்கள் பூர்ணதிருப்தி யடையும்படி வரங்கொடுத்த ஸ்தலம், கயாவாளிகளை வரித்து சிரார்த்தஞ் செய்யவேண்டும் சுருதியில் சொல்லியபடி பஞ்சகயை, அஷ்டகயை, மகாகயை,

யென்று மூன்றுவித சிரார்த்தமுண்டு. கிரௌஞ்சபதம், அக ஸ்தியபதம், சூரியபதம், கார்த்திகேயபதம், பஞ்சாக்கினிபதம், காசியபபதம், ருத்திரபதம், பிரும்மபதம். ஜநார்த்தநபதம், அக்ஷயவடம், பல்குநிநதி இவைகளில்பித்ருக்களுக்கும், தனக்கும், சேர்ந்தவர்களுக்கும் பிண்டம் வைக்கவேண்டும். முன் யுகங்களில் பித்ருக்கள் நேரில்வந்து பிண்டங்களைப் புசித்தார்கள். கலியுகத்தின் ஆதியில் பாரத்துவாஜரென்னும் அந்தணர் இதில் பிண்டம் வைக்கும்போது இரண்டு பித்ருக்கள் வந்ததையால் தன் தாயைக்கேட்டு, க்ஷேத்திரபிதா, பீஜ பிதாவென்று அறிந்து, இனிபித்ருக்கள் நேரில் வாராமல் ஜநார்த்தநர் மூலமாய்ப் பிண்டம் அடைகிறதென்று ஏற்பட்டது. ஈசானுதி பதினைன்குபாதங்களும், ராமகிரி, பிரேதகிரிகளுமுண்டு. இது சைவாகம ஸ்வயம்பு ஸ்தலம்.

121 ஷை கெயா கதாதரர்:—விஷ்ணுஸ்தலம். அக்ஷயவடத்தில் கடைசிநாள் சிராத்தஞ்செய்து பிண்டம் வைக்கவேண்டும். சுமார் 1500-வருஷங்களுக்கு முன் இதில் பௌத்தர்கள் அதிகமாயிருந்ததால் மடங்களும், கோயில்களும் பிரபலம்.

122 மாங்கீர்:—விஷ்ணுஸ்தலம், 115-சோனைப்பூரின் கிழக்கு 48-மைலில் உள்ளது. ரெயில் ஸ்டேஷன், ராமர், சீதை, லக்ஷ்மணர், பாதர், சத்துருக்நர், அநுமார். இதில், கங்காநதி மத்தியிலுள்ள மலையில் கோட்டையும், கோயில்களுமுண்டு. ஏழுநாளில் சுகப்பிரும்ம ரிஷிபீடம் பாகவதபுராணம் பனிரண்டு ஸ்கந்தங்களும் பக்தியோடு கேட்டு, நற்கதியடைந்த அபிமன்யுவின் புத்திரனை பரிக்ஷித்துராஜனைத், தன் தகப்பன்மீது லீலையாகச் செத்தபாம்பை போட்டதற்கு தக்ஷகனென்னும் பாம்புகடித்து இறக்கும்படி, சிறுபிள்ளைத்தனமாக சபித்த சிருங்கிரிஷியின் ஆசிரமம். இதிலுள்ள சீதாகுண்டம் உஷ்ணஜலம்.

123 பிரயாகை:—என்பது (அலஹபாத்) ரெயில்டேஷன். காசியின்மேற்கு 100-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சோமநாதர், திருவேணி, கங்கை, யமுனை, சரஸ்வதி சேருவதால் திருவேணிசங்கமம், வேணிதானமும், முண்டநமும், சுமங்கிலிகள்கூட செய்யலாமென்றும், மாகஸ்நாநஞ் செய்தால் இஷ்டசித்தியும், முக்தியும் உண்டென்றும் சுருதி சொல்லுவதால் மாகஸ்நாநம் எங்கே செய்தாலும், திருவேணிக்கும், கிருஷ்ணனுக்கும், அர்க்கியமும், தாநமும்செய்வது முக்கியம். காசிபோல இதிலும் விசுவேசர் முதலிய அநேக லிங்கங்களுண்டு. சைவஆகம ஸ்வயம்புஸ்தலம்.

124 பிரயாகை விஷ்ணுஸ்தலம். மாதவர், கிருஷ்ணர், ருக்குமிணி, சத்தியபாமை, அக்ஷயவடம். சுமார் 2000-வருஷங்களுக்குமுன் அவந்தியாகிய உஜ்ஜயினியில் அரசாண்ட அசோகராஜன் புத்தமதக் குருக்களை எங்குமனுப்பி, பௌத்தமதத்தை ஆசியா முழுவதும் பரவச்செய்தான். அக்ஷயவடத்தில் கோட்டையும், 30-அடி உயரமுள்ள புத்த விக்கிரகமும் ஸ்தாபித்தான்.

125 மஜௌரா:—விஷ்ணுஸ்தலம். ஹரித்வாரலயனில், லக்நௌவிலிருந்து 116-மைலிலுள்ள அக்பர்பூர் ரெயில்டேஷனினின்று 10-மைலில் உள்ளது. ராமர், சீதை, சரயூநதி, தசரதர், ஜலமெடுக்கும் ரிஷிபுத்திரனை யறியாமல் மிருகமென்று கொன்றதால், கண் தெரியாத ரிஷி புத்திரனது தாய் தகப்பனால், தசரதர் மரணம் அடையும்போது பிள்ளைகள் உதவாவண்ணம் சாபம் ஏற்பட்டஸ்தலம்.

126 லக்ஷ்மணபுரி:—என்பது(லக்னௌ) விஷ்ணுஸ்தலம். டவுன். ரெயில்ஸ்டேஷன். ராமர், சீதை, லக்ஷ்மணர், கௌதமிநதி அநேக கோவில்களுண்டு. லக்ஷ்மணருடைய பிள்ளைகளுக்கு பிரித்துகொடுத்த நகரம். அலஹபாத்தின் வடமேற்குள்ளது.

127 நைமிசாரண்யம்:—லக்னௌவின் தென்மேற்கு 30-மைலிலுள்ள ஸாண்டிலி ரெயில்ஸ்டேஷனிலிருந்து வடக்கே 20-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், சிறுகிராமம் இதுரெயில் ஸ்டேஷன். தேவராஜமூர்த்தி, புண்டரீகவல்லி, ஹரிலக்ஷ்மி, கங்காநதி, விசிராந்ததீர்த்தம், ஹரிவிமானம், இந்திராதிதேவர்களுக்கும், சௌனகாதி ரிஷிகளுக்கும், சதருமனுக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். பலராமர், பாரதயுத்தத்தைச் சகியாமல், தீர்த்தயாத்திரை வந்து இதில் தன்னை வணங்காத சூதனைக்கொன்று, ரோமஹர்ஷண புத்திரர், உக்கிரசிரவஸை புராணஞ்சொல்ல அமர்த்தி, பின் ரிஷிகள்கேட்டபடி சூதனைப் பிழைப்பித்து, இல்வலபுத்திரனை பல்வலாசுரனைக்கொன்ற ஸ்தலம்.

128 ஷ நைமிசாரண்யம் சிவஸ்தலம், தேவதேவேசர், உமை, சைவாகமஸ்வயம்பு ஸ்தலம். ராமாயணம், பாரதம், 18-புராணங்களாகிய ஸ்காந்தம், பாகவதம், விஷ்ணு, பிருமம், பாத்மம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கிநேயம், பவிஷியம், கைவர்த்தம், லிங்கம், வாராகம், வாமனம், கூர்மம், மச்யம், காருடம், சைவம், பிரும்மாண்டம் இவைகளையும், உபபுராணங்கள், 18-ஐயும், சூதர் சௌனகாதிரிஷிகளுக்குச் சொன்னார். ரிஷிகள் தபசுசெய்யவும், சக்கரத்தால், பிரும்மா அமைத்ததால், நைமிசமென்று பெயர்.

129 தேவதாருவனம்:—நைமிசத்தின் வடகிழக்கு தண்டேசர், உமை, சைவாகமஸ்தலம்.

130 திருசந்தி:—நைமிசத்தின் வடகிழக்கு ஊர்த்துவரேதர், உமை, சைவாகமஸ்தலம்.

131 மிஸ்ரிக்:—லக்னௌ டவுனின் வடகிழக்கு 55-மைலிலுள்ள சீதாப்பூர் ரெயில்ஸ்டேஷனிலிருந்து 13-மைலில், சிவன், உமை, அமிருதங்கடையும்போது, சுராசுரர்களின்

ஆயுதங்களைவிழுங்கி, முதுகு எலும்புடன் வைத்துக்கொண்ட ததீசிரிஷியை, இந்திரன், விருத்திராசுரனைக்கொல்லப் புது வச்சிரஞ் செய்வதற்கு, முதுகு எலும்பையாசிக்க, ததீசிரிஷி சமஸ்ததீர்த்தங்களில் ஆடி, க்ஷேத்திரதரிசனமுஞ் செய்வது என் எண்ணமெனலும், திருமூர்த்திகளும் சமஸ்த தீர்த்தங்களும் இந்த ஸ்தலத்தில் வந்து, ததீசிக்குத் தரிசனந்தந்து, முக்தியடைவித்தார்கள். இந்திரனும் அவர் எலும்பால் வச்சிராயுதஞ் செய்தார். இப்பவும் மூர்த்திகளும், சமஸ்த புண்ணியதீர்த்தபலன்களும், இதில் உண்டு

132 வடமதுரை:—ஆக்ராவுக்கு வடமேற்கு 30-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, பலராமர், யமுனைநதி, சப்தபுண்ணியஸ்தலம். துஷ்டநிக்கிரகஞ் செய்து பூமிதேவியின் பாரந்தீர்க்கப் பிரார்த்தித்த பிரும்மாதி தேவர்களுக்கும், தேவகி வசுதேவர்களுக்கும் பிரத்தியக்ஷம். தேவகிவயிற்றில் பிறக்கும் எட்டாவதுபிள்ளையால் தனக்கு மரணமென்று சொன்ன அசரீரிவாக்கியம்கேட்டபின், தேவகி வசுதேவர், ஆறுபிள்ளைகளைக் கொன்ற கம்சனால் விலங்கிவிடப்பட்டும், ஏழாவது பிள்ளை பலராமர் மாயையால் சங்கருஷணஞ் செய்யப்பட்டும், எட்டாவது பிள்ளை ஸ்ரீகிருஷ்ணனாக அவதரித்து விஷ்ணுவாகத் தரிசனந்தந்த ஸ்தலம். பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். வடமதுரை டவுன் ரெயில் ஸ்டேஷன்.

133 ஷை வடமதுரை சிவன், உமை, ரங்கநாதர், ரங்கநாயகி, ஸ்ரீரங்கம்போல் இதில் பிரம்மோற்சவங்களும் உண்டு.

134 திருஆய்ப்பாடி.—என்பது (கோகுலம்)

விஷ்ணுஸ்தலம், மதுரைக்குத் தென்கிழக்கில் 6-மைலில் உள்ள மகபன் பட்டினத்துக்கு ஒருமைலில் உள்ளது. நவ

மோகன கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, யமுனை, மருதமரம், வசுதேவர், கிருஷ்ணனைப் பிறந்தவுடன் எடுத்து, யசோதையிடம் வைத்தார். இதில் வசுதேவபாரி ரோகிணிக்குப்பிறந்த, பலராமரும், கிருஷ்ணரும், வளர்ந்தார்கள். கண்ணன், பூதனையை அவளுடைய முலைப்பாலையுண்டு கொன்றும், சகடாசுரனைத் தொட்டிலிலிருந்து உதைத்தும், வதைத்தும், நாரதர்சாபத்தால் மருதமரமான நளகூபர்களுடைய உரலில் கட்டுண்டபால உருவுடன் சாபத்தைத் தீர்த்தும், யமுனைக்கரையில் கோபிகைகளின் வஸ்திராபஹரணஞ் செய்தும்; கோபிகைகளின் வீடுகளில் பால், தயிர், வெண்ணெய்களைத் தின்றும், பூனைக்கும், நாய்க்குமிட்டும், யசோதைக்கு விஷ்ணுவாக வாயில் சகல உலகங்களைக்காட்டியும், பாலலீலைகள் அநேகம்செய்தும், கம்சனு லழைக்கப்பட்டும், மதுரைக்குப்போகும் வழியில், அக்ரூரருக்கு தசாவதாரக்காக்ஷி, யமுனையில் காட்டியும், மதுரைபோய், மாமனுகிய கம்சனுல் கொல்ல ஏவப்பட்ட யானையையும், மல்லர்களையுங்கொன்று, சபைக்குவகி, கம்சனையுங் கொன்றூர். யசோதைக்கும், நந்தகோபருக்கும் பிரத்தியக்ஷம். குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். இதில் பழைய கோவில்களை மகமதியர்கள் இடித்ததால், பம்பாய் குசராத்திப் பிரபுக்கள் புது ஆலயங்கள் வெகு நாகரீகமாய், அமைத்திருக்கிறூர்கள்.

135 கோவர்த்தனகிரி.—மதுரையின் தென்மேற்கு 9-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், பரமபுருஷன், பரிமளவல்லி; இந்திரசரசு கோவர்த்தனதீர்த்தம், 10-மைல் சுற்றுள்ள கிரிபிரதக்ஷிணம் முக்கியம். பார்வதியாகிய மாயைக்கும், இந்திரனுக்கும், பிரத்தியக்ஷம். இந்திரபூஜையை கிரிக்குச்செய்ததால் இந்திரன், பெருமழைபெய்யச் சொல்லக் கண்ணன் ஏழுநாள், கோவர்த்தனகிரியை ஒருகையால் குடைபிடித்துப் பசுக்

களையும், கோபி கோபர்களையுங் காத்து, பின் இந்திரனை அநுக்கிரகித்தார்.

136 பிருந்தாவனம்:—மதுரையின் வடக்கு 7-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ராதாவல்லபர், ராதாதேவி, மூன்று புறமும் யமுனை. யமுனையில் 1000-தலைகளுடன் வசித்தகாளீயனென்னும் நாகத்தின் சிரங்களில் கிருஷ்ணன் நர்த்தனமாடி; அவனைத்துரத்தியும், அகாசுரன், பகன், அரிஷ்டன், திருணவர்த்தன், தேனுகன், விருஷபாசுரன், கேசி, சங்கசூடன் முதலிய துஷ்ட அசுரர்களைக் கொன்றும், கோபிகைகளுடன் ராஸக்கிரீடை, ஜலக்கிரீடைகள் செய்தும், பிரும்மா ஒளித்துவைத்த கன்றுகளுக்கும், கோபாலர்களுக்கும், கண்ணன், தானே அவ்வவ்வுருவுடன் பனிரண்டுமாசம் ஒவ்வொரு வீட்டிலிருந்தும், பின் தன்னை வணங்கின பிரும்மனை மன்னித்தும், யாகத்தில் ரிஷிகளை மீறி அன்னமிட்ட ரிஷி பத்தினிகளைக்காத்தும், யமுனையில் வருணலோகம் போன நந்தகோபரை அழைத்தும், மதுரையில் குருவான சாந்தீபினிரிஷி பத்தினி கேட்டபடி இறந்தபிள்ளையை வரவழைத்தும், கிருஷ்ணர் இன்னும் அநேக லீலைகள் செய்தார். ராதைக்குப் பிரத்திய பிருந்தாவனம் ரெயில்ஸ்டேஷன்.

137 ஆக்ரா:—மதுரைக்குத் தென்கிழக்கு 30-மைலில் உள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுகோவில்களும் முக்கியம். ஷாஜிஹானென்னும், மகமதிய அரசனால் யமுனாநதியோரம் சந்திரகாந்தக்கல்லால் அமைக்கப்பட்ட, டாஜிமஹால் எனும் பிரபலமான கட்டடம்வெகு அழகானது. ஆக்ரா டவுன் க்ஷம் ரெயில் ஸ்டேஷன்.

138 உகாலக்ஷேத்திரம்:—என்பது (ஸோரன்) மதுரையிலிருந்து ஹரித்துவாரம் செல்லும் லயனில் 102-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், வராகமூர்த்தி, வராகவதாரஞ் செய்து,

ஹிரண்யாக்ஷனைக் கொன்ற சூகரக்ஷேத்திரம். வராகமூர்த்தி கோரைப்பல்லால் பூமியைத்தூக்கி நிறுத்தினர். பகிரதன் கங்கைகொண்டு வருமுன்னுள்ள, இமவானின் இளையபெண்ணாகிய குடிலாசக்திகங்கை இதில் உண்டு. உகாலக்ஷேத்திரம் ரெயில்ஸ்டேஷன்.

139 இந்தூர்;—காண்டுவாஜங்ஷனின் வடக்கு. 85-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, சுவயராஜாவசிக்குமிடம்.

140 குவாலியர்;—ஆக்ராவின் தெற்கு 60-மைலில் உள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுகோவில் முக்கியம். குவாலியர் ரெயில்ஸ்டேஷன்.

141 ஓங்காரம்;—காண்டுவா ஜங்ஷனின் வடக்கு 39-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஓங்காரேசர், உமை, இதிலுள்ள நருமதாநதி குண்டங்களில், பாணலிங்கங்கள் முக்கியம். ஓங்காரம் ரெயில்ஸ்டேஷன்.

142 அமரேஷ்வர்;—ஓங்காரத்தின் 9-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஓங்காரேசர், ஓங்காரஜீ, நருமதை துவாதசசைவாகமஸ்வயம்பு ஸ்தலம்.

143 மாந்தாதா;—என்பது (வைதூர்யமணிபருவதம்) அமரேஷ்வரின் ஒருமைலில் உள்ளது. சிவஸ்தலம், நருமதைமத்திய தீவில்மலைமேல் மாந்தாதேசர், உமை, மாந்தாதாராஜன் பூஜித்தது. யமுனையில், 7-நாட்களும் கங்கையில் 3-நாட்களும் முழுகிய பலன் நருமதையில் ஒருநாளில் உண்டென்று. நருமதாகாண்டத்தில் சொல்லப்படுகிறது.

144 ஜேப்பூர்;—மதுரையின் தென்மேற்கு 160-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சுவயராஜாவசிக்குமிடம் டௌன் சிவன் உமை, விஷ்ணுவாலயங்களுமுள்ளஸ்தலம்.

145 ஆம்பர்;—ஜேப்பூரின் 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ஆமிரவசேசர், உமை, புராதனமான கோவிலுள்ள புராணஸ்தலம். விஷ்ணுவும்முக்கியம்.

146 புஷ்கரம்;—மதுரையின் தென்மேற்கு 220-மைலில் உள்ள ஆஜ்மீர் ரெயில்ஸ்டேஷனின் தென்மேற்கு 7-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ரஜோகந்தர், தாக்ஷாயணி, தக்ஷயாகத்தில் அனலில் பாய்ந்த வியோகத்தால், சிவனுடைய நேத்திர ஜலமாகிய புஷ்கரம்.

147 ஷை புஷ்கரம் விஷ்ணுஸ்தலம், நாராயணர், லக்ஷ்மி, இதில் பிரும்மாவுக்கும், சரஸ்வதிக்கும் தனித்தனி ஆலயங்களுண்டு.

148 பிரபாசம்;—புஷ்கரத்தின் தென்மேற்கிலுள்ளது. சிவஸ்தலம், சசிபூஷணர், உமை சைவாகமசுவயம்புஸ்தலம்.

149 அவந்தி;—என்பது (உஜ்ஜயினி) மகததேசம், இந்தூரின் 41-மைலில் உள்ளது. சிவஸ்தலம், மகாகாளர், உமை, சப்தபுரிகளிலொன்று துவாதசஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரின் க்ஷேத்திரக் கோவையிலுள்ள வைப்புஸ்தலம்.

150 ஷை உஜ்ஜயினி சிவஸ்தலம், தாரகேசர், சக்தி, சிப்ராநதி சைவாகமசுவயம்புஸ்தலம், இதில் ரெயில்ஸ்டேஷனுண்டு.

151 ஷை உஜ்ஜயினி சிவஸ்தலம், மாடகேசர். உமை, காளிமுக்கியம். விக்கிரமாதித்தராஜன் கட்டிய கோட்டைகளும் இதில் உண்டு. பிருகத்ரதனென்னும் அரசன் ஒருரிஷி கொடுத்த மாம்பழத்தைத் தன் இரண்டு பாரிகளுக்கும் பகிர்ந்து பாதியாய்க் கொடுத்ததால் இருவரும் கருப்பமாகிப் பாதி உடலுடன் பிறந்த குழந்தைகளை எறிந்துவிட, ஜரையாகிய காளி, ஒன்று சேர்த்து, உயிருண்டாக்கிய ஜராசந்தனிதில் ஆண்டு தன்மாப்பிள்ளையான கம்சனை மதுரையில் கிருஷ்ணன் கொன்றதால் 21-அக்ஷோகிணி சைநியங்களுடன் 17-தடவை மதுரைக்குச்சென்று, எதிர்த்ததால், கிருஷ்ணன் ஒரே ராத்திரியில் யாவருடனும் சென்று துவாரகையை உண்டாக்கி, அதில் வசித்து, ஜராசந்தராஜனைப் பீமசேனனால் கொல்லுவித்தார்

152 ஷை உஜ்யினி விஷ்ணுஸ்தலம், கண்ணபிரான், ருக்குமிணி, சத்தியபாமை, இதிலிருந்த சாந்தீபினி ரிஷிபிடம், கிருஷ்ணனும், பலராமரும், குசேலரும் வேதாத்தியயனம் செய்தார்கள்.

153 ஸஹடல்;—என்பது (ஸோகாஜ்பூர்) விராடபுர சமீபம் விஷ்ணுஸ்தலம் கட்கிஜங்ஷனின் கிழக்கு 79-மைலில் உள்ளது. கிருஷ்ணன், ருக்குமிணி, பாண்டவர்கள், பனிரண்டு வருஷம் வனவாஸஞ் செய்தபின், அஞ்ஞாதவாசம் ஒருவருஷம் செய்ய, ஆரம்பிக்கும்போது, ஆயுதங்களை பெரியவன்னிமரத்திலொளித்துவைத்தஸ்தலம். அம்மரத்தடியில் இப்பவும் (டோகாரா) என்னு முற்சவம் வெகுமுக்கியமாய் கொண்டாடிவருகிறார்கள். ஊரும் சத்திரங்களும் உண்டு. ஸஹடல் ரெயில்ஸ்டேஷன்.

154 நருமதைஉற்பத்தி;—கட்கிஜங்ஷனின் தென்கிழக்குள்ள பெண்டுறாரோட் ரெயில்ஸ்டேஷனின் மேற்கு 25-மைலில் உள்ளது. சிவஸ்தலம், அமரேசர், அம்பிகை. விந்தியமலையில் நருமதைமேற்காயும் மகாநதி, பிராம்மணியென்னும் சோணபத்திராநதி இவ்விரண்டும் கிழக்காயும் உற்பவித்துச் செல்லுகின்றன. சூரிய சந்திர கிரகணம் முக்கியம், காசியை விட இது வெகுமுக்கியமென்று, யாத்திரைக்காரர்கள் இதில் அதிகமாக வருகிறார்கள். திருநாவுக்கரசுநாயனார் விந்தியமென்று பாடிய திருப்பதிகவைப்புஸ்தலம்.

155 அமரகண்டக்;—நருமதை உற்பத்தியின் சமீபம் விஷ்ணுஸ்தலம், லக்ஷுமி, மகாகாளியும் முக்கியம். காளிதாசனென்னும் வித்வான் இக்காளியைப் பூஜித்து, வரம்பெற்று அனேககிரந்தங்கள் செய்தார்.

156 ஜப்பல்ப்பூர்:—சிவஸ்தலம், நருமதேசர், உமை, ராமர் சீதை இதில் விந்தியமலையோரமாய் நருமதை நதிக்கரையில்

அனேக லிங்கங்களுண்டு. ஜப்பல்ப்பூர் ஜங்ஷன் ரெயில் ஸ்டேஷன்.

157 சித்திரகூடபருவதம்;—மாணிக்கப்பூர் ஜங்ஷனின் மேற்கு 25-மைலில் உள்ள ஜான்ஸீலபனில் சிவஸ்தலம் காந்த நாதர், காந்தி ராமர் லக்ஷுமணர் சீதை மக்தாகினிநதி மாலியவதிநதி, சித்திரகூடசரசு, லக்ஷுமணசுவாலாமலை, இதில் முக்கியமான கிரிப்பிரதக்ஷிணத்தில் அநேகம் ஆலயங்களும் சத்திரங்களுமுண்டு. வருஷம் 1-க்கு ரூ (40000) வருமானமுள்ள ஜமீன் தாரும் இதில் வசிக்கிறார். வனவாசத்தில் ராமரைப் பரதர் இதில் சந்தித்து, தசரதருக்குக் கிரியை செய்து, பாதுகைகள் பெற்றஸ்தலம். ஒருமைலில் சீதாப்பூரில் ராமரும் முக்கியம். சித்திரகூடபருவதம் ரெயில்ஸ்டேஷன்.

158 பாரத்துவாஜாசிரமம்:—சித்திரகூடத்தின் கிழக்கு 25-மைலில் உள்ள மாணிக்கப்பூர் ஜங்ஷனின் கிழக்கு 30-மைலில் உள்ள சங்கர்கார் ரெயில்ஸ்டேஷனின் 18-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம் ராமர் லக்ஷுமணர் சீதை யமுனாநதி பரதர் ராமரைத்தேடி வரும்போது பரத்துவாஜரிஷி யாவருக்கும் யானை குதிரைகளுக்கும் தகுந்த விருந்தளித்த ஸ்தலம்.

159 வால்மீகாசிரமம்:—சித்திரகூடத்தின் கிழக்கு 5-மைலில் உள்ளது. காவீரரெயில்ஸ்டேஷனுக்கு சமீபம் ராமர் சீதை வால்மீகிநதி, சரஸ்வதி அம்சமான வால்மீகிரிஷி வண்ணான் சொல்லுக்காக, ராமரால் கர்ப்பிணியாய் காட்டில்விட்ட சீதையைக்காத்து, அவ்விடம் பிறந்த குசன் லவனிருவருக்கும் ராமாயணம் சப்தகாண்டமும் உபதேசித்த ஸ்தலம்.

160 டோல்பூர்:—ஆக்ராவின் தெற்கு குவாலியர் போகும் ரெயிலில் 42-மைலில் ரெயில்ஸ்டேஷன் சிவஸ்தலம், மகாதேவர், மகாதேவி, கிருஷ்ணன் மஹத்ஸரோவரம் முக்கியஸ்தலம்.

161 டாம்ரேயன்:—என்பது (கௌதமாசிரமம்) கல்கத்தாவிலிருந்து காசிக்குப்போகும் ரெயிலில் 411-மைலில் உள்ள பக்ஸார் ரெயில்ஸ்டேஷனிலிருந்து 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், கௌதமேசர், உமை, ஸ்ரீராமர், லக்ஷ்மணர், கௌதம பத்நி அகலிகை, இதில் ஸ்ரீராமபாதஸ்பரிசத்தால் கல்லுருவு நீங்கி பெண்ணாகி, சாபநிவர்த்திபெற்று விருந்துமளித்தாள்.

162 அஹிஅரி:—என்பது (ஹரிஹரி) கல்கத்தாவிலிருந்து காசிக்குப் போகும் ரெயிலில் 320-மைலிலுள்ள காம்டெனல் ரெயில்ஸ்டேஷனிலிருந்து ஒருமைலில் உள்ளது. சிவஸ்தலம், ராமேசர், உமை, ஸ்ரீராமர், கங்காநதி முக்கியஸ்தலம்.

163 சம்பா:—கல்கத்தாவிலிருந்து நாசப்பூர் போகும் ரெயிலில் 412-மைலில் ரெயில்ஸ்டேஷன் சிவஸ்தலம், மகாதேவர், மகாதேவி, ஹஸ்ததேவநதி, இம்மகாதேவர் சந்நிதியில், எவ்வித வியாதியும் தீருவதால், யாத்திரை அதிகம்.

164 புன்புன்:—என்பது (புனஹ்புன) கயாவுக்கு வடக்கு 49-மைலிலுள்ளது. சிவஸ்தலம், பிதாமகேசர், உமை, இங்கு கங்காநதியில் சிரார்த்தமும், பிண்டமும் இடுகிறார்கள். புனஹ்புன ரெயில்ஸ்டேஷன்.

165 பாடலிபுரம்:—கயாவுக்கு வடக்கு 58-மைலில் உள்ளது சிவஸ்தலம், பாடலீசர், உமை, கங்காநதி, புண்ணியஸ்தலம்.

166 ஜாமல்பூர்:—கல்கத்தாவிலிருந்து காசிக்குப் போகும் ரெயிலில் 297-மைலில் ரெயில்ஸ்டேஷன் ராமர், லக்ஷ்மணர், சீதை இதிலிருந்து கங்கையோரம் மூன்றுமைலிலுள்ள சீதாகுண்டத்தில். உஷ்ணநீர்ச்சுனைகளுண்டு.

167 ராகல்ப்பூர்:—கல்கத்தாவிலிருந்து காசிக்குப் போகும் ரெயிலில் 265-மைலில் ரெயில்ஸ்டேஷன் விஷ்ணுஸ்தலம், கோபிகாநாதர், ருக்குமிணி, சத்தியபாமை, இதில் கங்காநதி மத்தியில் மலைமேல், கோபிநாத் தேவஸ்தானம்.

168 நண்டுரோ:—புஸாவால் ஜங்ஷனிலிருந்து நாகப்பூர் போகும் ரெயிலில் 49-மைலில் ரெயில்ஸ்டேஷன். சிவஸ்தலம், மகாகாளர், காளிகோவில் முக்கியம்.

169 டிவால்வா:—என்பது (குண்டினபுரம்) புனுவுக்குக் கிழக்கு 97-மைலில் அரவிரேட் ரெயில்ஸ்டேஷனுக்குச் சமீபம், பாமேசர், பார்வதி, கிருஷ்ணன் ருக்குமிணி பூஜித்த சிவஸ்தலம்.

170 அரவிரோட:—(ஷை குண்டினபுரம்) விஷ்ணுஸ்தலம். கிருஷ்ணர், ருக்குமிணிதேவி, விதர்ப்பதேசம், பீஷ்மராஜன் பெண்ணுகிய ருக்குமிணியை, இதில் சிசுபாலனுக்கு விவாகஞ் செய்ய நிச்சயித்த முகூர்த்தத்தில், ருக்குமிணி பிராமணரிடம் அனுப்பிய பத்திரிகைப்படி, ஸ்ரீ கிருஷ்ணன் இங்குவந்து பார்வதி கோவிலுக்குப் போய்வரும் வழியில், விவாகருக்குமிணியைத் தூக்கிரதத்திலேற்றி, தன்னை எதிர்த்த ருக்மி முதலிய அநேகரை வென்று, துவாரகைக்குப் போய் மணஞ்செய்தார்.

171 டாகர்:—பம்பாயிலிருந்து ராசிசெல்லும் ரெயிலில் 289 மைலிலுள்ள ஆனந்தாஸ் ஸ்டேஷனினின்று 20-மைலில் உள்ளது. கிருஷ்ணர். ருக்குமிணி, சத்தியபாமை, துவாரகையினின்று கருஷ்ணர் வந்தவர். இதின்வடக்கு 10-மைலில் உஷ்ணநீர்ச்சுனைகள் உண்டு.

172 பாண்டக்:—நாகப்பூர் செல்லும் ரெயிலில் வார்டா ஜங்ஷனினின்று 72-மைலிலுள்ள சண்டா ரெயில்ஸ்டேஷனுக்கு மேற்கு 18-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பத்ரேசர், பதராவதி, விஞ்சசனிதிவாலாமலைகளில், பத்ராவத் தேவஸ்தானமும் இடிந்த கோட்டைகளுமுண்டு. தருமபுத்திரருடைய அசுவமேதக் குதிரையைப் பிடித்துக்கட்டி, அருச்சுனனுடன் பிரபலயுத்தஞ் செய்த, பத்ராவதி ராஜன் ஆண்ட பட்டினம்.

173 கம்பில்;—அலகபாத்திலிருந்து மதுராபோகும் ரெயிலில், கான்பூருக்கு மேற்கு 82-மைலிலுள்ள பேட்கார் ரெயில்

ஸ்டேஷனினின்று 28-மைலிலுள்ளது. சிவஸ்தலம், பரமேசர் பார்வதி, கங்கையோரம், மலைமேலுள்ள ஸ்தலம். கபிலரிஷி பூஜித்தது, தக்ஷிணபாஞ்சால ராஜதானி துருபதராஜனும் பிருமதத்த ராஜனும் ஆண்டது.

174 திரியம்பகம்:—நாசிக்கின் வடமேற்கு 20-மைலில் உள்ளது. சிவஸ்தலம், திரியம்பகேசர், உமை, இதிலுள்ள அஸ்தகிரிமலையில், கோதாவிரிநதி உற்பத்தி. இதில் திருமூர்த்திகளுக்கும் ஆலயமுண்டு. இந்த லிங்கத்திலிருந்து, அக்நிச்சுவாலை உண்டாகிறது. திருநாவுக்கரசுநாயனர், அஸ்தமென்று பாடிய திருப்பதிக வைப்புஸ்தலம்.

175 கங்காப்பூர்:—நாசிக்கின் மேற்கு 6-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கங்காதரர், பார்வதி, இதில் 9 முக்கிய சிவ ஆலயங்களுண்டு, இதிலுள்ள கோதாவிரி நதியில் தீர்த்தமெடுத்துக்கங்கையைப் பூர்த்திசெய்வது முக்கியம்.

176 நாசிக்:—பம்பாயின் வடகிழக்கு 117-மைலில் உள்ளது, சிவஸ்தலம். ராமேசர், உமை, ராமர், லக்ஷுமணர், சீதை, கோதாவிரிநதி, இதில் அநேக ஆலயங்கள், டவுனிலும் நதிமத்தியிலுமுண்டு, நவராத்திரி வெகுமுக்கியம். லக்ஷுமணர் சூர்ப்பநகையை மூக்கறுத்தஸ்தலம். நாசிக் ரெயில்ஸ்டேஷன் டவுன்.

177 பஞ்சவடி:— நாசிக்கின் கிழக்கு 3-மைலில் உள்ளது. சிவஸ்தலம். பரமேசர், பார்வதி, ராமர், லக்ஷுமணர், சீதை கோதாவிரிவடகரையில், கிராமம் ராவணன்சீதையைத்தூக்கி, ரதத்திலேற்றி வலியக்கொண்டுபோன ஸ்தலம்.

178 கல்யாணி:—நாசிக்கின் கிழக்கு 5-மைலில் உள்ளது. சிவஸ்தலம். கல்யாணேசர், உமை, ராமர், லக்ஷுமணர், சீதை கோதாவிரி, இதில் அகஸ்தியர் ராமருக்குச் சிவதீக்ஷை யுபதேசஞ் செய்து, பிறகு இராமர் சிவனிடம் பாசுபதம்பெற்றார்,

179 புல்டாம்பா:—கல்யாணியின் கிழக்குள்ள மன்மாட் ஜங்ஷனின் தெற்கு 20-மைலில் உள்ளது. சிவன், உமை, கோதாவிரி நதிக்கரையில் அநேகலிங்கங்களுண்டு. இதிலும் தீர்த்தமெடுத்துப் பூர்த்திசெய்வது முக்கியம். புல்டாம்பா ரெயில் ஸ்டேஷன்.

180 அம்பர்நாத்:—பம்பாயின் தென்கிழக்கு 38-மைலில் உள்ளது. சிவஸ்தலம். ஆதி அந்தமில்லாத மூர்த்தி, அம்பிகை, இந்த ராஜதானிக்குள் இதுதான் பெரியகோவில்.

181 புனு:—பம்பாயின் தென்கிழக்கில் உள்ளது. சிவஸ்தலம். ஸ்ரீ மங்கேசர், உமை, ராமர், லக்ஷ்மணர், சீதை, இதில் அநேக ஆலயங்களுண்டு. சீமந்தராஜனுண்டது. புனு. ரெயில் ஸ்டேஷன் டவுன்.

182 பண்டராபுரம்:—டோண்டு ஜங்ஷனுக்குத் தெற்குள்ள பார்ஸீரூட் ஜங்ஷனின் மேற்கு 25-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம், பாண்டுரங்கர், ருக்குமிணி, சத்தியபாமை, திண்டீவனம்.

சந்திரபாகாநதி என்னும் பீமநதி, தாம்செட்டிக்குப் பீமநதியில் மிதந்து வந்துகிடைத்த உத்தவாம்சமாகிய நாமதேவர், பாண்டுரங்கனுக்கு அன்ன மூட்டியும், பகவான் (1000) வராகன்கள் பரிசங்கொடுத்து ராஜாபாயியை நாமதேவருக்குக் கலியாணஞ் செய்து வைத்தும், இவர் புத்திரனுக்குக் காதுகுத்தப் பாண்டுரங்கர் வரிசைகளெடுத்தும், இன்னும் அநேக லீலைகளுஞ் செய்தார். நாமதேவரும் பக்தியால், ஞானமடைந்து, ருக்குமிணிகொடுத்த, வேண்டிய திரவியங்களைக் கொடுக்கும் பரிசவேதியையும் பீமநதியின் மடுவிலெறிந்தார்.

தன்சொத்தையுந் திருடிக் காலையும் வெட்டிக் கிணற்றில் தள்ளிய திருடர்கள் இருவர்களையுங்கூட பூஜித்து, விசுவாசித்து, ராஜனிடமிருந்து பரிசும் வாங்கிக் கொடுத்த ஞானவானாகிய ஜயதேவர் பூஜித்த ஸ்தலம்.

தன் பத்னியால் உபதேசிக்கப் பட்டு, ஞானமடைந்து, காசிக்கு ஏகி, ஹனுமாரைத் தரிசித்தவராகிய துளசிதாஸர், இந்த ஸ்தலத்திற்கு வரமுடியாததால், பாண்டுரங்கர் போய்த் தரிசனமளித்த கூர்மதாஸ், எருமைக்கிடாவை வேதம் ஓதச் செய்த ஞானதேவர், சோபானதேவர், சாந்ததேவர் மண்மிதிக்கும்போது பகவந் நாமசங்கீர்த்தனத்தால், பரவசமடைந்து தன் ஒரு வயதுக் குழந்தையையும், மிதித்த குயவரான கோராகும்பர், ராகுமார், விஷ்ணுதாஸ், சூர்தாஸ், ரோயில்தாஸ், ராமதாஸ், மாதவதாஸ், மச்சாந்தநாத், ஜலந்தரநாத், கோர்க்நாத், ஏகநாத், பிரும்மாநந்தசோகா, ஜகமத்திரிகாசாது, நிவர்த்தி சாது, சாவந்தியமால், முத்தாபாய், ஜேநாபாய், மீராபாய் கங்காபாய், நரஹரி, ஜநகபாய், துகாராம், புண்டரீகபக்தன், விசோபாகேசர், கபீர்தாஸர், கமால்தாசர், முதலிய அநேக பக்தர்கள். இக்கலியுகத்தில் இந்த ஸ்தலத்தில், பாண்டுரங்கரைத் தரிசித்தும், பூஜித்தும், பஜித்தும், பாடியும், கூத்தாடியும் பக்திசெய்தும், ஞானமும், நற்கதியுமடைந்தார்கள். இந்த ஸ்தலத்திற்கு பக்துமையில், கூர்மதாஸருக்குப் போய்த்தரிசனங்கொடுத்த வகுளாபுரியில் பாண்டுரங்கமூர்த்தி ஸ்தலமும் உண்டு, பண்டராபுரம் ரெயில்ஸ்டேஷன்.

183 நாகநாதபுரம்:—பண்டராபுரத்தின் சமீபம் நாகநாதர், நாகாம்பிகை, பீமநதி, கிருஷ்ணன் பூஜித்தஸ்தலம், சிவராத்திரியில், பூஜைக்கு, விக்கினமென்றெண்ணி, பஜனைசெய்த, நாமதேவர் முதலியவர்களின் கூட்டங்களை, சுவாமிக்குப்பின் பிராகாரத்தில் பிராமணர்களும், அர்ச்சகரும், பஜனைசெய்யச் சொன்னதால், லிங்கத்தோடு சந்நிதிகளும் பஜனைப் பக்கம் திரும்பின ஸ்தலம்.

184 பம்பாய்:—அநேக ரெயில் ஸ்டேஷன்களுள்ள பெரிய டவுன் சிவஸ்தலம், தவளேசர், உமை, ராமர், லக்ஷ்மணர்,

சிதை, அநேக ஆலங்களுள்ளடவுன், கப்பல்துறைமுகங்களும், வர்த்தகசாலைகளும், ஆபீஸ்களும், பிரபலம். பார்ஸீசாதியார் இதில் பிணங்களைக் கழுகுக்கெறியும், டவர் ஆப் ஸைலென்ஸ், என்னும் மௌநமலை யிருக்கிறது.

185 சித்தப்பூர்.—பம்பாயினின்று வடக்கே துவாரகைக்குப் போகும் ரெயிலில் 374-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சித்தேசர், உமை, ருத்திரமாலாநதி, சரஸ்வதிநதி, உந்நதமான கட்டிடமுள்ளது, பிரபலமான யாத்திரைஸ்தலம்.

186 நாதத்துவாரம்:—சித்தப்பூரின் வடக்கு 30-மைலில் உள்ளது. மியூலிரெயில் ஸ்டேஷனுக்கு சமீபம் கிருஷ்ணர், ருக்குமிணி, சத்தியபாமை, வைகுண்டத்தினின்று வந்தகிருஷ்ண விக்கிரஹம் முக்கியம்.

187 சோமநாத்:—சித்தப்பூரின் சமீபம் சோமேசர், சிவஸ்தலம். உமை, சமுத்திரம், துவாதசலிங்க புராணஸ்தலம். துருக்கராஜனுல் இடிக்கப்பட்டது.

188 நருமதாசங்கமம்:—சித்தப்பூரின் சமீபம் சிவஸ்தலம். சங்கமேசர். உமை, சைவாகமசுயம்பு ஸ்தலம்.

189 விரஜா:—நாதத்துவாரத்தின் சமீபம். திரிலோசனர், பார்வதி, சைவாகமசுயம்பு ஸ்தலம்.

190 பரோடா:—கூர்ஜாத்துக்கு சமீபம் சிவஸ்தலம். பரமேசா, உமை, சுவயராஜாங்கமுள்ளது.

191 குஜராத்:—என்பது (கூர்ஜாம்) சிவன், உமை, டவுன், விஷ்ணுக்கோவில் களுமுண்டு.

192 துவாரகை:—விஷ்ணுஸ்தலம். நாராயணர், கலியாணநாச்சியார், கிருஷ்ணர், ருக்குமிணி, சத்தியபாமை, பலராமர், சமுத்திரம், இதுகுஜராத்தில், கதியவார், என்னும், தீபகல்ப்பத்தில், கோமதிநதிக்கரையிலுள்ள, சிறுகிராமம். ஸ்ரீ கிருஷ்ணன் 16008-ஸ்திரீகளைக் கலியாணஞ்செய்து, அநேகபுத்தி

ர்களைப் பெற்று, பெரிய வைப்ஸாரிசைப் போராடித்தும், சிசுபாலன், தந்தவக்கிரன், சாளுவன், நரகாசுரன் முதலியவர்களைக்கொன்றும், சபையில் துச்சாதனன், துகிலுரியும்போது பக்திசெய்த திரௌபதிக்கு அக்ஷய வஸ்திரங்கள் உண்டுபண்ணியும், வனவாசத்தில் துரியோதனன் ஏவிய துர்வாஸமஹரிஷியினுடைய பசியைத் தீர்த்ததும், பாண்டவர்களைப் பூஜித்தும் காவலாய் அடைந்த, பாணாசுரனுடைய பட்டணத்துக்குச் சென்று, சிவனையும் வென்று, பாணாசுரனுடைய ஆயிரங் கரங்களைக் கொய்ததும் அவன் பெண் உஷையைத் தன் பேரன் அநிருத்தனுக்கு விவாகஞ்செய்ததும், 27-புதல்வர்களையுடைய குசேலனென்னும் ஏழைப் பிராமண ரிடமிருந்த அவலைத் தின்று, அவருக்கு வேண்டிய தனங்களும், தானியங்களும், விருத்திபெறக் கொடுத்ததும், இன்னும் அநேக லீலைகளையும் செய்ததலம், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், மங்களாசாஸனம். ஸப்தபுரிகளி லொன்று.

193 பேட்துவாரகை சிவன், உமை, கிருஷ்ணன் மார்க்கண்டேயரிடமும், உபமன்னியுரிஷியிடமும் உபதேசம்பெற்று, வேதஸாரஸ ஸஹஸ்ரநாமப்படி பூஜித்த இடம்,

194 சிந்துஸாகரசங்கமம்:—துவாரகைக்கு வடக்கு சங்கமேசர், உமை சிவன்தலம்.

195 கடஸ்:—என்பது (கடாக்ஷம்) லாகூரின் வடமேற்கு 163-மைலிலுள்ளது, கில்ரா ரெயில்ஸ்டேஷனினின்று 11-மைலில் உள்ளது. சிவகடாக்ஷர் பூர்ணாதேவி, நேத்ரோதக, பரமசிவனது நேத்திரஜலம் பாண்டவர்கள் வனவாசத்தில் தங்கியது. உஷ்ணநீர்ச்சுனைகளுமுண்டு.

196 ககுரஹ:—விஷ்ணுஸ்தலம். லாகூரினின்று 42-மைலில் ரெயில்ஸ்டேஷன் டவுன், ராமர், லக்ஷ்மணர், சீதை, ஸ்ரீராம குமாரரான குசனுக்கு உரியஸ்தலம்.

197 லாகூர்:—பஞ்சாப்பின் ராஜதானி. சிவன், உமை, அநேக ஆலயங்களுள்ளன.

198 பஞ்சாப்பில் அமிருதசரஸ்:—இந்தியாவின் வடமேற்கிலுள்ள (பாஞ்சாலதேசப்) சிவன், உமை, கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, துருபதராஜனுக்கு அக்நியில் திரௌபதி ஜநித்து, சுவயம் வரத்தில் அருச்சுனன், மத்ஸ்யயந்திரத்தை அடித்து, யாவரையும் ஜயித்து, பாண்டவர்கள் திரௌபதியை விவாகஞ்செய்தஸ்தலம்.

199 அட்டாக்:—டில்லியின் வடமேற்கு 591-மைலில் உள்ளது. சிவன், உமை.

200 சயால்கோட்:—டில்லியின் வடமேற்கு 438-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, கிருஷ்ணன் இது சல்லியராஜன் ஆண்ட மத்திரநாடு. கி. மு. 78-ஆம்வருஷம் இதில்சாலிவாகனன், ஆண்டான். இதின்வடகிழக்கு பத்துமைலில்உள்ள ஷானூர் ஜாமலில் ஒருமரத்தில் பலவித இலைகளும், பழங்களுமுண்டு. சயால்கோட் ரெயில்ஸ்டேஷன்.

201 ஜ்வாலாமுகி:—டில்லியின் வடமேற்கு 284-மைலிலுள்ள பாதன்கோட் ரெயில்ஸ்டேஷனுக்கு சமீபம். சிவஸ்தலம்மகாதேவர், மகாதேவி ஜ்வாலமுகி, இரேவணகிரி அம்பாள் சந்நிதியில், தீ எரிந்து கொண்டிருக்கிறது. இவ்வக்நீ, ஜலந்தராசுரன் வாயிலிருந்து வந்த, அக்நியென்று லலிதாதேவி பாகவதபுராணம் சொல்லுகிறது. யாத்திரைக்காரர்கள் அதிகம் இதைச்சுற்றி 16-உஷ்ணோதகச் சுனைகளுண்டு.

202 தேவபந்தர்:—ஜவாலாமுகிக்குசமீபம் சிவஸ்தலம், பாண்டவர்கள் அக்ஞாதவாசமிருந்த (விராடபுரம்) மகாதேவ், உமை, தேவிகுண்டமென்னும், இவ்வேரிக்கரைகளில் அநேகம் ஆலயங்களுண்டு. திருநாவுக்கரசுநாயனர் விராடபுரமென்றவைப்புஸ்தலம்.

203 டில்லி:—(இந்திரப்பிரஸ்தம்) விஷ்ணுஸ்தலம், டவுன், கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, இந்தியா கவர்னர் ஜனரல் ராஜப்பிரபு வசிக்குமிடம். பாண்டவர்கள் பிராமண வுருவுடன் பாஞ்சாலதேசத்தில் பாஞ்சாலியை ஐவரும் பாரியாயடைந்தபின், திருதராஷ்டிரரால் அவர்களுக்கு பாகித்துக் கொடுக்கப்பட்ட பட்டிணம். இதில் பாண்டவர்கள் ஆண்டு, அர்சுனன் தீர்த்தயாத்திரைக்குப் போய் திரும்புகையில், சந்நியாசி வேஷத்துடன், துவாரகையில் சுபத்திரையை மணந்து, இதில்வந்து, திக்குவிஜயஞ்செய்து வந்தபின் தருமர் ராஜசூயாகஞ்செய்தபின், துரியோதனன் பொறுமையால் அவர்களோடு சூதாடி அவர்களைஜயித்து வனத்திற்கு அனுப்பினான், டில்லி டவுன் ரெயில்ஸ்டேஷன்.

204 ஷை டில்லி சிவஸ்தலம், தருமேசர், சக்தி, தருமராஜர் பூஜித்தது. இதில் அநேக கோவில்கள் உண்டு.

205 பால்வால்:—டில்லியின் 37-மைலில் உள்ளது. சிவஸ்தலம் ருத்திரர், உமை, கிருஷ்ணன் இது இந்திரப்ரஸ்தத்தைச் சேர்ந்த டவுன் இதின் 24-மைலிலுள்ள ஸோகாராவில், உஷ்ணச்சுனைகளுண்டு, பால்வால் ரெயில்ஸ்டேஷன்.

206 கார்நேல்:—டில்லியின் வடக்கு 76-மைலில் உள்ளது, சிவஸ்தலம், தாநேசர், உமை, குந்தியிடம் ஜநித்தவரும், தாக சீலரும், பக்தரும் சூரியபுத்திரருமான கர்ணராஜன் ஆண்ட அங்கதேசம்.

207 குருக்ஷேத்திரம்:—டில்லியின் வடக்கு 111 - மைலில் உள்ளது. (தாநேசுவரம்) ரெயில்ஸ்டேஷன். சிவஸ்தலம், தாநேசர், உமை ஸ்தாணுதீர்த்தம், யமுனாநதியின் மேற்கு திருஷ்க்வதி, ஸரஸ்வதி நதிகளுக்கிடையில், நம்முன்னோர்கள் இந்துமதத்தை ஸ்தாபித்த, இந்தப் புண்ணியபூமி 70-மைல் நீளம் 20-மைல் அகலம். இது பஞ்சாப்பைச் சேர்ந்தது. இதில்

(382) புண்ணியஸ்தலங்களுண்டு. இது அவாந்தரசைவாகமசவாயம்புஸ்தலம். பாரதயுத்தம் இங்கேநடந்தது. ஸ்ரீமகாபாரதம் 1. ஆதிபருவம், 2. சபாபருவம், 3. ஆரணியபருவம், 4. விராடபருவம், 5. கிருஷ்ணன்தூது போயும், துரியோதனன் நாடுகொடுக்காததைப்பற்றிய உத்தியோகபருவம், 6. பாண்டவரின் ஏழு அக்ரோணியும், துரியோதனனுடைய பதினொரு அக்ரோணிசைன்னியங்கள், பத்துநாள் பீஷ்மர்சேநாதிபதியாகபீஷ்மர் யுத்தஞ்செய்ததைப்பற்றிய பீஷ்மபருவம், 7. 5-நாள் துரோணர் யுத்தம்செய்து இறந்ததைப்பற்றிய, துரோணபருவம், 8. இரண்டுநாள் யுத்தஞ்செய்து கிருஷ்ணனால் கதியடைந்த கர்ணனைப்பற்றிய கர்ணபருவம் 9. அரைநாள் யுத்தஞ்செய்து இறந்த சல்லியபருவம், 10. அரைநாள் துரியோதனபருவம், 11. கடைசிராத்திரியில், அசுவத்தாமாபாசறையில் நுழைந்து, கிருஷ்ணனால் வேறுஇடம்போன பாண்டவர்கள் தவிர மற்ற யாவரையுங் கொன்று, பாரத யுத்தம் முடிந்ததைப்பற்றிய சவுப்திகபருவம், 12. யாவருக்கும் கிரியைகள் நடத்தியதாகிய, ஸ்ரீபருவம், 13. பீஷ்மர் தருமருக்கு உபதேசித்ததாகிய சாந்திபருவம், 14. பீஷ்மரும், கிருஷ்ணரும், பாண்டவர்களுக்கு ஞானோபதேசஞ்செய்ததாகிய, அநுசாசனிகபருவம், 15. தருமராஜர் நடத்திய யாகத்தைப்பற்றிய அசுவமேதபருவம், 16. ஆசிரமவாஸபருவம், 17. மௌசலபருவம், 18. சுவர்க்காரோகணபருவமென, பாரதத்தை வியாஸ சிஷியரான வைசம்பாயந ரிஷி பரிக்ஷித்து ராஜாவின் புத்திரனான ஜநமேஜய ராஜனுக்குச்சொன்னார்.

208 பிருமவர்தா:—குருக்ஷேத்திர பூமியில், ஒரு சிவஸ்தலம் பிரமேசர், உமை, அஷ்டவசுக்களிலொருவர், ஸ்திரீபுத்தியால் வசிட்டருடையபசுவை பலாத்காரமாய்ப் பிடித்ததால், பீஷ்மராக நரஜன்மம் அடைந்து, வசுவாகச் சேர்க்கப்போனஸ்தலம்.

209 பஹீவா:—என்பது (சித்தபுரம்) குருக்ஷேத்திரத்தின் மேற்கு 13-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, ஸ்ரீகிருஷ்ணன் சாஸ்வதிநதி, பந்துக்களையும் குருக்களையும் வதைக்க மனமில்லாமல் நின்ற பார்த்தனுக்குச் சாரதியான கிருஷ்ணன், அதில் கீதை பதினெட்டு அத்தியாயங்களையும் உலோகோபகாரமாய் உபதேசித்து, விசுவரூப தரிசனமுங் காட்டி, எல்லாம் நானென்றும், நீ கொல்லுவதில்லையென்றும், ஞானோபதேசஞ் செய்து, பாரதயுத்தத்தை முடித்த ஸ்தலம்.

210 அட்டகாசம்:—என்பது (குருக்ஷேத்திர பச்சிமபூமி) சிவஸ்தலம், மகாநாதர், உமை, சைவாகம ஸ்வயம்பு ஸ்தலம்.

211 பைரவம்:—ஷை குருக்ஷேத்திரத்தில் சிவஸ்தலம், பைரவர், உமை, சைவாகம சுவயம்புஸ்தலம்,

212 அஸ்திநாபுரம்:—டில்லியின் வடகிழக்கு 51-மைலில் உள்ள மீரட் ரெயில்ஸ்டேஷனினின்று 22-மைலில் உள்ளது சிறுகிராமம் சிவஸ்தலம், அஸ்திநாதர், உமை, கிருஷ்ணன், இது கங்கையால் இடிந்தது.

இதில் அரசாண்ட சந்தனுராஜன் பாரியான பரிமளகந்தியின் சொற்படி, அவள் புத்திரரான, வியாசர், அவன் மருமகள், அம்பிகையிடம் திருதராஷ்டிரனையும், அம்பாலிகையிடம் பாண்டுவையும், விதுரனைத் தாதியிடமும், உண்டுபண்ணினர். அதுபோல, பாண்டுராஜன்மனைவி குந்தியிடம், இயமதருமரால் தருமராஜனும், வாயுதேவரால், பீமசேனனும், இந்திரனால் அருச்சுனனும், மாத்திரியிடம், அசுவினிதேவர்களால் நகுல சகாதேவர்களும், பிறந்து, இதிவிவர்களும் காந்தாரி மைந்தர்களான துரியோதனாதிகள் 101-பேர்களும், துரோணாசாரியிடம் வில்வித்தை கற்றுவரும்காலில், துரியோ

தனன் வஞ்சித்துக் கொளுத்தின, அரக்குமாளிகையினின்று பாண்டவர்கள் தப்பித்தார்கள். பீமன் அவர்களை தூக்கிவரும் வழியில், இடிம்பாசுரனைக்கொன்று, அவன் தங்கை இடும்பியை மணர்ந்து, கடோற்கசனைப் பெற்று, குந்தியும் பாண்டவர்கள் ஐவரும் வேதியர் உருவெடுதது, வேத்திரகியஞ்சென்று, பகாசுரனைப் பீமன் கொன்று, சித்திராங்கதனைச் சிநேகித்துப் பாஞ்சாலநாடு சென்று, அருச்சுனன் மீன் குறியைத் தள்ளி, களாயணியான திரௌபதியைப் பாண்டவர்கள் ஐவரும் மணந்து, இந்திரப்பிரஸ்தம் சென்று, ராஜசூயயாகம் நடத்தினார்கள். பின் துரியோதனனால் இதில் அழைக்கப்பட்ட தருமர், சகுனியின் வஞ்சனையால், சூதில் தோற்று, பனிரண்டுவருஷம் வனவாசமும், ஒருவருஷம் விராடபுரத்தில், அக்ஞாதவாசமும்முடித்து, அதில் கோக்கிரணஹஞ்செய்தகௌரவர்களை வென்று, துரத்தினார், அபிமன்யுக்குவிராடராஜன்குமாரியாண உத்தரையை மணந்து, பரிக்ஷித்துராஜனைப பெற்ற ஸ்தலம்.

213 குருமுகதேஷ்வார்:—டில்லியின் வடகிழக்கு 54-மைலிலுள்ளது. ரெயில்ஸ்டேஷன் சிவன், உமை, கிருஷ்ணன் கங்கை அஸ்தினாபுரத்தோடு சேர்ந்த குருநாடு.

214 காச்மீரம் ஸ்ரீநகரம்:—இமயமலையின் வடமேற்கி லுள்ளது. டௌன் ரெயில்ஸ்டேஷன் சிவன், உமை.

215 ஷிகாச்மீரம்:—விஷ்ணுஸ்தலம், கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை வேடராய்வந்த சிவனிடம் விஜயன் போராடி, விற்போரும் மல்யுத்தமுஞ் செய்து, பாசுபதமடைந்த ஸ்தலம்.

216 ராவல்பிண்டி:—ரெயில்டேஷன் சிவன், உமை, கிருஷ்ணன் முக்கியஸ்தலம்.

217 அமர்நாத்:—ராவல்பிண்டியின் வடமேற்கு 200-மைலிலுள்ளது. சிவஸ்தலம் அமரநாதர், உமை, இமய மலையில் உள்ளது.

218 கண்ணுவாசிரமம்:— ராவல்பிண்டியின் மேற்கு சமீபம், சிவஸ்தலம், கண்ணுவேசர், உமை விசுவாமித்திரருக்கும் மேனகைக்கும் பிறந்து, இதில் கண்ணுவரிஷியிடம் வளர்ந்த சகுந்தலையை, குருநாட்டரசனான துஷ்டியந்தராஜன் விவாகஞ்செய்து, பரதன்பிறந்ததால், பாரதர்களென்று, பாண்டவ கௌரவர்களுக்குப் பெயர்.

219 கண்டமேன்னும் கடிநகர்:—என்பது (தேவபிரயாகை) ஹரித்துவாரத்தின் வடமேற்கு 60-மைலில் உள்ளது. விஷ்ணுவ் தலம் புருஷோத்தமர், புண்டரீகவல்லி மங்களதீர்த்தம். இமயகிரி பரத்துவாஜ ரிஷிக்குப் பிரத்தியக்ஷம் பெரியாழ்வார் மங்களாசாஸநம்.

220 ஸ்ரீராமநகரம்:—ரெயில்ஸ்டேஷன் காச்மீர ராஜதானி சிவஸ்தலம் டவுன் ராமேசர், உமை, ராமர், லக்ஷ்மணர், சீதை,

221 டேராடேன்:—ஹரித்துவாரத்தின் வடமேற்கு 32-மைலில் உள்ளது. ரெயில்ஸ்டேஷன் சிவஸ்தலம் கேதாரேசர், உமை, கங்கை, இமயகிரி, லக்ஷ்மணர், தபசுசெய்தது, புலிக்காடு பாண்டவர்கள் ஆசிரமவாசஞ் செய்த இடம்வாலகில்லியராகிய 60000-ரிஷிகளை இந்திரன் சிறுவரென்று பரிஹஸித்ததால், அவர்கள் வேறு இந்திரனை சிருஷ்டிக்க, பிரும்மாசமாதானஞ் செய்தஸ்தலம்.

222 ஹரித்துவாரம்:—என்பது (மாயாபுரி) மதுரையின் வடமேற்கு சிவஸ்தலம், சர்வேசர், உமை, ஹரித்துவாரமூர்த்தி, லக்ஷ்மி, சப்தபுரியிலொன்று. இமயமலையினின்று சங்கைவிழுமிடம். தேவர்களும் ரிஷிகளும், பூஜித்தஸ்தலம். மாயாபுரி டவுன் ரெயில்ஸ்டேஷன்.

223 திருக்கேதாரம்:—காட்கூடத்துக்கு 90-மைலில் பதரி நாராயணம் போகும் வழியிலுள்ளது. சிவஸ்தலம், கேதாரே

சர், கௌரி, கங்கை, மந்தாகினி, நாரதருண்டம், உமை வாமபாகம்பெற்றது. துவாதசலிங்கஸ்தலம். பங்குனிமாச, முதல், புரட்டாசி அமாவாசை வரையில், ஆறுமாதம் மனிதர்களும், மற்ற ஆறுமாசம் தேவர்களும், பூஜிக்கும் ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-1, சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-2. திருநாவுக்கரசுநாயனார் வைப்பு ஸ்தலம்.

224 ஹை கேதாரம் ஈசானருத்திரர், உமை, இது சைவாகம சுவயம்பு ஸ்தலம்.

225 கனகலம்:—ஹரித்துவாரத்துக்கு சமீபம், ருத்திரர், உமை, சைவாகமசுவயம்பு ஸ்தலம்.

226 ருத்ரகோடி:—கங்கோத்பத்திக்கு சமீபம் மகாயோகீசர், உமை, சைவாகமசுவயம்பு ஸ்தலம்.

227 இமாலயம்:—கேதாரத்திற்கு சமீபம் சிவன், உமை, கங்காதரர். சைவாகம சுவயம்பு ஸ்தலம்.

228 பத்ரவடம்:—சாங்காத் துவாரத்திற்கு சமீபம் பத்ரேசர், உமை, சைவாகசுவயம்பு ஸ்தலம்.

229 பதரிகாசிரமம்:—என்பது (ஹிமவந்தானம்) சிவஸ்தலம், கங்காதரர், உமை, பதரீநாராயணம் போகும் வழியில் உள்ளது. சிவஸ்தலம், நரநாராயணர் தபசுசெய்த ஸ்தலம் வியாசர், தபசுசெய்யும் சைவாகமஸ்தலம்.

230 பதரீநாராயணம்:—என்பது (வதரியாசிரம்) ஹரித்துவாரத்தின் வடக்கு இமயமலைமேல் 2[illegible]0-மைலின் உள்ளது. விஷ்ணுஸ்தலம், பதரீநாராயணர் அரவிந்தவல்லி, தப்தகுண்டதீர்த்தம், இலந்தமரத்தின் கீழ் ஞானமுத்திரை தரித்துத் தவஞ்செய்யும் நாராயணர் நரனுக்கு உபதேசஞ்செய்தவர். 11000-பிராமணர்கள் இதில் பூஜித்ததாகத் திருச்செந்தூர்ப்

புராணம் சொல்லுகிறது. பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

231 பிரும்மகபாலம்;—பதரிகாசிரமத்திற்கு சமீபம், சிவஸ்தலம், பிருமகபாலேசர், உமை, இதில் கங்கோத்பத்தி, இந்தசிவஸ்தலத்தில் பித்ருகளுக்கும், தனக்கும், வேண்டியவர்களுக்கும், பிண்டம் போடுவது முக்கியம்.

232 தபஸ்தானம்:—ஹரித்துவாரத்தினின்று, பிரும்மகபாலம் போகும் வழியில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், பாலை பார்வதி பாலையாய்த் தபசுசெய்த புண்யஸ்தலம், பாண்டுராஜனும் இதில் தவம் இயற்றினார்.

233 திருஇந்திரநீலபருவதம்:—காட்மாண்டின் வடமேற்கு 8-மைலிலுள்ளது. சிவஸ்தலம், நீலாசலேசர், நீலாம்பிகை, இந்திர தீர்த்தம், இந்திரன் பூஜித்தது. அருச்சுனன் இதில்தபசு செய்யும்போது, துரியோதனனால் அனுப்பப்பட்ட மூகாசுரன் பன்றியாகி நரனைக் கொல்லப் பாய்கையில், சிவன் வேடுவராய் பாணமெய்ட, அசுரன் இறந்தான். பின்பு கிரீடியும் வேடுவரான சிவனும் யுத்தஞ்செய்து காண்டீவத்தின் நாணறுபட வில்லால் சிவனைத் தலையடித்ததால், பாணலிங்கமாகி, ரிஷபாரூடராக காக்ஷிதந்து, நரனுக்குப் பாசுபதாஸ்திர மீந்த ஸ்தலம். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1.

234 திருஅநேகதங்காவதம் என்பது (கௌரிகுண்டம்) இமயமலை மேலுள்ளது. (திருக்கேதாரத்தின் தெற்கு 4-மைல்) சிவஸ்தலம், அருள்மன்னேசர், மனோன்மணி, ஞான தீர்த்தம்; திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1.

235 கல்யாணகிரி:—இமயமலைத் தென்சாரலிலுள்ளது, கல்யாணேசர், பார்வதி, பதிரகாசிரமம்போகிற வழியிலுள்ளது. பார்வதிக்குக் கலியாணம் நடந்தஸ்தலம்.

236 திருநொடித்தான்மலை என்பது (கைலாஸகிரி) இமயமலையின் வடபுறம் மத்தியிலுள்ளது. பரமேசர், பார்வதி, இதினின்று சிந்துநதி மேற்கு முகமாயும், பிரும்மபுத்திராநதி கிழக்கு முகமாயும், கங்காநதி தெற்கு முகமாயும் போகின்றன. மாநஸஸரஸ். விஷ்ணு, பிரும்மா, இந்திரன், தேவர்கள், ரிஷிகள், மனிதகணங்கள், பூதகணங்கள், நித்தியசூரிகள், முக்தர்கள் சதாதரிசிக்கும் பூலோக கைலாஸம். திருஞாந சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகம்-2. திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-4 சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆக பதிகம்-7.

ஏனாதி நாயனார், சக்தி நாயனார், குரும்ப நாயனார், ருத்திர பசுபதி நாயனார், நரசிங்கமுனைய நாயனார் இவர்களும் கைலாஸ மடைந்தார்கள்.

237 ஸ்கந்தகிரி:—திருநொடித்தான்மலை யோரம். சிவன், உமை, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சரவணப் பொய்கை, சுப்பிரமணிய ஸ்தலம். இமயமலையின் நீளம் 1500-மைல் அகலம் 200-மைல், ஆயிரஞ் சிகரங்களுண்டு. காச்மீரம், சிம்லா, ஹரித்துவாரம், நேபாளம், அஸ்ஸாம், பூட்டான் முதலிய பிரதேசங்கள் மலையின் தென்சாரலிலுள்ளன. இதின் உந்நத சிகரம், கௌரீசங்கரென்னும் எவரஸ்டு, இது ஐந்து மைலுயரமுள்ளது. மலைமேலெங்கும் யாவரும்போகலாம். பெரியோர்கள் தவஞ்செய்கிறார்கள். இதிலுள்ள புலி, பாம்புகள் கூட சத்துவகுண முள்ளவைகள்.

238 ரிஷீகேசம்:—ஹரித்துவாரத்தினின்று ருத்திரப் பிரயாகைக்குப் போகும் வழியில் 14-மைலில்உள்ளது. சிவன், உமை, ரிஷீகேசர், தவசிகளுண்டு.

239 திருப்பிரதி:—என்பது (ரோசிமடம்) ரிஷீகேசத்தின் வடக்கு 119-மைலில் உள்ளது. பரமபுருஷன் பரிமளவல்லி, ராமர், லக்ஷுமணர், சீதை, பரதர், சத்துருக்நர், அநுமான்

பார்வதிக்கு பிரத்தியக்ஷம். இது கங்கையில் மாநஸஸரசு கூடுமிடம். இதிலுள்ள பராசாசிரமத்தில், அநேகர் தவஞ்செய்கிறார்கள். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் விஷ்ணுஸ்தலம்.

240 ருத்திரப்பிரயாகை:—ஹரித்துவாரத்தினின்று 189-மைலில் உள்ளது. சிவஸ்தலம் ருத்திரர், கௌரி, இமயமலை மேல் நடந்தாவது, வெள்ளாட்டின்மேலாவது, போகவேண்டிய இந்த முக்திஸ்தலத்துக்கு ரிஷீகேசம், தேவபிரயாகை, சத்துருக்நம், ராமலக்ஷ்மணாலயங்களுள்ள லக்ஷ்மணஜ்வாலா, தபோவநம், புலாஸிசட்டி, மகாதேவசட்டி, கோவிந்தகோடா, ராணிபாக், கர்ச்சூரசட்டி, திருக்கேதாரம், ருத்திரகோடி, பதரிகாசிரமம், பதரீநாராயணம், பிரும்மகபாலம், தபஸ்தானம், ஜோசிமடம், திருஅநேகதங்காவதம், இந்த ஸ்தலங்களின் வழியாகத் தரிசித்துப் போகவேணும்.

241 நேபாளம்:—இமயமலை தென் சாரலில், சிவஸ்தலம். ஹரித்துவாரத்தின் கிழக்கு, சிவன், பசுபதீசர், உமை, நாராயணர், லக்ஷ்மி, கண்டகிநதி, சுவாராஜ்யம், சைவாகமசுவயம்புஸ்தலம்.

242 சாளக்கிராமம்:—விஷ்ணுஸ்தலம். நேபாள இமயமலைமேலுள்ளது. ஸ்ரீமூர்த்தி ஸ்ரீதேவி, கண்டகிநதி, சக்கரதீர்த்தம். கண்டகி என்னும் வேசிக்கும், பிரும்மருத்திர இந்திராதி தேவர்களுக்கும், பிரத்தியக்ஷம். பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், மங்களாசாசனம். கங்கையில் சேரும் இக்கண்டகி நதியில் சாளக்கிராமங்கள் ஏராளமாய்க் கிடைக்கின்றன.

243 காட்மாண்டு:—பிக்காத்திரி ரெயில்ஸ்டேஷனிலிருந்து 50-மைலில் உள்ளது. சிவஸ்தலம் பரமேசர், உமை, ராமர், லக்ஷ்மணர், சீதை இதில் ருத்திராக்ஷ மரங்கள் ஏராளமாயுள்ள மோரங்கிமலையுமிருக்கிறது. ருத்திராக்ஷமகிமை ஐந்தாவது அத்தியாயத்தின் முதலில் சொல்லப்பட்டது.

244 கௌஹாதி:—கல்கத்தாவி லிருந்து வடகிழக்குப் பேருரும் ரெயிலில் 545-மைலில் ரெயில்ஸ்டேஷன். இது பெயாம லைக்கிழோரம். சிவன் தலம் அஸாம்தேசம், உமாநந்தர், உமை, பிரும்மபுத்திராநதி, யாத்திரை அதிகம்.

245 பிராக்ஜோதிஷபுரம்:—கௌஹாடிக்கு சமீபம். சிவஸ்தலம், விசுவேசர், விசாலாக்ஷி, பிரும்மபுத்திராநதி மத்தியில், மலைமேலுள்ள இச்சிவ்தலம் காசிக்கு நிகரானதால், யாத்திரை அதிகம். இதில் ஆண்ட நரகாசுரனை, கிருஷ்ணன் சத்தியபாமையுடன் வந்து, யுத்தஞ்செய்து வென்று, 16000-பெண்களைச் சிறைமீட்டு மணஞ்செய்தார்.

246 புரேசம்:—கௌஹாடியின் சமீபம். பன்மகாயர், உமை, சைவாகமசிவபமுடன் தலம்.

247 சித்தேஷ்வார்:—கல்கத்தாவின் வடகிழக்கு 529-மைலிலுள்ள, பாகர்பூர் ரெயில்ஸ்டேஷனுக்கு சமீபம். சிவன் தலம் சிவன், உமை, நாராயணர், லட்சுமி, கபிலமுனி ஆசிரமம், ஸாஸ்ப்பூர் மலையின் அடிவாரத்தில் பிரும்மபுத்திரா நதியில் சேருகிற யாரக்கநதி தீரத்திலுள்ளது பங்குனி மாச உற்சவம் முக்கியம்.

248 சீதாகுண்டம்:—கல்கத்தாவின் வடகிழக்கு 359-மையில் உள்ளது சீதாகுண்டமலைமே லுள்ளது, சிவன் தலம் சிவன், உமை, ராமர், லட்சுமணர், சீதை, இதில் மகாசிவராத்திரி முக்கியம். இதில் உஷ்ணநீர்ச்சுனைகளுமுண்டு.

249 ராஜகிரகம்:—கல்கத்தாவின் வடகிழக்கு 304-மைலிலுள்ள ஜமவான் ரெயில்ஸ்டேஷனுக்கு சமீபம் பருவதத்தின் மேல உள்ளகோவில் சிவன் தலம், சிவன், உமை, ராமர், லக்ஷ்மணர் சீதை. இதின் அருகில் குல்சராபுரத்து அண்டையில், உஷ்ணநீர்ச்சுனைகளுமுண்டு. யாத்திரை அதிகம்.

250 கெண்டுலி:—சிவஸ்தலம், சிவன், உமை, கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, கோவிந்தகீதைகள் செய்தவரும், தலைச்சாத்துக்களையும் திருடி காலையும்வெட்டி, கிணற்றில் தள்ளிய திருடர்களுக்கும், இராஜனைப் பரிசளிக்கச்செய்த ஞானவானுன ஜயதேவர், இந்த ஸ்தலத்திற்கு அருகிலுள்ள திந்துவில்வகாமில் நாராயணசாஸ்திரிகளிடம் ஜநித்து, பத்மாவதி என்னும் கற்புள்ள மங்கையைமணந்து, ஜகந்நாதத்தில் இருவரும் நற்கதியடைந்தார்கள்.

251 மகஸ்தாநகர்:—கல்கத்தாவின் வடகிழக்கு 216-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, பரசுராமர் க்ஷத்திரியர்களைக் கொன்றபின் ஆண்டஸ்தலம். மகஸ்தாநகார் ரெயில்ஸ்டேஷன்.

252 கோலாகாட்:—கல்கத்தாவின் தெற்கு 34-மைலில் உள்ளது. சிவஸ்தலம். சங்கமூகேசர், உமை, கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, ரூபநாராயணநதி, சமுத்திரசங்கமம் பாண்டவர்கள் அசுவமேதயாகத்துக்குப் பூமிப்பிரதக்ஷிணஞ் செய்யும்போது, பக்தரான கைவர்த்தராஜனுல், பிரார்த்திக்கப்பட்டு, கிருஷ்ணனும், அருச்சுனனும் இவ்விடம் தங்கியதால் கிருஷ்ணன் முக்கியம். கோலாகாட் ரெயில்ஸ்டேஷன்.

253 டாம்லுக்:—கோலாகாட்டுக்கு 10-மைலில் உள்ளது, விஷ்ணுஸ்தலம், ஹரி, லக்ஷ்மி, விஷ்ணு. ஹரியின் வியர்வை ஜலமாகிய ரூபநாராயணநதி யோரம் இதில் பார்க்பிமா வென்னும் பிரசித்தமான காளிகோவிலுமுண்டு.

254 டன்த்டன் —கல்கத்தாவின் சமீபம், சிவஸ்தலம், அபாமனேசர், சிபாபதினகவதி, விக்பாதரஸரோவரம். ஞானஸரோவரம், இந்த இரண்டு குளங்களுக்கும் ஒருவைக் சுரங்கமுண்டு. பெரியசந்தி, போஜராஜனுல் கட்டப்பட்டு பூஜிக்கப்பட்டஸ்தலம்.

255 கல்க்கத்தா:—அநேக ரெயில்ஸ்டேஷனுள்ள ராஜதானி டவுன். சிவஸ்தலம், சிவன், உமை, காளி, கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, அநேக ஆலயங்களும், வியாபாரஸ்தலங்களும், முக்கிய துறைமுகங்களும், எல்லா ஆபீசுகளும், உள்ள ஸ்தலம். இதின் ஐந்துமைலிலுள்ள, காளியைப்பூஜித்த ராமகிருஷ்ண பரமஹம்ச ரென்னும் பிராம்மணருக்கு, ஞானமும் கல்வியு முண்டானது. இதில் கங்காநதி யோரமுள்ள காளிகட்டத்தில், காளியும், சிவ விஷ்ணு கோவில்களும், சத்திரங்களும், முக்கியம். காளிகட்டமென்று பெயருள்ள இந்த டவுன், கல்க்கத்தா வென்றுவழங்குகிறது.

256 ஸ்ரீமத்கங்காஸாகரசங்கமம்:—கல்கத்தாவின் தெற்கு 35-மைலிலுள்ள டயமண்டு ஹார்பர் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி 30-மைல் படகில் போகவேண்டும். சிவஸ்தலம் சங்கமேசர், உமை, விஷ்ணு, புலிக்காடு, பகீரதராஜன், பிரும்மா, சிவன் இவர்களிடமிருந்து தவத்தால் அடைந்த இக்கங்காநதி விஷ்ணு பாதகங்கையல்லவென்றும், இமவான்புத்திரியான குடிலாகங்கை, ஆகாசகங்கையாகி விஷ்ணுபாத ஸலிலமானது என்றும் இது வேறு கங்கையென்றும், வாயுபுராண வசனத்தாலும், பாத்மோத்தர புராணத்தாலும், கேதாரகண்ட வசனத்தாலும், ஸ்காந்தபுராணத்தாலும், தெரியவருகிறது.

257 ஜாஜ்பூர்:—கல்கத்தாவின் தெற்கு 202-மைலில் உள்ளது: சிவன், உமை வைதரணீநதி, புராதந சிவஸ்தலம். ரெயில்ஸ்டேஷன்.

258 வைதரணீரேட்:—கூர்டாஜங்ஷனுக்கு வடக்கு 82-மைலில் உள்ளது சிவன், உமை, வைதரணீநதி இந்நதியில் ஸ்நானம்செய்பவர்கள் யமலோகத்திலுள்ள வைதரணீநதியை எளிதில் தாண்டி நற்கதியடைவார்கள். ரெயில்ஸ்டேஷன்.

259 புவநேஷ்வார்:—என்பது (புவநேசுவரம்) கூர்டாஜங்ஷனின் வடக்கு 12-மைலில் உள்ளது. சிவஸ்தலம், லிங்கராஜர், சக்தி, சிவதீர்த்தம், இந்தகோவில் 500-அடி சமசதுரம் கருங்கல் இழைப்பு, இதைச் சுற்றி 7000-கோவில்களிருந்ததாகச் சொல்லுவதற்கு அடையாளமாக இடிந்துள்ள அநேககோவில்கள் காணப்படுகின்றன. இப்பொழுதும 500 - கோவில்கள் சுற்றிலுமிருக்கின்றன. அவற்றுள் சிவஸ்தலங்களில் அடியில் கண்ட தேவர்களுள்ளன. ரெயில்ஸ்டேஷன்.

260 ஷை கோவிலில் முக்தேசர், உமை.
261 ஷை மகாதேவர், மகாதேவி.
262 ஷை புவநேசுவரர்.
263 ஷை சந்திரேசர்.
264 ஷை இந்திரேசர்.
265 ஷை அக்நீசர்.
266 ஷை யமேசர்.
267 ஷை நிருருதீசர்.
268 ஷை வருணேசர்.
269 ஷை மாருதேசர்.
270 ஷை குபேரேசர்.

271 சங்குகர்ணம்:—சிவஸ்தலம், மகாதேவர், உமை, சோணபத்ராநதிதீரம், இந்த நதியின் ரெயில்ப்பாலம் இந்தியாவுக்குள் மிகப் பெரியது. சைவாகமசுவயம்பு ஸ்தலம்.

272 ஜகந்நாதம்:—விஷ்ணுஸ்தலம். கிருஷ்ணர், ருக்குணிமி சத்தியபாமை, பலராமர், சுபத்திரை, நரசிம்மர், சமுத்திரம், ரோகிணிக்குளம், சக்கரதீர்த்தம, வடவால், பிருகுமுநி, புண்டரீகன், அம்பரீஷன் பூஜித்தது. 6000-பிராமணர்கள் பூஜித்ததாகத் திருச்செந்தூர்ப் புராணத்தில் சொல்லப்படுகிறது. கலியுகத்தில் திந்து வில்வகாமில் ஜனித்த ஜயதேவர் இதில் கீதகோவிந்தமென்னும் அஷ்ட பதிகள் பாடி, பாரியாள் பத்மாவதியுடன் நற்கதி யடைந்தார். 800-வருஷங்களுக்குமுன் அக

ங்க பீமராஜன் 5000000-பவுன் செலவிட்டுக் கோவிலும் 192-அடி உயரமுள்ள கோபுரமுங் கட்டினார். ஆடிமீ 16 சக்கரங்களுள்ள பெரிய ரதோற்சவம், இதில் பிரசாதமெல்லாரும் உண்ணலாம். இந்தஸ்தலம் கூர்டா ஜங்ஷனின் கிழக்கு 30-மைலில் உள்ளது. ஜகந்நாதம் ரெயில்ஸ்டேஷன்.

273 ஷை ஜகந்நாதம் சிவஸ்தலம். கபோதேசர், பிங்களை, பக்ஷிகள் பூஜித்தன.

274 ஷை கோவிலில் சிவஸ்தலம். மார்க்கண்டேசர், உமை, மார்க்கண்டேயர் பூஜித்தது.

275 ஷை கோவிலில் சிவஸ்தலம். கோடிலிங்கேசர், உமை, சக்தி பூஜித்தது. இதற்கு புருஷோத்தமமென்றும் பெயர்.

276 கோரார்க்:—ஜகந்நாதத்தின் வடமேற்கு 19-மைலிலுள்ளது. சாம்பசிவன், சாம்பவி, சூரியநாராயணர், சாயாதேவி, 16000-தாய்மார்களை அவமதித்ததற்காக குஷ்டரோகியாகும்படி நாரதர் சபித்ததால், கிருஷ்ணகுமாரன் சாம்பன் இதில் பூஜித்து அவன் சாபம் நீங்கியது.

277 சகிகோபால்:—கூர்டா ரோட் ஜங்ஷன் கிழக்கிலுள்ளது. விஷ்ணுஸ்தலம், கோபாலஜீ. சகிகோபால், ரெயில் ஸ்டேஷன்.

278 திருப்பருப்பதம் என்பது (ஸ்ரீசைலம்) கர்நூல் ஜில்லா நந்திகோட்டூர் தாலூகாவில் நந்தியால் ரெயில் ஸ்டேஷனின் வடகிழக்கு 60-மைலிலுள்ளது. சிவஸ்தலம், மல்லிகார்ச்சுனேசர், பருவதநாயகி, பாலாழி, மகாநதி, சிவராத்திரியில் மட்டும் பூஜை முக்கியம். அவாதசசிவாகம சுயம்புஸ்தலம். நந்திமலை, இந்திரன், பிருங்கி, நந்தி, தேவர்கள், ரிஷிகள், அஜமுகி பூஜித்தது. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பதிகம்-1 திருநாவுக்கரசு நாயனார் பதிகம்-1. சுந்தர மூர்த்தி நாயனார் பதிகம்-1. ஆ பதிகம்-3,

279 நாகப்பூர்:—சிவஸ்தலம், நாகநாதர், நாகாம்பாள், துவாதசஸ்தலம். இதின் வடக்கு சித்ரகிரியில் ராமர் பிரபலம். நாகப்பூர் டவுன் ரெயில்ஸ்டேஷன்.

280 நாகநாவைத்தியநாதம்:—நாகப்பூரின் சமீபம், சிவஸ்தலம், வைத்தியநாதர், உமை, துவாதசஸ்தலம்.

281 கிஷ்கிந்தை:—பல்லாரிக்கு மேற்கு ஹாஸ்பேட் ஜங்ஷனின் வடகிழக்கு 8-மைலில் உள்ளது. சிவஸ்தலம், ராமேசர், உமை, ராமர், லக்ஷ்மணர், சீதை, அநுமார், துங்கபத்திரா நதி, பம்பாசரசு, ரிசியமூகபருவதம், ராமர் சுக்ரீவனைச் சிநேகித்த, வாலியைக் கொன்றஸ்தலம்.

282 ஹேமகூடம்:—கிஷ்கிந்தைக்கு சமீபம் சிவஸ்தலம், விருபாக்ஷர், உமை, சிவாகமசுவயம்பு ஸ்தலம்.

283 விருபாக்ஷம்:—ரிசியமூகமலைமேலுள்ளது. சிவஸ்தலம், கோடிலிங்கம், உமை, ராமர் பூஜித்தது.

284 பீமேசுவரம்:—சிவஸ்தலம், பீமேசர், உமை, துவாதசசைவாகம சுவயம்பு ஸ்தலம்.

285 ஹம்பி:—ஹாஸ்பேட் ஜங்ஷனின் வடகிழக்கு 6-மைலிலுள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, ராமர், லக்ஷ்மணர், சீதை, துங்கபத்திராநதி.

286 பழையவிஜயநகரம்:—ஹம்பியின் சமீபம் சிவஸ்தலம், விஜயேசர், உமை, ஸஹஸ்ரநாமர். நரசிம்மர் கோவில்களும். துருக்கர்களுடைய சண்டையில் இடிபட்ட அநேக ஆலயங்களும் பழையகோட்டைகளு முண்டு.

287 சோலாப்பூர்:—ரேய்ச்சூருக்கு வடக்கு, சிவஸ்தலம், சிவன், உமை. சோலாப்பூர் டவுன் ரெயில்ஸ்டேஷன்.

288 பலிசட்டம்:—மதிராஸின் வடகிழக்கு 439-மைலில் உள்ள நரஸாபட்டிணம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து 23-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, திருவிக்கிரமர், லக்ஷ்மி, வராகநதி, மகாபலிச்சக்கிரவர்த்தி தானம் செய்த ஸ்தலம்.

289 அந்தர்வேதி:—பெஜவாடாவுக்கு வடக்கு; நிஷதவேல் ரெயில்ஸ்டேஷனின் சமீபத்தில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, ராமர், லக்ஷ்மணர், சீதை, இதில் மாகசுத்த ஏகாதசியில் நடக்கும் சப்தசாதன யாத்திரை, முக்கியம். சிதம்பர மாகாத்மியத்தில் சொல்லுகிறபடி, தில்லை 3000-பிராமணர்கள் இதில் வந்துயாகம்நடத்தியஸ்தலம். பிரும்மா பூஜித்தது.

290 விணுகொண்டா:—குண்டக் கல்லின் வடகிழக்காய் 208-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ராமர், லக்ஷ்மணர், ராமர் சீதையை ராவணன் எடுத்ததாகக் கேட்டஸ்தலம்.

291 பத்ராசலம்:—ராஜமஹேந்திரத்தின் வடமேற்கு 60-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம், ராமர், லக்ஷ்மணர், சீதை, கோதாவரிநதி, பதத்ரகிரியாரும், ராமதாசரும் முக்தி அடைந்தஸ்தலம். இதில் ஸ்ரீராமநவமி முக்கியம்.

292 ஹாஸ்பேட்:—பல்லாரிஜில்லாவில் சிவஸ்தலம் ஜங்ஷன் ஸ்டேஷன், விரூபாக்ஷர், உமை இதின் 6-மைலில் கமலாபுரஸ்தலமுண்டு.

293 மேயிலா:—பல்லாரி ஜில்லா அடகள்ளி தாலூகாவில், உள்ளது. சிவஸ்தலம் சப்தகோடீசர், உமை மல்லாசுரனைக் கொன்ற நாய்சைநியங்களுள்ள காளபைரவரும் முக்கியம்.

294 உச்சிநி-பல்லாரிஜில்லா குட்லிகி தாலுகாவில் உள்ளது. சிவன், உமை. லிங்கங்கட்டி ஜாதிகள் பிரபலம்.

295 பல்லாரி:—டவுன் சிவன், உமை, விஷ்ணு கோவில்களும் முக்கியம். ரெயில்ஸ்டேஷன்.

296 சிவமோக்கா:—சிருங்ககிரியின் வடகிழக்கு 19-மைலில் உள்ளது. சிவன், உமை.

297 சிருங்ககிரிமடம்:—பீரூர்ஜங்ஷனின் மேற்கு 35-மைலிலுள்ளது. சிவஸ்தலம் சங்கரர், உமை, சாரதாம்பாள் துங்கா நதியின் வடகரை சிருங்ககிரி ரிச்யசிருங்கரும் விபண்டகரிஷியும், தபசுசெய்து பூஜித்தது. 1200-வருஷங்களுக்கு முன், காலடியில்ஜநித்த, ஆதிசங்கராச்சாரியார், காச்மீரத்திலிருந்து கொண்டுவந்த சரஸ்வதி, சாரதாம்பாள்.

298 தீர்த்தபல்லி:—சிவமொக்காவின் தென்மேற்கு 30-மை லில் உள்ளது, சிவஸ்தலம் ராமேசர், உமை, துங்காநதியின் வடகரை. பரசுராமர் தபசுசெய்த குகையுண்டு.

299 ஐதராபாத்:—டவுன் சிவன், உமை நிஜாம் ராஜதானி ரெயில்ஸ்டேஷன்.

300 சிக்கந்திராபாத்:—ஐதராபாத்தின் சமீபம் சிவன் உமை, விஷ்ணுவும் முக்கியம்.

301 வாரங்கல்:—ஐதராபாத்தின் கிழக்கு 3-மைலில் உள் ளது. ருத்திரர், பத்மாக்ஷி கோபுரங்கள்மிகப்பெரியவை ஆயிரக் கால் மண்டபமுமுண்டு. 1168-ம் வருஷம் இதிலாண்ட ருத் திரதேவனென்னும், அரசன் கட்டினது சிவஸ்தலம் உற்சவம் பிரபலம் யாத்திரை அதிகம் ரெயில்ஸ்டேஷன்.

302 கடகம்:—கெஞ்சத்தின் வடக்கு சிவன், உமை விஷ்ணு கோவில்களுமுண்டு.

303 கள்ளிக்கோட்டா:—கெஞ்சத்தின் வடக்கு 18-மைலில் உள்ளது. சிவன், உமை ஜமீனுள்ளது.

304 ஆஸ்கா:—கெஞ்சத்தின் வடக்கு டவுன் சிவன், உமை மகாநதியில் ரிஷிகுல்யாநதி சேருமிடம்.

305 கெஞ்சம்:—டவுன் சிவன், உமை, விஷ்ணு கோவில்கள் உண்டு ரெயில்ஸ்டேஷன்.

306 பர்ஹாம்பூர்:—கெஞ்சத்தின்தெற்கு 19-மைலில் டவுன் சிவன், உமை மலயமலை ரெயில்ஸ்டேஷன்.

307 கலிங்கபட்டினம்:—விசாகப்பட்டினம் ஜில்லா வடகோடி யில் சிவஸ்தலம் சங்கமுகேசர், அம்பிகை, அம்சதாரைநதி கட லில் சேருமிடம்

308 சிக்காகுளம்;—விசாகப்பட்டினத்தின் வடக்கு 80-மை லிலுள்ளது. சிவஸ்தலம், சங்கமுகேசர், இதின் தெற்கு 8- மைலில் கூர்மமூர்த்தி, முக்கிய முள்ளசங்கமம். கூர்மஸ்தலம் பிரபலம். சிக்காகுளம் ரெயில்ஸ்டேஷன்.

309 ஜேப்பூர்:—விசாகபட்டினத்தின் மேற்கு மலைநாடு சிவஸ்தலம், சிவகிரீசர், உமை, பாலகொண்டாமலை யென்பது (மகேந்திரகிரி) ஜமீனுள்ளது. திருநாவுக்கரசுநாயனார் மகேந்திரகிரி யென்ற வைப்புஸ்தலம்.

310 விஜயநகரம்:—விசாகப்பட்டினத்தின் வடக்கு 38-மைலில் உள்ளது. சிவஸ்தலம். விஜயேசர், உமை, கிருஷ்ணர், நரசிம்மர், ராஜாவசிக்கும் ஜமீனுள்ளது.

311 சிம்மாசலம்:—விசாகப்பட்டினத்தின் வடக்கு 5-மைலிலுள்ளது. ரெயில்ஸ்டேஷன். விஷ்ணுஸ்தலம், நரசிம்மர், லக்ஷுமி, வராகமூர்த்தி சிம்மகிரி கூர்மமூர்த்தியும் உண்டு.

312 விசாகப்பட்டினம்:—மதிராசின் வடக்கு 480-மைலில் உள்ளது. டவுன் சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுகோவில்களும் முக்கியம். விசாகப்பட்டினம் ரெயில்ஸ்டேஷன்.

313 வால்டேர்:—விசாகப்பட்டினத்தின் 2-மைலிலுள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுவுமுண்டு. வால்டேர் ரெயில்ஸ்டேஷன்.

314 பீடாபுரம்:—கோதாவரியின் வடக்கு 40-மைலில் உள்ளது. சிவஸ்தலம், பிதாமகேசர், உமை, கதாதரமூர்த்தி, லக்ஷுமி. கயாசுரன்மார்பில் பிரும்மா யாகஞ்செய்யும்போது கயாசுரன் சிரசுகையையிலும், பாதம் இதிலும் இருந்ததால் பாதகயை இதுவென்று, கயையைப்போலவே, இதிலும் சிரார்த்தஞ் செய்து, பிண்டமும் வைக்கிறார்கள்.

315 காகிநாடா:—பீடாபுரத்தின் கிழக்கு 10-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, ராமர், லட்சுமணர், சீதை, சமுத்திரம் துறைமுகப்பட்டினம்.

316 இராஜமகேந்திரம்:—கோதாவரியின் வடக்கு 3-மைலிலுள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, ராமர் லட்சுமணர், சீதை, கோதாவரிக்குப்பாலமுள்ளது. கோடீசர் பிரபலம் இராஜமகேந்திரம் ரெயில்ஸ்டேஷன்.

317 கோதாவரி:—ஜில்லா டவுன் சிவஸ்தலம், கௌதமேசர் உமை, விஷ்ணுவுமுண்டு. கோதாவரி ரெயில்ஸ்டேஷன்.

318 கோரங்கி:—என்பது (சப்தகோதாவரி) சிவஸ்தலம் பீமேசர், உமை, கோதாவரி ஏழுபிரிவாக சமுத்திரசங்கமமாகிற சிவாகமஸ்தலம்.

319 ஹரிச்சத்திரம்:—கோதாவரியின் சமீபம் ஹரேசர், உமை, கோதாவரிநதி சிவாகமசுவயம்பு ஸ்தலம திருநாவுக்கரசுநாயனூர் பாடிய வைப்புஸ்தலம்.

320 தவளேசுவரம்:—கோதாவரியின் சமீபம் சிவஸ்தலம், சிவன், உமை, கோதாவரிக்கு அணைக்கட்டுமே, பாலமுமுள்ள முக்கியஸ்தலம் விஷ்ணுவும் பிரபலம்.

321 கோவ்வூர்:—கோதாவரியின் தெற்கு 3-மயிலில் உள்ளது சிவஸ்தலம, கௌதமரிஷி, கோதாவரிநதியைகொண்டு வந்த ஸ்தலம், வசிஷ்டர், முதலிய அநேகரிஷிகள் பூஜித்தது.

322 பீமடோல்:—கோதாவரியின் தெற்கு 40-மைலில் உள்ளது. சிவன், உமை, ராமர், லக்ஷுமணர், சீதை ஜமீனுள்ள ஸ்தலம்.

323 கிருஷ்ண:—ஜில்லா டவுன் சிவன், உமை, கிருஷ்ணர், ருக்குமிணி, சத்தியபாமை கிருஷ்ணாநதி ரெயில்ஸ்டேஷன.

324 பெஜவாடா:—ஜங்ஷன்ஸ்டேஷன சிவன், உமை விஷ்ணுவும் முக்கியம்.

325 பந்தா:—என்பது (மசூலிபட்டிணம்) கிருஷ்ணவின் கிழக்கு சங்கமேசர், உமை, கிருஷ்ணாநதி சமுத்திரசங்கமம்.

326 தெனலி:—குண்டூர் ஜில்லாவில் தாலூகாரெயில்ஸ்டேஷன் சிவன, உமை, ராமர், லக்ஷுமணர், சீதை தெனலிராமனென்னும், விகடகவி பிரசித்தம.

327 மங்களகிரி:—விஷ்ணுஸ்தலம் குண்டூர் ஜில்லாவில் நரசிம்மர், லட்சுமி இதில் பானகநிவேதனம முக்கியம்.

328 வேட்டபாளயம்.—தெனலியின் தெற்கு 40-மைலில் உள்ளது சிவன், உமை ரெயில்ஸ்டேஷன.

329 அமராவதி.—குண்டூர் ஜில்லாவில் சிவஸ்தலம் அமரேசர், உமை விஷ்ணுவுமுண்டு.

330 சாவாடி:—விஷ்ணுஸ்தலம் வேட்டபாளையத்தின் தெற்கு 15-மைலில் உள்ளது. ராமர், லட்சுமணர், சீதை, ராமர் கரனைத்தூரத்திக் கொன்றஸ்தலம்.

331 காவலி.—கரவாடியின் தெற்கு 46-மைலில் உள்ளது. சிவன், உமை விஷ்ணுவுமுண்டு.

332 சிங்கராயகொண்டா.—கரவாடியின் தெற்கு 23-மைலிலுள்ளது. விஷ்ணுஸ்தலம் நரசிம்மர், லட்சுமி, சிம்மகிரி.

333 உலவப்பாடு—சிங்கராயாகொண்டாவின் தெற்கு 6-மைலில் உள்ளது. சிவன், உமை விஷ்ணுவும் முண்டு.

334 பீடர்கோண்டா.—கரவாடியின் தெற்கு 11-மைலில் உள்ளது, விஷ்ணுஸ்தலம் ராமர், லட்சுமணர் சீதை மலைமேல் கோவில்.

335 வங்கோல்.—கரவாடியின் தெற்கு 6-மைலில் உள்ளது. சிவன், உமை விஷ்ணுவும் முக்கியம்.

336 உதயகிரி—நெல்லூர் ஜில்லா மேலோரம் சிவஸ்தலம் கிரீசர், உமை இதில் அநேகம் ஆலயங்கள் இடிந்திருக்கின்றன திருநாவுக்கரசுநாயனார் பாடிய வைப்புஸ்தலம்.

337 நெல்லூர்.—ஜில்லா டவுன் சிவன், உமை, விஷ்ணுவும் முக்கியம். ரெயில்ஸ்டேஷன்.

338 கர்னூல்—ஜில்லா டவுன் சிவன், உமை, ராமர், சீதை துங்கபத்திராநதி ரெயில்ஸ்டேஷன்.

339 அகோபிலம்—என்பது (சிங்கவேள்குன்றம்) விஷ்ணுஸ்தலம் நரசிம்மர், லட்சுமி. பாபநாசதீர்த்தம் மலையின் அடியிலொரு கோவில் மலையின் மத்தியிலொரு கோவில் மலையினுச்சியிலொரு கோவில் இதில் ராமாயணம் முழுவதும் படத்துடன், எழுதி யிருக்கிறது பிரசித்தமான பெரிய ஆதீனமுமுண்டு குகைவிமானம் ஹிரண்யனைக் கொன்று, பிரகலாதனுக்கு அருள் செய்தவர் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார மங்களாசாஸனம் இந்திர தீர்த்தமுண்டு.

340 ஷை அகோபிலம். விஷ்ணுஸ்தலம், பெரியகாடு, ராமர், லட்சுமணர், சீதை, கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை, நரசிம்மதீர்த்தம், இதில் 9-நரசிம்மருண்டு. நந்தியால் ரெயில் ஸ்டேஷனின் தெற்கு 30-மைலில் உள்ளது.

341 குத்தி:—குண்டக்கல்லின் தெற்கு 18-மைலில் உள்ளது சிவஸ்தலம், சிவன், உமை, விஷ்ணுகோவிலுமுண்டு. குத்தி ரெயில்ஸ்டேஷன்.

342 தாடிபத்திரி:—குத்தியின்தெற்கு 30-மைலில்உள்ளது. சிவஸ்தலம். சிவன், உமை, ராமர், லட்சுமணர், சீதை விஜய நகரராஜர்களால் கட்டப்பட்ட இவ்வாலயத்தில், ராமாயணக் கதைகள் எழுதியுள்ளன. தாடிபத்திரி ரெயில்ஸ்டேஷன்,

343 கொண்டாபுரம்;—தாடிப்பத்திரியின் தெற்கு 17-மைலிலுள்ளது. சிவன், உமை, கிருஷ்ணன் கொண்டாபுரம் ரெயில்ஸ்டேஷன்.

344 குண்டிகோட்டா;—கொண்டாபுரத்தின் 5-மைலிலுள்ளது. சிவன், உமை, பழைய கோட்டையும், குகையுமுண்டு.

345 பெண்ணேறு;—கொண்டாபுரத்தின் 2-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன் உமை, நாராயணர், உத்தரபிநாகினி.

346 கமலாபுரம்;—கொண்டாபுரத்தின் தெற்கு 35-மைலிலுள்ளது சிவன், உமை, ராமர், சீதை. கமலாபுரம் ரெயில்ஸ்டேஷன்

347 கடப்பை;—கமலாபுரத்தின் தெற்கு 14-மைலில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, ராமர், லட்சுமணர், சீதை, அநேக ஆலயங்களுள்ள டவுன். கடப்பை ரெயில்ஸ்டேஷன்.

348 புஷ்பகிரி;—கமலாபுரத்தின் வடகிழக்கு 5-மைலிலுள்ளது. சிவஸ்தலம், இராதார்ச்சுநேசர், உமை, உத்தரபிநாகினி இதில் அருச்சுனனுடைய காண்டீவத்தால் அடிபட்ட பாண லிங்கமும் அருச்சுனனுக்கு கீதையை உபதேசித்த பார்த்த சாரதியும் முக்கியம்.

349 கிருஷ்ணபுரம்;—கடப்பையின் வடக்கு 5-மைலில் உள்ளது. சிவன், உமை உத்தரபிநாகினி இது ரெயில்ஸ்டேஷன்.

350 சித்தவடம்;—கடப்பையின் தெற்கு 7-மைலிலுள்ளது சிவஸ்தலம் சித்தேசர், உமை, குபேரன் பூஜித்ததாக, கந்தபுராணத்திலுள்ளது. சித்தவடம் ரெயில்ஸ்டேஷன்

351 ஒண்டிமிட்டா;—கடப்பையின் தெற்கு 15-மைலிலுள்ளது. சிவன், உமை, கிருஷ்ணன், ருக்குமிணி, சத்தியபாமை உத்தாபிநாகிநதி.

352 கோரிபிட்னூர்;—குண்டக்கல்லிலிருந்து, தெற்கே பங்களூர் போகும் ரெயிலில் 126-மைலில் உள்ளது. விஷ்ணுஸ்தலம் கிருஷ்ணர், ருக்குமிணி, சத்தியபாமை, உத்தாபிநாகினி நதி பாரதத்தில், கிருஷ்ணன் தூதுபோன தருணத்தில் அவரை உபசரித்து இடம் கொடுத்ததற்கு, துரியோதனன், சினங்கொண்டு பேசினதால், விதுரர், வில்லைமுறித்துத் தீர்த்தயாத்திரை செய்தபோது தபசு செய்தஸ்தலம். கோரிபிட்னூர் ரெயில்ஸ்டேஷன்.

353 டொட்டதருகாட்;—கோரிபிட்னூரின் அடுத்த தென்புறத்து ரெயில்ஸ்டேஷன். விஷ்ணுஸ்தலம். அசுவத்தநாராயணர், உத்தாபிநாகினி. விதுரர் 5000-வருஷங்களுக்கு முன் வைத்த, அசுவத்தமரம் இருக்கிறது. தரிசித்தால் சகலவியாதிகளும் தீருகின்றன. உத்தாபிநாகினி என்பது வடபெண்ணை. டொட்டதருகாட் ரெயில்ஸ்டேஷன்.

354 வேம்பள்ளி;—கடப்பையின் தென்மேற்கிலுள்ளது சிவஸ்தலம். சிவன், உமை, பாபாக்கினிநதி ராமரும நந்திகேசரும் பூஜித்தஸ்தலம்:

355 தலைகோணமலை;—கடப்பைஜில்லாவில், வாயல்பாடு தாலுக்காவில் உள்ளது. சிவஸ்தலம், சிவன், உமை, பாபநாசதீர்த்தம். ஸ்ரீராமர் பூஜித்த தண்டகாரண்யம் சிவராத்திரி முக்கியம் தண்டகனென்னும் அரசன் இதில் வசித்த சுக்கிராசாரியின் பெண்ணோடு வலியப்புணர்ந்ததால், நகரம் முழுவதும்காடாகும்படி சுக்கிராசாரி சபித்ததால் தண்டகாரண்யமாயிற்று.

356 மதநப்பள்ளி;—கடப்பைஜில்லாவில் இது தாலூகா சிவன், உமை, விஷ்ணுவும் முக்கியம்.

357 சோம்பள்ளி;—மதநபப்பள்ளி தாலூகாவில் உள்ளது. சிவஸ்தலம் சென்னேசர், உமை, விஷ்ணுவு முண்டு.

358 ராயகோடி;—கடப்பைஜில்லாவில் இது தாலூகா சிவஸ்தலம் உக்கிரவீரபத்திரர் மாண்டவிநதி.

359 பொருமாமிலா;—கடப்பை ஜில்லாவில் பாடுவேல் தாலுக்காவில் உள்ளது. சிவஸ்தலம், திருநேத்திரர், காளபைரவர் இதில் லட்சுமிசாந்தர் கோவிலும் முக்கியம்.

360 பாடுவேல்.—கடப்பைஜில்லாவில் இது தாலூகா விஷ்ணுஸ்தலம் வேங்கடேசர், அலமேலுமங்கை.

361 கதிரி.—கடப்பைஜில்லாவில் இது தாலூகா விஷ்ணுஸ்தலம் நரசிம்மர், லட்சுமி கதிரிமரத்திலுண்டானவர்.

362 உண்டவள்ளி.—குண்டூர் ஜில்லாவில் இது தாலூகா விஷ்ணுஸ்தலம் அநந்தசயனர் லட்சுமி.

363 கோட்டபட்டினம்.—குண்டூர் ஜில்லாவில் வங்கோல் தாலூகாவில் உள்ளது விஷ்ணுஸ்தலம் லட்சுமீ நாராரணர்.

364 கோலகொண்டா.—கிருஷ்ணாஜில்லாவிலுள்ளது சிவன் உமை விஷ்ணுவும் முக்கியம்.

365 எல்லூர்.—கிருஷ்ணாஜில்லாவிலுள்ளது. சிவன், உமை விஷ்ணுவும் முக்கியம்.

366 பொப்பிலி விசாகபட்டிணம் ஜில்லாவில் உள்ளது சிவன் உமை விஷ்ணுவும் முக்கியம், இதில் ரங்கநாதர் முக்கியம்.

367 கூவினஹதகள்ளி:—பல்லாரிஜில்லாவில் உள்ளது. சிவஸ்தலம் யோகேசர், உமை விஷ்ணுவும் முக்கியம்.

368 பெனுகொண்டா.—அநந்தபூர் ஜில்லாவில் உள்ளது. விஷ்ணுஸ்தலம் லட்சுமீநாராயணர்.

369 அநந்தபுரம்.—ஜில்லா சிவன், உமை விஷ்ணு கோவில்களுமுண்டு ரெயில்ஸ்டேஷன்.

370 தருமாபுரம்.—ஜங்ஷன் சிவன், உமை விஷ்ணுவும் முக்கியம் ரெயில்ஸ்டேஷன்.

371 க்ஷீராப்தி விஷ்ணுஸ்தலம் க்ஷீராப்திநாதர் கடல் மகள் நாச்சியார் அமுததீர்த்தம் பிரும்ம ருத்திராதிகளுக்கும், மாயைக்கும், பிரத்தியக்ஷம் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம்.

372 வைகுண்டம்.—விஷ்ணுஸ்தலம் பரமபதநாதன், வைகுண்டநாதன் பெரியபிராட்டியார் அநந்தாங்க விமாநம் விரஜாநதி அயிரமமதபுஷ்கரிணி சோமஸவநம் க்ஷிளமரம் தெற்கே திருமுகமண்டலம் வீற்றிருந்தகோலம் அநந்தகருடவிஷ்வக்ஸேநர்முதலிய நித்ய சூரிகளுக்கும், முக்தர்களுக்கும் பிரத்தியக்ஷம் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் மங்களாசாசனம். இது எல்லா உலகங்களுக்கும் மேலுள்ளது.

373 சிவலோகம்.—சிவன், உமை, சத்திய லோகத்துக்கு மேலுள்ளது. நித்திய சூரிகளும், முக்தர்களும், தரிசிக்கும் முக்திஸ்தலம் திருப்பதிக வைப்புஸ்தலம்.

374 மேருகிரி;—இமயகிரிக்கு வடக்கிலுள்ளது. பரமசிவன், பார்வதி. திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகத்திலுள்ள வைப்புஸ்தலம். திருமூர்த்திகளுக்கும், மற்றெல்லா தேவர்களுக்கும் இதில் முக்கிய ஸ்தலங்களுண்டு. இந்த ஸ்தலங்களெல்லாம் அடங்கிய இந்தியாவைப் பரதகண்டமாகவும், மற்றெல்லா தேசங்களையும் நவகண்டங்களில் மற்ற எட்டு கண்டங்களாகவும் அறிந்து கொள்க அன்றியும், ஆகாசத்தில் புலப்படும் கிரகங்களும், அநேககோடி நக்ஷத்திரங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு உலகமாகும். இவ்வுலகங்களெல்லாம் அடங்கிய அண்டத்தை உண்டாக்கிய பிருமம் ஒன்றே. அப்பிரம்மத்தையே யாவரும் தியானித்து அறியவேண்டும்.

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

# திருவரங்கம்.

## பெரியாழ்வார் திருவாய்மொழி 4-10-1.

துப்புடை யாரை யடைவ தெல்லாம்
சோர்வி டத்துத் துணையா வரென்றே
ஒப்பிலே னாகிலும்நின் னடைந் தேனானைக்கு
நீயருள் செய்த மையால்
எய்ப்பென்னை வந்து நலியும்போ தங்கேதும்
நானுன்னை நினைக்க மாட்டேன்
அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தே
னரங்கத் தரவணைப் பள்ளி யானே.

## ஆழ்வார் திருநகரி திருவாய்மொழி 4-10-1.

ஒன்றுந் தேவு முலகு முயிரும் மற்றும் யாது மில்லா
அன்றுநான் முகன்றன் னொடு தேவ ருலகோ டுயிர் படைத்தான்
குன்றம் போல் மணிமாட நீடு திருக் குருகூ ரதனுள்
நின்றவா திப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடு திரே.

## திருவேங்கடம் திருவாய்மொழி 6-10-10.

அகலகில்லே னிறையுமென் றலர்மேல் மங்கை யுறைமார்பா
நிகரில்புக ழாயுலக மூன்றுடையா யென்னையாள் வானே
நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே
புகலொன்றில் லாவடியே னுன்னடிக்கீழ மர்ந்து புகுந்தேனே.

## திரு அயோத்தி திருவாய்மொழி 7-5-1.

கற்பா ரிராம பிரானை யல்லால் மற்றும் கற்பரோ
புற்பா முதலாப் புல்லெறும் பாதியொன் றின்றியே
நற்பா லயோத்தி யில்வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே.

---

## 1—வது அத்தியாயத்தின் வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்.

### திருநாவுக்கரசு நாயனார் காப்புத் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

### 13 அரணநல்லூர்.

1 தெண்ணீர்ப் புனற்கெடில வீரட்டமும்
சீக்காவி வல்லம் திருவேட்டியும்
உண்ணீரா ரேடகமும் ஊறல் அம்பருறையூர்
நறையூ ரரணநல்லூர்
விண்ணார் விடையான் விளமர் வெண்ணி மீயச்சூர்
வீழி மிழலைமிக்க
கண்ணார் நுதலார் காபுரமுங் கபாலியா ரவர்தங்
காப்புக் களே.

### திருநாவுக்கரசு நாயனார் அடைவுத் திருத்தண்டகம்.

26-வெண்டயபட்டி, கடைபக்குடி, 49-கருந்திட்டைக்குடி

2 நற்கொடிமேல் விடையுயர்த்த நம்பன்சேம் பங்குடி நல்லக்குடி
நளிநாட்டி யத்தான்குடி
கற்குடிதென் களக்குடிசெங் காட்டங்குடி கருந்திட்டைக்
குடிகடையக் குடிகாணுங்கால்
விற்குடி வேள்விக்குடி வேதிகுடி மாணிகுடி
விடைவாய்க் குடி
புற்குடி மாகுடி தேவன்குடி நீலக்குடி புதுக்குடியும்
போற்றவிடர் போகுமன்றே.

### 30 நல்லேமம்.

### திருநாவுக்கரசுநாயனார் நின்ற திருக் காப்புத்திருத்தாண்டகம்

3 தெள்ளும் புனற்கெடில வீரட்டமுந் திண்டீச்
சுரமுந் திருப்புகலூர்
எள்ளும் படையா னிடைத்தா னமுமேயீச்சரமு
நல்லேமங் கூடல்

கொள்ளுமிய லத்தார் கோடி காவுங் குரங்கணின் முட்டங்
குரும்ப லாவுங்
கள்ளருந்தத் தெள்ளியா ருள்கியேத்துங் காரோணந்
தம்முடைய காப்புக்களே.

48 தஞ்சாக்கை சுந்தரமூர்த்திநாயனார் நாட்டுத்தொகை.

4 தழலு மேனியன் றையலோர் பாக மமர்ந்தவன்
றொழலுந் தொல் வினைதீர்க் கின்றசோதி சோற்றுத்துறை
கழலுங் கோவையுடை யவன்காத லிக்குமிடம்
பழனம் பாம்பணி பாம்புரந் தஞ்சை தஞ்சாக் கையே.

52 தஞ்சை திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக்கோவை.

5 உஞ்சேனை மாகாள மூற லோத்தூ ருருத்திர கோடி
மறைக்காட் டுள்ளு
மஞ்சார் பொதியின்மலை தஞ்சை வழுவூர் வீரட்ட மாதானங்
கேதா ரத்தும்
வெஞ்சமாக் கூடல்மீயச் சூர்வைகா வேதீசுரம் விவீசுரம்
வெற்றி யூருங்
கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக்கையுங் கைலாய நாதனையே
காண லாமே.

54 தஞ்சை கொங்கணர் திருநாவுக்கரசுநாயனார்
க்ஷேத்திரக்கோவை.

6 திண்டீச்சரஞ் சேய்ஞலூர் செம்பொன்பள்ளி தேவூர் சிரபுரஞ்
சிற்றேமஞ் சேறை
கொண்டீச்சரங் கூந்தலூர் கூழையூர் கூடல்குரு காவூர் வெள்ளடை
குமரி கொங்கு
அண்டர்தொழு மதிகைவீரட் டானமையா றசோகந்தி
யாமாத் தூருங்
கண்டியூர் வீரட்டங் கருகா வூருங் கயிலாய நாதனையே
காண லாமே.

67 குடமங்கை. திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக்கோவை

7 நறையூரிற் சித்தீச்சர நள்ளாறு நாரையூர் நாகேச்
சுரநல்லூர் நல்ல
துறையூர் சோற்றுத் துறைசூலமங்கை தோணிபுரந் துருத்தி
சோமீச் சரம்

உறையூர் கடலொற்றி யூரூற்றத் தூரோமாம்
புலியூரோ ரேடகத்துங்
கறையூர் கருப்பறியல் கன்றாப் பூருங் கயிலாய நாதனையே
காண லாமே.

69 அரயமங்கை. திருநாவுக்கரசுநாயனர் திருத்தாண்டகம்.

8 விண்ணோர் பரவ நஞ்சுண்டார் போலும்வியன்றுருத்தி வேள்விக்
குடியார் போலும்
அண்ணா மலையுறையு மண்ணல் போலும் மதிஅரையமங்கை
யமர்ந்தார் போலும்
பண்ணார் களிவண்டு பாடிஆடும் பராய்த்துறை யுண்மேய
பரமர் போலும்
திண்ணார் புகார்முத் தலைக்குந் தெண்ணீர்த் திருச்சாய்க்காட் டினி
செல்வர் தாமே. [துறையும்

70 தண்டங்குறை சுந்தரமூர்த்திநாயனர் நாட்டுத்தொகை.

9 ஆண்டத் தண்டத் தினப்புற த்தாடு மமுதனூர்
தண்டந் தோட்டந் தண்டங்குறை தண்டலை யாலங்காடு
கண்டன் முண்டல் கள்சூழ கழிப்பாலை கடற்கரை
கொண்டல் நாட்டுக் கொண்டல்குறுக் கைநாட்டுக் குறுக்கையே

76 பாவநாசம். திருநாவுக்கரசு நாயனர் காப்பு
திருத்தாண்டகம்.

10 தெய்வப் புனற்கெடில வீரட்டமுஞ் செழுந்தண் பிடவூருஞ்
சென்று நின்று
பவ்வந் திரியும் பருப்பதமும் பறியலூர் வீரட்டம்
பாவ நாச
மவ்வந் திரையு மணிமுத்தமு மறைக்காடும் வாய்மூர்
வலஞ் சுழியுங்
கவ்வை வரிவண்டு பண்ணே பாடுங் களிப்பாலை தம்முடைய
காப்புக் களே.

103 மாத்தூர். திருநாவுக்கரசு நாயனர் பாவநாசப் பதிகம்.

11 புத்தூ ருறையும் புனிதனைப் பூவணத் தெம்போ ரேற்றை
வித்தாய் மிழலை முளைத்தானை வேள்விக் குடியெம் வேதியனை

பொய்த்தார் புரமூன் றெரித்தானைப் பொதியின் மேய புராணனை
வைத்தே னென்றன் மனத்துள்ளே மாத்தூர் மேய மருந்தையே.

## 2—வது அத்தியாயத்தின்
## வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்.

### 18-திருவாதவூர்

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் க்ஷேத்திரக்கோவை.

12 மாட்டூர் மடப்பாச்சி லாச்சிராமம் முண்டீச்சுரம்
வாதவூர் வாரணசி
காட்டூர் கடம்பூர் படம்பக்கம் கொட்டுங் கடலொற்றியூர்
மற்றுறை யூரவையும்
கோட்டூர் திருவா மாத்தூர் கோழம்பமுங் கோவலூர்
திருத்துண வாயில்

27-தென்களக்குடி 2-வது பதிகத்திலும்,
57-வெற்றியூர் (143) பொதியமலை 5-வது பதிகத்திலும்,
151-கந்நியாகுமரி 6-வது பதிகத்திலும் உள்ளன.
28 கண்ணைப்பதி, திருநாவுக்கரசு நாயனார் க்ஷேத்திரக்கோவை

13 மண்ணிப் படிக்கரை வாளொளிப் புத்தூர் வக்கரை
மந்தாரம் வாரணசி
வெண்ணி விளத் தொட்டிவேள் விக்குடி விளமர் விராடபுரம்
வேட்க ளத்தும்
பெண்ணைய ருட்டுறைதண் பெண்ணாகடம் பிறம்பில் பெரும்
பெருவே ளூரும் [புலியூர்
கண்ணை களாக்காரை கழிப்பாலை யுங்கயிலாய நாதனையே
காண லாமே.

### 38-திருக்கோவில், 153-நாழர்கோவில்.

திருநாவுக்கரசுநாயனார் தாண்டகம்.

14 பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டுமற்றும்
கரக்கோயில் கடிபொழில்சூழ் நாழர்கோயில்
கருப்பறியற் பொருப்பனைய கொகுடிக்கோயில்

இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்து
மிளங்கோயின் மணிக்கோயி லாலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில்சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைக டருமன்றே.

## 52-பெருந்துறை, 97-பூந்துறை.

### திருநாவுக்கரசுநாயனார் தாண்டகம்.

15 கயிலாய மலையெடுத்தான் கரங்களோடு சிரங்களுர நெரியக்
கால்விரலாற் செற்றோன்
பயில்வாய பராய்த்துறைதென் பாலைத்துறை பண்டெழுவர் தவத்து
வெண்டுறை பைம்பொழிற் [றை
குயிலாலந் துறைசோற்றுத் துறைபூந்துறை பெருந்துறையும்
குரங்காடு துறையினோடு
மயிலாடு துறைகடம்பந் துறையா வடுதுறைமற் றுந்துறை யனைத்தும்
வணங்கு வோமே.

## 84-மாந்தோட்டம், 148-திருமலை.

### சுந்தரமூர்த்திநாயனார் நாட்டுத்தொகை.

16 ஈழநாட்டு மாந்தோட்டந் தென்னாட்டி ராமேச்சுரந்
சோழநாட்டுத் துருத்திநெய்த் தானந் திருமலை
ஆழியூர னாட்டுக் கெல்லா மணியாகிய
கீழையில் லானார்க் கிடங்கிள்ளி குடியதே.

## 100-திருபுராந்தகம், 148-தேவீசுரம்.

### திருநாவுக்கரசுநாயனார் தாண்டகம்.

17 செழுநீர் புனற்கெடில வீரட்டமுந் திருபுராந்தகந்
தென்னார் தேவீச்சுரங்
கொழுநீர் புடைசுழிக்குங் கோட்டுக் காவுங் குடமூக்குக்
கோகரணங் கோலக்காவும்
பழிநீர்கை யில்லாப் பனங்காட் டூரும்பனையூர் பயற்றூர்
பராய்த் துறையுங்
கழுநீர் மதுவிரியுங் காளிங்க முங்கணபதீச் சுரத்தார்தங்
காப்புக் களே.

## 122-திருச்செந்தூர் கந்தமாதநமென்றும் பெயர்.

### திருநாவுக்கரசுநாயனார் திருவீழிமிழலைத் தாண்டகம்.

18 கயிலாய மலையுளார் காரோணத்தார்
கந்தமா தனத்துளார் காளத்தியார்
மயிலாடு துறையுளார் மாகாளத்தார்
வக்கரையார் சக்கரமாற் கீந்தார வாய்ந்த
அயில்வாய சூலமுங்கா பாலமுமமருந்
திருக்கரத் தாரானேறேறி
வெயிலாய சோதிவிளங்கு நீர்ற்றூர்
வீழிமிழலையே மேவினரே

### திருநாவுக்கரசுநாயனார் தாண்டகம்.

19 கள்ளி முதுகாட்டி லாடிகண்டாய் காலனையுங் காலாற்
கடிந்தான் கண்டாய்
புள்ளியுழை மானின்றோலான் கண்டாய் புலியுரிசேராடைப்
புனிதன் கண்டாய்
வெள்ளிமிளிர் பிறைமேற் சூடி கண்டாய் வெண்ணீற்றான்
கஞ்சேந் தீன்மேய [கண்டாய்
வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய் மறைக்காட் டுறையு
மணாளன் றானே.

## 126-சித்தமல்லி, 138-திருக்கோட்டீசுவரம்
## 142-அயனீசுவரம், 144-அக்கீசுவரம்,
## 145-அத்தீசுவரம், 150-அகத்தீசுவரம்.

### திருநாவுக்கரசுநாயனார் அடைவுத்தாண்டகம்,

20 நாடக மாடிட நந்திகேச்சுர மாகா ளேச்சுர நாகேச்சுர
நாகளேச்சுர நன்கான
கோடீச்சுரங் கொண்டீச்சுரந் திண்டீச்சுரங் குக்குடேச்சுர
மக்கீச்சுர ங்கூறுங்கால்
ஆடகேச்சுர மகத்தீச்சுர மயனீச்சுர மத்தீச்சுரஞ்
சித்தீச்சுர மந்தண்கானல்
ஈடுதிரை ராமேச்சுர மென்றென் றேத்தி இறைவனுறை
சுரம்பல வுமியம்புவோமே.

## 130-குறுங்குடி, 134-திருவண்குடி.

**திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் க்ஷேத்திரக்கோவை,**

21 **கூத்தங்குடி** வேதிகுடி புனல்சூழ் **குருந்தங்குடி**
தேவன்குடி மருவு
மத்தங்குடி தண்டிரு வண்குடியு மலம்புஞ்
சலந்தண்சடைவைத் துகந்த
நித்த நிமல னுமையோடுங் கூடநெடுங் காலமுறை
விடமென்று சொல்லாப்
புத்தர்புறங் கூறியபுன் சமணர்நெடும் பொய்களைவிட்டு
நினைந்துய்ம் மினே.

**154-சேற்றூர். திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகம்.**

22 நல்லூரே நன்றாக நட்டமிட்டு
நறையேற்றைப் பழயாறே பாயவேறிப்
பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர் மீதே
பலர்காணத் தலையாலங் காட்டினூடே
இல்லார்ந்த பெருவேளூர்த் தளியேபேணி
யிராப்பட்டீச் சுரங்கடந்து மணற்கால்புக்கு
எல்லாருந் தனிசாத்தங் குடியிற்காண
விறைப்பொழுதிற் றிருவாரூர் புக்கார்தாமே.

## 3-வது அத்தியாயத்தின் வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்.

## 5-புலிவலம், 39-திருபுவனம்.

**திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகம்.**

23 புன்கூரார் புறம்பயத்தார் புத்தூ ருள்ளார் பூவணத்தார் புலிவலத்
வலியின் மிக்க [தார்
தன்கூர்மை கருதிவரை யெடுக்கலுற்றான் றலைகளொடு மலைகளன
தாளுந் தோளும்
பொன்கூருங் கழலடியோர் விரலாலூன்றிப் பொருப்பதின்கீழ் நெரித்
புவன நாதர் [தருள்செய்
மின்கூருஞ் சடைமுடியார் விடையின்பாகர் வீழிமிழலையே
மேவி னாரே.

6-மணற்கால், 7-ராப்பட்டீசுரம் 22-வது பதிகத்திலும்,
21-விடைவாக்குடி, 99-நல்லக்குடி, 168-மாகுடி 2-வது பதிகத்திலும்,
45-சோமேசுவரம் 7-வது பதிகத்திலும்,
72-கூந்தலூர் 6-வது பதிகத்திலும்,
73-தண்டந்தோட்டம் 9-வது பதிகத்திலும்,
84-குத்தங்குடி 21-வது பதிகத்திலும்,
96-பிரம்பில், 119-காரை 13-வது பதிகத்திலும்,
132-ஆழியூர் 16-வது பதிகத்திலும்,
97 - திருவழூர், 116 - பஞ்சாக்கை 5 - வது பதிகத்திலும் உள்ளன.

## 97-திருவழூர்.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் க்ஷேத்திரக்கோவை.

24 அட்டானமென் றோதியநா லிரண்டுமழ கனுறைகா வனைத்துந் துறைக
ளெட்டாந் திருமூர்த்தி யின்காடொன்பதுங் குளமூன்றுங்
களமைந்தும் பாடிநான்கு
மட்டார் குழலாண்மலைமங்கை பங்கன் மதிக்குமிட மாகிய
பாழி மூன்றுஞ்
சிட்டா னவனபாசூ ரென்றேவிரும் பாயரும்யா வங்களா
யினதேய்ந் தறுமே.

### திருநாவுக்கரசுநாயனர் திருத்தாண்டகம்.

25 காவிரியின் கரைக்கண்டி வீரட்டானங்கடவூர் வீரட்டானங்
காமருசீ ரதிகை
மேவியவீ ரட்டானம் வழுகைவீரட்டம்வியன்பறியல் வீரட்டம்
விடையூர்திக் கிடமாங்
கோவனகர் வீரட்டங் குறுக்கை வீரட்டங் கோத்திட்டை விற்குடிவீ
ரட்டான மிவைகூறி
நாவிநவின் றுரைப்பார்க்கு நணுகச் சென்றா னமன்றமருஞ் சிவ
னமரென் றகல்வர் நன்கே.

## 117-அளப்பூர்.

ஆரைமேற்றளி திருநாவுக்கரசுநாயனுர் க்ஷேத்திரக்கோவை.

26 எச்சி லிளமர் ஏமநல்லூ ரிலம்பையங் கோட்டு ரிறையான் சேரி
அச்சிறுபாக்க மளப்பூ ரம்பரா வடுதண் டுறையழுந்தூ ராறைக்
கச்சினங் கற்குடி கச்சூரா லக்கோயில் கரவீரங் காட்டுப் பள்ளி
கச்சிபல தளியுமேகம் பத்துங் கைலாய நாதனையே காண லாமே.

56 மூழையூர் திருநாவுக்கரசுநாயனுர் க்ஷேத்திரக்கோவை.

27 தில்லைச்சிற் றம்பலமுஞ் செம்பொன்பள்ளி தேவன்
குடிசிராப் பள்ளிதெங்கூர்
கொல்லிக் குளிரறைப் பள்ளிகோவல் வீரட்டங்
கோகரணங் கோடிக்காவு
முல்லைப் புறவ முருகன்பூண்டி மூழையூர் பழையாறை
சத்தி முற்றங்
கல்லிற்றிகழ் சீரார் காளத்தியுங் கைலாய நாதனையே
காண லாமே.

98 மூவலூர் திருநாவுக்கரசுநாயனுர் குறுந்தொகை.

28 பூவணூர்தண் புறம்பயம் பூம்பொழி
லூவலூர் நன்னா லூருநன் னிலம்
கோவலூர் குடவாயில் கொடுமுடி
மூவலூரு முக்கண்ண னூர் காண்மினே.

## 123-தக்களூர், 139-ஏமப்பேரூர்.

திருநாவுக்கரசுநாயனுர் க்ஷேத்திரக்கோவை.

29 இடைமருதீங் கோயிரா மேச்சுரமின் னம்பரே
ரிடவை யேமப்பேநூர்
சடைமுடி சாலைக்குடி தக்களூர் தலையாலங்
காடுதலைச் சங்காடு
கொடுமுடி குற்றாலங் கொள்ளம்பூ தூர்கோத்திட்டை கோட்டா
கோட்டுக் காடு [று
கடைமுடிகா னூர்கடம் பந்துறைகைலாய நாதனையே
காண லாமே.

133 மாகாளம் திருநாவுக்கரசுநாயனர் திருத்தாண்டகம்.

30 மறைக்காட்டார் வலிவலத்தார் வாய்மூர்மேயார்வாள் கொளிப்புத்
தூரார் மாகாளத்தார்
கறைக்காட்டுங் கண்டனூர் காபாலியார் கற்குடியார்
விற்குடியார் காணப்பேரார்
பறைக்காட்டுங் குழிவிழிகட் பல்பேய்சூழப் பழையனூ ராலங்கா
டடிகள் பண்டோர் [ட்
மிறைக்காட்டுங் கொடுங்காலன் வீடப் பாய்ந்தார்வீழி
மிழலையே மேவினாரே.

## 147-குன்றியூர், 160-தென்கோடி.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் க்ஷேத்திரக்கோவை.

31 - ஆரூர் தில்லை யம்பலம் வல்ல நல்லம் வடகச் சியுமச்
சிறுபாக் கநல்ல
கூநூர் குடவாயில் குடந்தை வெண்ணி கடல்சூழ் கழிப்பாலை
தென்கோடி பீடார்
நீரூர் வயனின்றி யூர்குன்றி யூருங் குருகா வையூர்
நாரையூர் நீடுகான்
பேரூர் நன்னீள் வயனெய்த் தானமும் பிதற்றாய்பிறை
சூடிதன் பேரிடமே.

## 161. தளிக்குளம்.

### திருநாவுக்கரசுநாயனர் அடைவுத்தாண்டகம்.

32 நள்ளாறும் பழையாறுங் கோட்டாற் றோடு நலந்திகழு நாலாறுந்
திருவை யாறுந்
தெள்ளாறும் வளைகுளமுந் தளிக்குளமு நல்லிடைக்குளமுந்
திருக்குளத்தோ டஞ்சைக்களம்
விள்ளாத நெடுங்களம்வேட் களநெல்லிக் காகோலக் காவாளைக்
காவியன்கோ டிக்கா
கள்ளார்ந்த கொன்றையானின்ற வாறுங் குளங்களங்கா
வெனவனைத்துங் கூறுவோமே.

## 150-ஈசனூர்.

### சுந்தரமூர்த்திநாயனார் திருஇடையாற்றுத்தொகை.

33 தேசனூர் வினைதேய நின்றான் றிருவாக்கூர்
பாசனூர் மரமேட்டி பவித்திர பாவ
நாசனூர் கனிப்பள்ளி நள்ளாற்றை யமர்ந்த
வீசனா ரெய்தமா னிடையா றிடைமருதே.

## 152-விளத்தூர், 154-வேளூர்;

### சுந்தரமூர்த்திநாயனார் நாட்டுத்தொகை.

34 நாளூ நன்னிலங் தென்பனையூர் வடகஞ்சனூர்
நீளநீள் சடையா னெல்லிக்காவு நெடுங்களம்
காளகண்ட னுறையுங் கடைமுடி கண்டியூர்
வேளூர்நாட் டுவேளூர் விளத்தூர் நாட்டுவிளத்தூரே.

## 162-தகட்டூர், 123-தக்களூர்.

### சுந்தரமூர்த்திநாயனார் திருநாட்டுத்தொகை.

35 வீழக்கா லனைக்கால் கொடுபாய்ந்த விலங்கலான்
கூழையே றுகந்தா னிடங்கொண்ட துங் கோவலூர்
தாழையூர் தகட்டூர் தக்களூர் தருமபுரம்
வாழைகாய்க் கும்வளர் மருகல்நாட்டு மருகலே.

## 127 - நாங்கூர், 169-திருச்சிற்றம்பலம்,

### சுந்தரமூர்த்திநாயனார் திருநாட்டுத்தொகை.

36 தேங்கூரும் திருச்சிற் றம்பலமும் சிராப்பள்ளி
பாங்கூரெங் கள்பிரானுறையுங் கடம்பந்துறை
பூங்கூரும் பரமன் பரஞ்சோதி பயிலுமூர்
நாங்கூர்நாட்டு நாங்கூர்நறையூர் நாட்டுநறையூரே.

---

# 4-வது அத்தியாயம்

## வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்.

### 8-துடையூர், 11-துறையூர், 33-துவையூர்

### 25-ஊற்றத்தூர்,

திருநாவுக்கரசுநாயனர் அடைவுத்தாண்டகம்.

37 பிறையூருஞ் சடைமுடிஎம் பெருமா னூர்
பெரும்பற்றப் புலியூரும் பேரா வூரு
நறையூரு நல்லூரு நல்லாற் றூரு
நாலூருஞ் சேற்றூருந் நாரை யூரும்
உறையூரு மோத்தூரு மூற்றத்தூரு
மளப்பூரோ மாம்புலியூ ரொற்றியூருந்
துறையூரு ந்துவையூருந் தோமூர் தானுந்
துடையூருந் தொழவிடர்க ளொடரா வன்றே.

### 12-பட்டியூர், 28-பெருவளப்பூர்,

சுந்தரமூர்த்தி நாயனர் ஊர்த்தொகை.

38 ஆரூ ரத்தாவை யாற்றாய் மேயவளப்பூ ரம்மானே
காரூர் பொழில்கள்புடை சூழ்புறவிற் கருகா வூரானே
பேரூ ருறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப் படுவாய் பாரூ ரம்மானே.

### 22-வடபேரூர்,

சுந்தரமூர்த்திநாயனர் இடையாற்றுத்தொகை.

39 கச்சையூர் காவங் கழுக்குன்றங் காரோணம்
பிச்சையூர் திரிவாள் கடவூர் வடபேரூர்
கச்சியூர் கச்சில் சிக்கநெய்த் தான மிழலை
பிச்சையூ ரெய்த மானிடை யாறிடை மருதே.

23-கொல்லி அறப்பள்ளி. 47-திண்ணியம் தேவன்குடி.
27-வது பதிகத்திலும்,

24-மாகாளேசுவரம் 20-வது பதிகத்திலும்,
32-வாளாடி புதுக்குடி 2-வது பதிகத்திலும்,
69-சேமேசுவரம் 7-வது பதிகத்திலும்,
39-மாதானம் பூவாளுர், 77-திருவேதகம் 5-வது பதிகத்திலும்,
40-லாலுகுடி 15-வது பதிகத்திலும்,
58-திருச்சடை 29-வது பதிகத்திலும் உள்ளன.

27. வேங்கனூர் திருநாவுக்கரசுநாயனர் க்ஷேத்திரக்கோவை.

40 வீழிமிழலை வெண்காடு வேங்கூர் வேதிகுடி
விஜயமங்கை வியலூ
ராழியகத் தியான்பள்ளி யண்ணு மலையாலங்
காடுமர தைப்பெரும்
பாழிபழ நம்பனந்தாள் பாதாளம்ப ராய்த்துறைப் பைஞ்ஞீ
பனங்காட் டூர்தண் [லி
காழிகட லைக்கா ரோணத்துங் கயிலாய நாதனையே
காண லாமே.

30-குறும்பலூர். சுந்தரமூர்த்திநாயனர் ஊர்த்தொகை.

41 கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் குழகா குற்றாலா
மங்குற் றிருவாய் வானோர் தலைவா வாய்மூர் மணவாளா
சங்கக் குழையார் செவியா வழகா வலியா வனலேந்திக்
கங்குற் புறங்காட் டாடி யடியார் கவலை களையாயே.

## 43-சென்னிவாய்க்கால்.

### சுந்தரமூர்த்திநாயனர் இடையாற்றுத்தொகை.

42 பேறனூர் பிறைச்சேன் னியினுன் பெருவேளூர்
தேறனூர் திருமா மகள்கோன் றிருமாலோன்
கூறனூர் குரங்கா டுதுறை திருக்கோவல்
ஏறனூ ரெய்தமா னிடையா றிடைமருதே.

## 56-நெற்குன்றம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் க்ஷேத்திரக்கோவை.

43 நெற்குன்ற மோத்தூர் கிறைநீர் மருக நெடுவாயில்
குறும்பலா நீடுதிரு
நற்குன்றம் வலம்புர நாகேச்சர நளிர்சோலை யுஞ்சேனை
மாகாளம் வாய்மூர்
கற்குன்ற மொன்றேந்தி மழைதடுத்த கடல்வண் ணனுமா
மலரோனுங் காணாச்
சொற்கென்றுந் தொலைவி லாதா னுறையுங் குடமூக்
கென்றுசொல்லிக் குலாவுமினே.

## 68-திங்களூர்:

சுந்தரமூர்த்திநாயனார் இடையாற்றுத்தொகை.

44 திங்களூர் திருவா திரையான் பட்டினமூர்
நங்களூர் நறையூர் நனிநா லிசைநாலூர்
தங்களூர் தமிழா னென்றுபா விக்கவல்ல
வெங்களூ ரெய்தமா னிடையா றிடைமருதே.

## 5-வது அத்தியாயம்

## வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்:

## 2-அணியண்ணாமலை:

திருநாவுக்கரசுநாயனார் திருநேரிசை.

45 ஓதிமா மலர்கள் தூவி உமையவள் பங்கா மிக்க
சோதியே துளங்கு மெண்டோட் சுடர்மழுப் படையி னானே
யாதியே யமரர் கோவே யணியணா மலையு ளானே
நீதியா னின்னை யல்லா னினையுமா நினைவி லேனே.

9-காஞ்சி கனறயாடி 7-வது பதிகத்திலும்,
17-எமப்பேரூர் 29-வது பதிகத்திலும்,
55-கோதிட்டைகுடி 29-வது பதிகத்திலும்,

24-வடகஞ்சனூர் 34-வது பதிகத்திலும்,
26-நல்லாற்றூர் 37-வது பதிகத்திலும்,
44-புவனகிரி 23-43-வது பதிகங்களிலும்,
47-திருவாமூர், முனைப்பாடி 52-நெல்வாயில் 2-ம் 24-வது பதிகத்தில் பாடிநான்கு துறைகளெட்டு என்பதில் நெல்வாயில் அறத்துறையு மென்று உள்ளன.

18-சித்தவடம்.

திருநாவுக்கரசுநாயனார் கெடிலவட வீரட்டானம்.

46 எத்தவடத் தினகாக மூருத்திரபட் டமிரண்டு
முத்துவடங் கண்டிகையு மூளத்தெழுமு விலைவேலும்
சித்தவட மும திகைச் சேணுயர்வீ ரட்டஞ் சூழ்ந்து
தத்துகெடி லப்புனலு முடையாரொ ருவர்தமர்நா
மஞ்சுவதி லாதொன்றுமில்லை யஞ்சவரு வதுமில்லை.

54-முதல் 60-வரையில ஏழுரெண்ற க்ஷதலங்கள்

திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக்கோவை,

47 கோடுங்கோளூ ரஞ்சைக்களஞ் செங்குன்றூர் கொங்கணங்
குன்றியூர் குரக்குக்காவு
நெடுங்களநன் னிலநெல்லிக் காவுகின்றி யூர்நீடூர்
நியம நல்லூ
ரிடும்பாவன மேழுமூரே ழூர்தோழு ரெறும்பியூ ரோரு
மேம கூடம்
கடம்பையிளங் கோயிறன்னி னுள்ளுங் கயிலாய நாதனையே
காண லாமே.

6-வது அத்தியாயம்

வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்

12-விரிஞ்சிபுரம், 51-திருவேட்டி 1-வது பதிகத்திலும்,
27-திருநின்றியூர் 31-வது பதிகத்திலும்.
43-எழுமூர் 47-வது பதிகத்திலும்,
55-நந்திவனம் 20-வது பதிகத்திலும்,

59-ஆலக்கோயில் 14-வது பதிகத்திலும்,
65-ருத்திரகோடி 5-வது பதிகத்திலும்,
66-மகாபலிபுரம் கடற்கரை 9-வது பதிகத்திலும்,
74-திண்டிவனம் 3-6-20-வதுபதிகங்களிலும்,
82-முதல் 92-வரையில 26-வதுபதிகத்தில் கச்சி பலதளி என்றதிலும்,
132-நற்குன்றம் 43-வது பதிகத்திலும் உள்ளன.

20-பழையனூர் திருவாலங்காட்டுத் தேவாரம்.

48 முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென்முலை யாளுமை பங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ் சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும் பரமா பழையனூர் மேய பரமா
அத்தா வாலங் காடாவுன் னடியார்க் கடியே னாவேனே.

## 35-பொன்னூர், 42-புரிசைப்பாக்கம், 76-நாட்டுப் புரிசை.

சுந்தரமூர்த்திநாயனார் நாட்டுத்தொகை தேவாரம்:

49 தென்னூர் கைம்மைத் திருச்சுழியல் திருக்கா னப்பேர்
பன்னூர் புக்குறை யும்பரமர்க் கிடம்பாய் ஞாலம்
மென்னூ ரெங்கள் பிரானுறை யுந்திருத்தேவனூர்
பொன்னூர் நாட்டுப் பொன்னூர் புரிசை நாட்டுப்புரிசையே

## 83 கச்சிமயானம்.

திருநாவுக்கரசுநாயனார் திருவினாத்தாண்டகம்,

50 மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சிமயா னத்தான்
வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்லனொரு வனல்லனோ ரூரனல்ல
னோருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாகக்
காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத் தனிவனிறை வனென்றெ
[ழுதிக்
காட்டொ ணாதே.

## 7-வது அத்தியாயம்.
## வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்.

19-நாகளேசுரம் 20-வது பதிகத்திலும்,
20-செம்பங்குடி 2-வது பதிகத்திலும்,
21-மணிக்கோவில் 14-வது பதிகத்திலும்,
22-மாதானம் 5-வது பதிகத்திலும்,
23-கொண்டல் 9-வது பதிகத்திலும்,
28-கஞ்சாறு 5-வது பதிகத்திலும்,
32-நாங்கூர் 36-வது பதிகத்திலும்,
55-சாத்தங்குடி 22-வது பதிகத்திலும்,
67-கடம்பூர் இளங்கோவில் 47-வது பதிகத்திலும்,
76-விளத்தொட்டி 13-வது பதிகத்திலும், உள்ளன.

### 51. நெய்தல்வாயில் திருநாவுக்கரசுநாயனர் தாண்டகம்.

51 கடுவாயர் தமைநீக்கி யென்னையாட்கொள்
கண்ணுதலோ னன்னுமிட மண்ணல்வாயில்
நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல்வாயில்
நிகழ்முல்லை வாயிலொடு நாழல்வாயில்
மடுவார்தென் மதுரைநக ராலவாயில்
மறிகடல்சூழ் புனவாயில் மாடநீடு
குடவாயில் குணவாயி லானவெல்லாம்
புகுவாரைக் கொடுவினைகள் கூடாவன்றே.

## 8-வது அத்தியாயம்.
## வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்.

37-கொடுங்ளூர், 69-கொங்கணம், 47-வதுபதிகத்திலும்,
95-பேளூர், 39-வது பதிகத்திலும் உள்ளன.
12-மகேந்திரமலை, 67-சையபருவதம் 87-நீலகிரி.

### திருநாவுக்கரசுநாயனர் தாண்டகம்.

52 கந்த மாதனங் கயிலைமலை கேதாரங் காளத்தி
கழுக்குன்றங் கண்ணாண்ண
மந்தமாம் பொழிற்சாரல் வடபர்ப்பத மயேந்திரமா
மலைநீல மேமகூடம்

விந்தமா மலைவேதஞ் சையமிக்க
வியன்பொதிய மலைமேரு உதயமத்த
மிந்துசே கரனுறையு மலைகண்மற்று
மேத்துவோ மிடர்கெடநின் றேத்துவோமே.

## 9-வது அத்தியாயம்.

## வைப்புஸ்தலங்களின் பதிகங்கள்.

**5-ஸ்ரீகாசி 12-13-வது பதிகங்களிலும்,**

**149-உஜ்ஜியினிமாகாளம் 43-வது பதிகத்திலும்,**

**154-விந்தமலை, 174-அஸ்தம், 336-உதயகிரி, 309-மகேந்திரம், 374-மேருகிரி ஐந்து ஸ்தலங்களும் 52-வது பதிகத்திலும்,**

**187-சோமநாத், 373-சிவலோகம் 7-வது பதிகத்திலும்,**

**202-விராடபுரம் 13-வது பதிகத்திலும்,**

**259-புவனேசுவரம் 23-பதிகத்திலும்,**

**350-சித்தவடம் 46-வது பதிகத்திலும் உள்ளன.**

## 319-ஹரிச்சந்திரம்.

### திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகம்.

53 ஹரிச்சந்தி ரத்துள்ளா ரம்பருள்ளா ரரிபிரம ரிந்திரர்கு
மரிய ரானார்
புரிச்சந்தி ரத்துள்ளார் போகத்துள்ளார் பொருப்பரயன்
மகளோடு
விருப்ப ராகி
யெரிச்சந்தி வேட்குமிடத் தாமேம கூடத்தார் பாடத்தே
னிசையார் கீதர்
விரிச்சங்கை யெரிக்கொண்டங் காடும்வே டர்வீழி
மிழலையே மேவினாரே.

---

## இப்புஸ்தகத்திலுள்ள பதிகங்களில் வைப்பாயிருக்கும் ஸ்தலங்களில் தெரியாதவைகளின் பதிக நெம்பரும், பெயரும்.

1 சீக்காவி
2 மாணிகுடி
2 புற்குடி
3 இடைத்தானம்
3 ஏயீசுவரம்
5 விவீசுவரம்
6 வெள்ளடை
6 கூழையூர்
6 அசோகந்தி
9 நாட்டுக்கொண்டல்
9 நாட்டுக்குறுக்கை
10 பிடவூர்
10 பல்வந்திரீ
10 அவ்வந்திரை
10 மணிமுத்தம்
12 மாட்டூர்
12 குணவாயில்
13 மந்தாரம்
14 கரக்கோவில்
16 கிள்ளிகுடி
17 கோட்டுக்காடு
17 காளிங்கம்
21 மத்தங்குடி
20 குக்குடேசுவரம்
20 ஆடகேசுவரம்
26 எச்சில்
26 இரையான்சேரி
29 சாலைக்குடி
29 ஏரிடவை
31 கூரூர்
32 வளைகுளம்
32 இடைக்குளம்
32 திருக்குளம்

33 தேசனூர்
33 பாசனூர்
33 நாசனூர்
34 நாட்டுவிளத்தூர்
35 தாழையூர்
35 நாட்டுமருகல்
36 பாங்கூர்
36 பூங்கூர்
36 நாட்டுநறையூர்
37 பிறையூர்
37 பேராவூர்
37 தோமூர்
38 பாரூர்
39 கச்சையூர்
39 காவம்
42 பேறனூர்
42 கூறனூர்
42 ஏறனூர்
43 நெடுவாயில்
44 திருவாதிரையான் பட்டினம்
44 நங்களூர்
44 தங்களூர்
47 தோழூர்
49 தென்னூர்
49 பன்னூர்
49 புக்குறை
49 தேவனூர்
51 அண்ணல் வாயில்
51 நாழல்வாயில்
52 மந்தமாம்பொழில்
52 ஏமகூடம்
53 புரிச்சந்திரம்

ஆக 66.

## இப்புஸ்தகத்தி லெழுதாத பதிகங்களிலுள்ள வைப்புஸ்தலங்களில் தெரியாதவைகள்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் க்ஷேத்திரக்கோவை.

1-மத்திமுத்தம் 2-சிறைப்பள்ளி 3-இடைப்பள்ளி
4-அணியார் 5-போற்றூர் 6-காற்றூர்

திருநாவுக்கரசுநாயனார் க்ஷேத்திரக்கோவை.

7-காம்பீலி, 8-பொய்கை, 9-நிலமலி.

திருநாவுக்கரசுநாயனார் திருவதிகை திருத்தாண்டகம்.

10-மாநதி, 11-மான்பட்டி, 12-எகுளீசுவரம், 13-கருமாரி, 14-தெற்கேரு, 15-மாநிருபம்.

திருநாவுக்கரசு நாயனார் திருவாரூர்த் திருத்தாண்டகம்.

16-தேரூர், 17-மாலூர், 18-காரூர்.

திருநாவுக்கரசுநாயனார் அடைவுத் திருத்தாண்டகம்.

19-கலவஞ்சாரல், 20-பொருப்பள்ளி, 21-சிவப்பள்ளி, 22-தவப்பள்ளி, 23-பரப்பள்ளி.

சுந்தரமூர்த்திநாயனார் ஊர்த்தொகை.

24-பாட்டூர், 25-நிறைக்காடு, 26-மிறைக்காடு, 27-இறைக்காடு

சுந்தரமூர்த்திநாயனார் திருநாட்டுத்தொகை.

28-மூலனூர், 29-முதல்வனூர், 30-நாலனூர், 31-நம்பனூர் 32-வேலனூர், 33-கூற்றுவெண்ணி.

சுந்தரமூர்த்திநாயனார் இடையாற்றுத்தொகை.

34-முந்தையூர், 35-பந்தையூர், 36-ஈந்தையூர், 37-கடங்களூர், 38-காரிகரை, 39-விடங்களூர், 40-நிறையனூர், 41-பிறையனூர், 42-மறையனூர், 43-பெருமூர் வைப்புஸ்தலங்களில் தெரியாதவை. 109-சிவஸ்தலங்கள்.

---